# ஆய்வு நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் பொ.மா.பழனிசாமி**

தமிழ் இணைப்பேராசிரியர் & தலைவர்,

நல்லமுத்துக்கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி (தன்னாட்சி),

பொள்ளாச்சி – 642 001.

**"சங்க அக இலக்கியங்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்"** என்னும் பொருள் குறித்தமைந்த இவ்ஆய்வேடு **2011-2016** ஆம் கல்வி ஆண்டுகளில் பாரதியார் பல்கலைக்கழகத்திற்கு **செ.நித்யா** அவர்களால் பகுதிநேர ஆய்வாக **நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரித் தமிழ்த்துறையில்** என் மேற்பார்வையில், முனைவர் பட்டத்திற்காகத் (பிஎச்.டி.,) தன்னிலையாக ஆக்கப்பட்டது என்று சான்றளிக்கிறேன். இதற்கு முன் இப்பொருள் குறித்து எந்த பல்கலைக்கழகத்திலும் எந்த ஆய்வாளருக்கும் எவ்வகை ஆராய்ச்சிப் பட்டமும் வழங்கப்படவில்லை என உறுதி கூறுகிறேன்.

பொள்ளாச்சி

-06-2016

**(பொ.மா.பழனிசாமி)**

**ஆய்வுநெறியாளர்**

**தமிழ்த்துறைத் தலைவர்** **முதல்வர்**

# ஆய்வாளர் உறுதிமொழி

**செ.நித்யா,**

முனைவர் பட்ட பகுதிநேர ஆய்வாளர்,

தமிழ்த்துறை,

நல்லமுத்துக்கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி (தன்னாட்சி),

பொள்ளாச்சி – 642 001.

பாரதியார் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக அளிக்கப்பெறும் **“சங்க அக இலக்கியங்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்”** என்னும் பொருள் குறித்தமைந்த இவ்ஆய்வேடு, 2011-2016 ஆம் கல்வியாண்டுகளில் பகுதிநேர ஆய்வாக **நல்லமுத்துக்கவுண்டர் மகாலிங்கம் கல்லூரித் தமிழ்த்துறை** இணைப்பேராசிரியர்&தலைவர் **முனைவர் பொ.மா.பழனிசாமி** அவர்களை நெறியாளராகக் கொண்டு என் சொந்த முயற்சியில் உருவான ஆய்வுப்படைப்பாகும், இதற்கு முன் இப்பொருள் குறித்து எந்தப் பல்கலைக்கழகத்திலும் எந்த ஆய்வாளருக்கும் எவ்வகை ஆராய்ச்சிப் பட்டமும் வழங்கப்படவில்லை என உறுதி கூறுகிறேன்.

பொள்ளாச்சி

-06-2016

**(செ.நித்யா)**

**ஆய்வாளர்**

**ஒப்புதல் கையொப்பம்**

**(பொ.மா.பழனிசாமி)** **தமிழ்த்துறைத் தலைவர்**

**ஆய்வுநெறியாளர்**

## நன்றியுரை

**"சங்க அக இலக்கியங்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்"** என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள எனக்கு அனுமதி அளித்த **கோவை பாரதியார் பல்கலைக்கழகத்திற்கும், பொள்ளாச்சி நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி** நிர்வாகக் குழுவினர் அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வினை மேற்கொள்ள வாய்ப்பினையும், வசதிகளையும் செய்து கொடுத்த கல்லூரியின் மேனாள் முதல்வர் **முனைவர் பு.பத்ரி நாராயணன்** அவர்களுக்கும் இந்நாள் முதல்வர்(பொ) **முனைவர் எஸ்.பெஞ்சமின்சிறிஸ்டோபர்** அவர்களுக்கும் எனது நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வைச் சிறப்பாகச் செய்ய இன்முகத்துடன் ஆய்வு நுட்பங்களை விளக்கி, ஐயங்களைப் போக்கி, தாயன்போடு ஊக்கப்படுத்தி, ஆய்வுக்குரிய நூல்களை வழங்கிச் சரியாக வழி நடத்திய எனது ஆய்வு நெறியாளர் தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் பொ.மா.பழனிசாமி** ஐயா அவர்களுக்கு எனது உளமார்ந்த நன்றி என்றும் உரியது.

ஆய்வு தொடர்பான ஆலோசனைகளையும் நூல்களையும் வழங்கி உதவிய கல்லூரியின் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் **முனைவர் ச.முத்துவேல், முனைவர் பே.மகேஸ்வரி, முனைவர் ப.வடிவேல்** உள்ளிட்ட அனைவருக்கும், நண்பர்களாம் ஆய்வு மாணவர்களுக்கும் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வுக்கு உறுதுணையாக இருந்த என் கணவருக்கும், என் குடும்பத்தினர்களுக்கும் உறவினர்கள் அனைவருக்கும் நன்றிகள் பல.

இவ்வாய்வேட்டைச் சிறந்த முறையில் கணினித் தட்டச்சுச் செய்தளித்த தோழனும் சகோதரனுமான **பொ.கனகராஜ்**க்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**(செ.நித்யா)**

# பொருளடக்கம்

# முன்னுரை

சங்கத் தமிழர் தாங்கள் வாழ்ந்த நிலப்பகுதியை இயற்கையின் சூழலுக்கு ஏற்பவே வகுத்துக் கொண்டனர். மலைப் பகுதியைக் ‘குறிஞ்சி’ என்றும், காட்டுப் பகுதியை ‘முல்லை’ என்றும், வயல் பகுதியை ‘மருதம்’ என்றும், கடற்கரைப் பகுதியை ‘நெய்தல்’ என்றும் பிரித்தனர். கோடைக் காலத்தில் வளமிழந்த முல்லையும், குறிஞ்சியும் ‘பாலை’ எனப்பட்டன. இந்த இடங்களும் இவற்றிற்கு ஏற்ற காலங்களும் ‘முதல் பொருள்கள்’ என்று சொல்லப்பட்டன. சூழ்நிலையை உருவாக்கும் பொருட்கள் ‘கருப்பொருள்கள்’ என்று கூறப்பட்டன. இவற்றுக்கு உரிய மனித உணர்வுகள் ‘உரிப்பொருள்கள்’ என்று உரைக்கப்பட்டன.

இயற்கையை ஒட்டிய முதல், கருப்பொருள்களுக்கேற்ப உரிப்பொருள் சிறப்பதனை நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில் நுண்மான் நுழை புலத்துடன் கூறியுள்ளார். தலைவியும் தலைவனும் களவு வாழ்வில் தனியாகச் சந்திக்க வாய்ப்பான மறைவிடங்கள் அனைவரும் உறங்கும் நள்ளிருள் யாமம், மழை பெய்யும் இரவு, காட்டு விலங்குகள் துணையுடன் இன்பம் நுகரும் சூழல் ஆகியவைக் குறிஞ்சியில் புணர்ச்சிக்குரிய காதலரின் இன்ப வாழ்வை மிகுதிப்படுத்தும். இவ்வாறே பிற திணைகளுக்குரிய உரிப் பொருள்களுக்குப் பொருத்தமாக முதல், கருப்பொருட்கள் இயற்கைச் சூழல்கள் விளக்கப் பெறுகின்றன. அத்தகைய கருப்பொருட்கள் சங்க இலக்கிய அகப் பாடல்களின் வழி புலப்படுத்துகின்ற கருத்தை விளக்கிக் கூறுவதே இவ்வாய்வாக அமைகின்றது.

## ஆய்வு நோக்கம்

சங்க அக இலக்கியங்களில் பதினான்கு வகையான கருப்பொருள்களை அடிப்படையாகக் கொண்டு திணைகளின் சூழல்களை வெளிக் கொணர்வதே இவ்வாய்வின் நோக்கமாக அமைகின்றது.

## ஆய்வுப்பொருள்

சங்க அக இலக்கியங்களில் எண்ணற்ற செய்திகள் கூறப்படுகின்றன. அதில் கருப்பொருளை அடிப்படையாகக் கொண்டு எச்செய்திகள் விளக்கப்படுகின்றன என்பதை ஆய்வு செய்யும் நோக்கில், **“சங்க அக இலக்கியங்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்”** என்பது இவ்வாய்வின் பொருளாக அமைகின்றது.

## கருதுகோள்

சங்க அக இலக்கியத்தில் கருப்பொருள்களின் வழியில் தான் சூழல்கள் விளக்கப்படுகின்றன என நிறுவுவதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வு எல்லை**

சங்க இலக்கிய நூல்களில் அக நூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய ஐந்து நூல்களும் இவ்வாய்விற்கு எல்லைகளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு ஆதாரங்கள்**

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய ஐந்து நூல்களும் முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன. மேலும் இவ்வாய்விற்குத் துணைநின்ற இலக்கிய நூல்கள், அகராதிகள், ஆய்வேடுகள், இணையதளங்கள், இதழ்கள் ஆகியவை துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வு முன்னோடி**

செ.நித்யா அவர்களின் **"கலித்தொகையில் கருப்பொருள் புலப்பாட்டுத்திறன்"** என்ற பாரதியார் பல்கலைக்கழக ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு (2009) ஆய்வு முன்னோடியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**ஆய்வு அணுகுமுறைகள்**

சங்க அக இலக்கியங்களில் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ள பாடல் கருத்துக்களின் அடிப்படையில் பகுப்பாய்வு அணுகுமுறையும், விளக்கிக் கூறுவதில் விளக்கமுறை அணுகுமுறையும் ஆய்வில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வுப் பகுப்புமுறை**

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாகக் கீழ்க்காணும் ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

இயல் 1: குறிஞ்சித்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்.

இயல் 2: முல்லைத்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்.

இயல் 3: மருதத்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்.

இயல் 4: நெய்தல்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்.

இயல் 5: பாலைத்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்.

**முன்னுரை**

இப்பகுதியில் சங்க அக இலக்கியத்தில் கருப்பொருள் புலப்பாட்டுத்திறன் என்ற பொருண்மையில் அமைந்த இவ்வாய்வில் ஆய்வு நோக்கம், ஆய்வுப் பொருள், கருதுகோள், ஆய்வு எல்லை, ஆய்வு ஆதாரங்கள், ஆய்வு முன்னோடி, ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப் பகுப்பு முறைகள் ஆகியவைக் குறித்து விளக்கப்படுகின்றன.

**இயல் 1: குறிஞ்சித்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்.**

குறிஞ்சித் திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன் எனும் தலைப்பிலமைந்த இவ்வியலில் தலைவனின் செயல், தினைப்புனம், இறைவன் வழிபாடு, மலையின் காட்சி, திருமணம், தலைவியின் அழகு நலம், முற்றம், வள்ளைப்பாட்டு, உவமைகள், தந்தையின் ஒப்புதல், சுனை, இரவுக்குறி, தலைவியின் செயல், சிறுகுடி, தலைவியின் வருத்தம், தலைவன் சூடியவை, தலைவன் வருகை, தலைவனின் வீரம், வெள்ளம், பகற்குறி, காவலர், சூரர மகளிரின் செயல், தலைவன் சூடியவை, தலைவனின் தோற்றம், வரலாற்றுச் செய்திகள், முன்பனிக் காலம் போன்றவைகள் விளக்கப்படுகின்றன.

மேலும் வெறியாடுகளம், இற்செறிவு, குரவைக்கூத்து, தலைவன் சென்றகாடு, ஆற்றுவழி, புனங்காவல், தலைவனின் மார்பு, மணநாள், நீர்த்துறை, சிற்றூர், மாலைக் காலம், தோழிகூற்று, மடலேறுதல், குறத்தியின் ஊர், அறுவடைநாள், தலைவனின் குரல், முன்றில், தோழி, தலைவியின் தந்தை செயல்கள் போன்ற பின்புலச் செய்திகள் விளக்கப்படுகின்றன.

**இயல் 2: முல்லைத்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்.**

முல்லைத் திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன் எனும் இவ்வியலில் தலைவன் கூற்று, முல்லை நிலம், பூவிற்பவள், கார்காலம், தலைவியின் அழகுநலம், காட்டுப்பகுதி, மாலைநேரம், ஒழுக்கச் செயல், உவமைகள், மழைக்காலம், தலைவன் கூற்று, தலைவியின் ஊர், குறித்த பருவம், பார்ப்பன மகளிர், மூதூர், தலைவன் சூடியது, தீங்குழல், மழைப்பொலிவு, வரலாற்றுச் செய்திகள், தலைவன் வரவு, தலைவி தலைவனின் அன்பு போன்றவைகள் விளக்கப்படுகின்றன. மேலும் வீரர், தலைவனின் ஊர், தேரைச் செலுத்துதல், கோவலர், தலைவி அணிந்தது, வாடை, வம்பமாரி, முன்பனிக் காலம், பாணனின் செயல், சிறுமகள் சூடியவை, பருவ வருகை, தலைவன் சென்ற வழி, ஆயரிளைஞர் சூடியவை, தெய்வ வழிபாடு, தோழி கூற்று, சோலை, பெண்கள் சூடியவை, பொதுவர்கள் சூடியவை, தொழுவம், ஏறுதழுவுதல் போன்ற பின்புலச் செய்திகள் இதில் ஆராயப்படுகின்றன.

**இயல் 3: மருதத்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்.**

மருதத் திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன் எனும் இவ்வியலில் தலைவனின் ஊர், தலைவியின் அழகு நலம், உவமைகள், தலைவனின் சிறப்பு, வாடைக்காலம், மாலைக்காலம், பரத்தையின் ஊர், தலைவியின் ஊர், தலைவன் வரவு, தலைவன் அணிந்தது, வரலாற்றுச் செய்திகள், பகற்குறி, தலைவன் செயல், பரத்தையர் அழகுநலம், தலைவன் தலைவியின் நிலை, தலைவனின் அன்பு மாற்றம், தலைவனின் முன்வாழ்க்கை, மகனின் அழகு நலம் போன்றவைகள் ஆராயப்படுகின்றன.

மேலும், தலைவியின் ஆடை, தழையாடை, சூள், தலைவனின் தேர், விருந்தினர் வருகை, விறலி, குயவன், பரண், பாணன், வாயில் மறுத்தல், தலைவன் எழுதிய தொய்யில், இளவேனிற் காலம், கூனியின் வடிவு, குறளின் வடிவம், காடைப்போர், தலைவியின் வேண்டுதல், தோழியர் வேண்டுதல், தலைவியின் கூற்று, பசலை உற்றது, தலைவியின் வருத்தம், தலைவன் பிரிவு, நீரின் மாற்றம், தலைவியின் மாலை, வண்டினம் மொய்த்தல், தலைவனின் உணவு, நாரையின் செயல், ஊசல், பரத்தையின் தாய் போன்ற பின்புலச் செய்திகளும் ஆராயப்படுகின்றன.

**இயல் 4: நெய்தல்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்.**

நெய்தல்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத்திறன் எனும் இவ்வியலில் தலைவனின் தேர், தலைவனின் ஊர், பசலை நோய், மாலைப் பொழுது, தலைவி நீராடல், தலைவியின் செயல், அலர், பரத்தையின் தோற்றம், நீர்த்துறை, உவமைகள், தலைவியின் ஊர், தலைவியின் அழகு நலம், வரலாற்றுச் செய்திகள், தலைவன் அணிந்தவை, காலைப்பொழுது, மகளிர் செயல், தலைவன் வருகை, தலைவியின் வருத்தம், பறவைகள் அன்பு, கூதிர்க் காலம், தோழிகூற்று, மாலைக் காலம், தனிமைத் துயர், தமையர் வருகை, இரவுப் பொழுது, சோலை, தாய் தந்தை செயல் போன்றவைகள் விளக்கப்படுகின்றன.

மேலும், குறியிடம், பசலை, தலைவன் கடந்து வருதல், பொதுமகளிர், பாணரின் பார்வை, கடற்கரை, கானல் பகுதி, தலைவனின் குதிரை, காப்பு, தலைவி ஊசலாடுதல், நண்டின் வெட்கம், தலைவன் தலைவி புணர்வு, வரைவு கடாதல், மடலில் சூட்டியவை, தலைவி அளித்தவை, தலைவன் கூற்று, வெயில் காலம், தலைவனின் வல்லமை, படுக்கை, தலைவன் செல்லும் வழி, சுரத்தின் இயல்பு, காட்டு வழியின் இயல்பு, தலைவி கூற்று, பாக்கத்தின் இயல்பு, கூதிர்ப்பருவம், தலைவியின் இல்லம், புன்னையின் சிறப்பு, உமணர் வாழ்வு, வரைவு வேண்டுதல், மாலை குட்டுவனின் சிறப்பு போன்ற பின்புலச் செய்திகள் இவ்வியலின் கண் ஆராயப்படுகின்றன.

**இயல் 5: பாலைத்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்.**

பாலைத்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன் எனும் இவ்வியலில் காட்டின் நிலை, சீறூர், கார்கால வருகை, பாலை நிலம், தலைவியின் அழகு நலம், வரலாற்றுச் செய்திகள், விடியற்காலை, உவமைகள், தலைவியின் வீடு, குன்று, தலைவியின் ஊர், சிறிய பாதை, மாலைப்பொழுது, தலைவியின் வருத்தம், சாய்க்காடு, உடன்போக்கு, தலைவியின் ஊர், முன்பனிக்காலம், இளவேனிற் காலம், முதுவேனிற்காலம், போன்றவைகள் ஆராயப்படுகின்றன.

மேலும், கங்கை, தலைவியின் மனை, தலைவனின் மார்பு, அன்புநிலை, தோழிகூற்று, தலைவியின் துணை, கள்வரின் தன்மை, விளையாட்டுப் பாவை, கார்காலம், பனிக்காலம், நற்றாய் கூற்று, வாடைக் காற்று, பசலை, தலைவியின் காடு, தலைவன் செலவு ஒழிதல், தலைவி கூற்று, தலைவனின் வீரம், வாடை, தலைவனின் தன்மை, தலைவர் பிரிவு, காலைப்பொழுது, சோலை, தலைவனின் வருத்தம், வெறியாடு களம், செவிலியின் துன்பம், நற்றாயின் செயல், அம்பலம், பாக்கம், உப்பு வாணிகர், விடியல், தலைவி அச்சம் போன்ற பின்புலச் செய்திகள் இவ்வியலின் கண் ஆராயப்படுகின்றன.

**முடிவுரை**

சங்க அக இலக்கியத்தில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன் என்னும் ஆய்வின் முடிவாக மேற்கண்ட ஐந்து இயல்களிலும் ஆராய்ந்து கண்டறியப்பட்ட செய்திகள் முடிவுரையாகத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

ஆய்வேட்டின் இறுதியில் ஆய்விற்குத் துணைநின்ற நூல்கள் அகரவரிசையில் தொகுத்துத்தரப்பட்டுள்ளன. ஆய்வேட்டில் எடுத்தாளப்பட்டுள்ள மேற்கோள்கள் உரிய இடத்தில் அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ளன. இத்துடன் பின்னிணைப்புகளும் இணைக்கப்பட்டுள்ளன.

## இயல் 1

## குறிஞ்சித்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்.

### குறிஞ்சி நிலம்

குறிஞ்சி என்றால் குறுகுதல், அணுகுதல், நெருங்குதல், சேர்தல், அடைதல் என்பது கருத்து. தலைவியைத் தலைவன் கண்டு முதலில் அணுகி நட்புறுதலே குறிஞ்சி என்ற ஒழுக்கப் பெயராயிற்று. குறிஞ்சி நிலத்திலே நிகழும் ஒழுக்கத்தைப் பற்றி உரைப்பது. மக்கள் வாழும் மலையும், மலைச் சாரலும் குறிஞ்சி நிலம். சேயோன் என்ற முருகன் குறிஞ்சி நிலத்தின் தெய்வம்.

கண்ணுக்கினிய காட்சிகள் நிறைந்த மலையிலோ, மலைச் சாரலிலோதான் முதலில் தலைவன் தலைவியின் சந்திப்பு ஏற்படும் இருவரும் ஒருமனப்பட்டுக் கணவன் மனைவிகளாய் இணைந்து வாழ்வார்கள். இவர்களுடைய சந்திப்பைப் பற்றியும் இதற்கான காரணங்களைப் பற்றியும் எடுத்துரைப்பதே குறிஞ்சித் திணை. குறிஞ்சியொழுக்கம் தம்பதிகளாதல். இத்தகைய குறிஞ்சித்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறனானது எவ்வாறு புலப்படுத்தப்படுகின்றது என்பது இவ்வியல்வழி எடுத்துரைக்கப்படுகின்றது.

### தலைவனின் செயல்

அரும்புகள் முதிர்ந்த வேங்கை மரத்தின் அசையும் மென்மையான கிளைகள் அழகு மிகுந்து புள்ளிகளையுடைய மயில் ஆடும் சோலை. அதன் பக்கத்தில் பசிய தாளினையுடைய சிவந்த தினையின் வளைந்த கதிர்களை உடைய பெரிய கொல்லைக்கு வரும் சிவந்த வரிகளையுடைய கிளிகளைத் தலைவியுடன் இருந்து ஓட்டிய தலைவன், எனத் தலைவனின் செயலினை விளக்க. **"வேங்கை, மயில், செந்தினை, கிளி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"அரும்பு முதிர் வேங்கை அலங்கல் மென்சினை; அவிர்பொறி மஞ்ஞை ஆடும் சோலை; பைந்தாட் செந்தினைக் கொடுங்குரல் வியன்புனம்; செந்தார்க் கிள்ளை நம்மொடு கடிந்தோன்"** (அகம்: பா-242; வரி-1,4-6) என்ற இப்பாடல் வரிகள் விளக்குகின்றன.

வலிமை வாய்ந்த யானையின் அடியைத் தேடுபவனாகத் தலைவன் வந்தான் எனத் தலைவனின் செயலை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"வயமான் அடித் தேர்வான் போல, தொடை மாண்ட"** (கலி; பா-37; வ-2) என்ற இப்பாடல் வரி விளக்குகின்றது.

தாமரை போன்ற கண்களை உடைய தலைவி நீரோடு சென்றாள். தலைவியிடம் உண்டான அருளால் சுரபுன்னை மலரால் ஆன மாலையைச் சூடிய தலைவன்

தலைவியைக் காத்தலை விளக்க, **"தாமரை, சுரபுன்னை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **"தாமரைக்கண் புதைத்து அஞ்சித் தளர்ந்து அதனோடு ஒழுகலான்; நீள் நாக நறுந்தண் தார் தயங்கப் பொய்ந்து அருளினால்"** (கலி: பா-39; வரி-2-3) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

வேங்கைக் கண்ணி அணிந்தவர் தூங்கும் களிற்றை எழுப்புபவர் நம் தலைவர், எனத்தலைவரின் செயலினை விளக்க, **"வேங்கை, களிறு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **"வேங்கைக் கண்ணியர் எருது எறிகளமர்; துஞ்சு களிறு எடுப்பும் தம் பெருங்கல் நாட்டே"** (நல்; பா-125; வரி-9-12) ஆகிய பாடல் வரிகள் விளக்குகின்றன.

**தினைப்புனம்**

பொன் போன்ற வேங்கை மலரால் ஆன மாலைகளைச் சூடி தலைவியான குறமகள் காக்கும் தினைப்புனம், எனத் தினைப்புனத்தை விளக்க, **"வேங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை. **"மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சி"** (அகம்; பா-188; வ-9) என்ற வரி விளக்குகின்றது.

அழகிய வில்லைப் போன்ற பசிய மாலையையும் சிவந்த வாயையும் உடைய சிறுகிளி தினையினைக் கொய்தது எனத் தினையானது முற்றியதனை விளக்க, **"கிளி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை, **"செவ்வாய்ச் சிறுகிளி சிதைய வாங்கி"** (அகம்; பா-192; வ-5) என்ற வரி விளக்குகின்றது.

கரும்பைப் போன்று திரண்டு அழகையுடைய கதிரையுடைய தினையைக் கிளிகள் வந்த கொய்து போகும்படி தினை முற்றியதனை விளக்க **"கிளி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை **"கிளி பட விளைந்தமை அறிந்தும் செல்க என"** (அகம்; பா-302; வ-11) என இவ்வரியானது விளக்குகின்றது

தினை முக்கிய உணவாக விளங்கியதால் தினைப்புனக் காவலும் முக்கியத் தொழிலாயிற்று என்பதை விளக்கும் சான்றாவது பின்வருமாறு, ***"குறிஞ்சி நில மக்களின் உணவுப் பொருட்கள் அரியல், உப்பு, கள், தேறல், தேன், நறை, நறவு, பால், பிரசம், பிழி, தினை, பழங்கள் போன்ற முக்கிய உணவுப்பொருட்களாகும்."*** (இரா. செகதீசன்; தொல்காப்பியப் பொருளதிகார வழி அகநானூறு ஓர் ஆய்வு; ப-143) என்பதை இவ்வரிகள் விளக்கி நிற்கின்றன.

ஆண்யானை நிமிர்ந்தாலும் எட்ட முடியாத மலைக்குகையின் மேல் இருப்பதான பரணில் தினையில் படியும் கிளி எனத் தினைப்புனத்தினை விளக்க, **“களிறு, கிளி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“களிறு அணந்து எய்தாக் கல் முகை இதணத்து; சிறு தினைப் படுகிளி எம்மொடு ஓப்பி”** (அகம்; பா-308; வரி-9-10) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

சிவந்த வாயை உடைய பசிய கிளிகள் அந்தப் புனத்தைப் பிரிந்து போகாதன எனத் தினைப் புனத்தினை விளக்க, **“கிளி”** எனும் கருப்பொருள் விளக்குகின்றது என்பதனை உணர்த்தும் பாடல் வரி, **“அளியதாமே செவ்வாய்ப் பைங்கிளி”** (ஐ.நூறு; பா-284; வ-1) ஆகும்.

பல கதிர்களையுடைய தினைப்புனத்தே பரவிப் படியும் கிளிகள், எனத் தினைப்புனத்தை விளக்க, **“கிளி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதனை, **“பல்குரல் ஏனல் பாத்தருங் கிளியே”** (ஐ.நூறு; பா-288; வ-4) என இப்பாடல் வரியானது விளக்குகின்றது.

தினைப்புனத்து இனமான கிளிகள் தினைப் புனத்தில் வந்து உண்ணாமல் கிளியை ஓட்டிப் பாதுகாக்கும் தினைப் புனத்தினை விளக்க **“கிளி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை, **“இனக் கிளியாம் கடிந்து ஓம்பும் புனத்து அயல்”** (கலி; பா-37; வ-13) என்ற வரி விளக்குகின்றது.

சிறிய தினையினது கதிரைக் கிளி ஒடித்து உண்ணும் தினைப்புனத்தை விளக்க, **“கிளி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதனை, **“கிளி குறைத்து உண்ட கூழை இருவி”** (குறுந்; பா-133; வ-2) என்ற இப்பாடல் வரியானது விளக்குகின்றது.

யாமரங்களை வெட்டி அவற்றைச் சுட்ட காட்டு வழியில் கரும்பைப் போன்ற அடியை உடையனவாகிய பசிய காம்பை உடைய சிவந்த தினையினது மடமை மிக்க பெண்யானையின் வளைந்த கையைப் போன்றனவாகிய பாழ் நிரம்பிய கதிர்க் குலைகளிலே வந்து படியும் கிளிகளை ஓட்டுவதற்கான தினைப் புனத்தினை விளக்க, **“யா, பிடி, கிளி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை. **“யாஅம் கொன்ற மரம் சுட்ட இயவில்; கரும்பு மருள் முதல பைந்தாட் செந்தினை; மடப்பிடித் தடக்கை அன்ன பால் வார்பு; படுகிளி கடிகம் சேறும் அடுபோர்”** (குறுந்; பா-198; வ-1-3,5) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

வேங்கை மரத்தின் மலர்கள் உதிரும்படியான பெரிய மலையிலுள்ள கூட்டிலிருக்கும் மயில் அறியவும் தினையின் விளைந்த கதிர்களைப் பசிய முதுகையுடைய கிளிகள் பிற

உயிர்கள் அறியாது என்று தின்னும் தினைப்புனம், எனத் தினைப் புனத்தினை விளக்க, **“வேங்கை, மயில், கிளி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“வேங்கை மரவீஉ கும் ஓங்கு மலைக் கட்சி; மயில் அறிபு அறியா மன்னோ; பயில் குரல் கவரும் பைம் புறக் கிளியே”** (நற்; பா-13; வரி-7-9) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

வளைந்த தினைக் கதிர்களைக் கொய்த சிவந்த வாயையுடைய பசிய கிளிகள் உண்ணும் தினைப்புனத்தை விளக்க, **“கிளி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“கொடுங்குரற் குறைத்த செவ்வாய்ப் பைங்கிளி”** (நற்; பா-102; வ-1) என்ற வரி விளக்குகின்றது.

சிவந்த வாயையுடைய கிளிக்கூட்டம் கொத்தித் தின்னாதபடி ஓட்டும் தினைப்புனம், எனத் தினைப் புனத்தினை விளக்க, **“கிளி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“செவ்வாய்ப் பாசினம் கடீஇயர் கொடிச்சி”** (நற்; பா-134; வ-4) எனும் பாடல் வரியானது விளக்குகின்றது.

சிறிய தினையின் பெரிய கதிர்களைச் சிவந்த வாயையுடைய பசிய கிளிகள் கவர்ந்து உண்ணும் தினைப்புனம், எனத் தினைப்புனத்தினை விளக்க, **“கிளி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“செவ்வாய்ப் பைங்கிளி கவர நீ மற்று”** (நற்; பா-147; வ-3) எனும் பாடல் வரியானது விளக்குகின்றது.

சிவந்த வாயையுடைய கிளிக்கூட்டம் கவர்ந்து செல்லும் தினைப்புனம், எனத் தினைப் புனத்தினை விளக்க, **“கிளி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“செவ்வாய்ப் பாசினம் கவரும் என்று அவ்வாய்த்”** (நற்; பா-206; வ-4) என்ற வரியானது விளக்குகின்றது.

செந்தினையில் பால் பிடித்த கொடுவிய கதிரைச் சிறு கிளிகள் உண்ணாமல் கடியச் சென்ற தினைப் புனத்தை விளக்க, **“தினை, கிளி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“சிறு கிளி கடகம் சென்றும்”** (நற்; பா-288; வ-3) என்ற இப்பாடல் வரியானது விளக்குகின்றது.

அடிமரத்தையுடைய வேங்கையின் அழகிய கிளைகளின் நடுவிலே சந்தனக் கட்டையாற் செய்த பரணில் யானையின் வலிமைக்கு அஞ்சாப் புலியின் தோல் விரிந்திருப்பதன் மேல் இருந்து அகன்ற புனத்துச் சிறிய தினையைக் காப்பார்கள், எனத் தினைப் புனத்தினை விளக்க. **“வேங்கை, சாந்து, களிறு, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன, **“வேங்கை அம் கவட்டிடைச் சாந்தின் செய்த; களிற்றுத் துப்பு**

**அஞ்சாப் புலி அதள் இதணத்து”** (நற்; பா-351; வரி-6-7) இவ்வாறு இப்பாடல் வரிகள் விளக்குகின்றன.

வேங்கையின் பக்கத்தில் அமைந்த பரணில் ஏறியிருந்து வளைந்த சிறிய தினைக் கதிர்களைக் கொய்ய வரும் கிளிகளை ஓட்டும் தினைப்புனம், எனத் தினைப்புனத்தினை விளக்க, **“வேங்கை, கிளி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன, இதனை, **“கார் அரும்பு அவிழ்ந்த கணி வாய் வேங்கைப்; பாஅமை இதணம் ஏறிப் பாசினம்”** (நற்; பா-73; வரி-6-7) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

**தெய்வ வழிபாடு**

வேங்கைப் பூவுள் சிலவற்றைக் கொண்டு மலையில் வாழும் கடவுளுக்கு வழிபாடு செய்தால் தலைவி, எனத் தலைவியின் தெய்வ வழிபாட்டை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“மன்ற வேங்கை மலர்சில கொண்டு”** (ஐ.நூறு; பா-259; வ-2) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

மூங்கிலை வில்லாக வளைத்து வைத்துக் கொண்டவன் சிவபெருமான், எனச் சிவபெருமானின் தன்மையை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதனை விளக்கும் பாடல் வரியானது பின்வருமாறு, **“இமையவில் வாங்கிய ஈர்ஞ் சடை அந்தணன்”** (கலி; பா-38; வ-1) என்பதாகும்.

அசுரர்களைக் கொன்று அதனால் சிவந்த கொம்பை உடைய யானையை உடையவன் முருகன். அவனுக்குரிய மலை சிவந்த நிறமுடைய காந்தள் பூங்கொத்துக்களை உடையது என முருகனின் சிறப்பினையும் அவனுடைய மலையினையும் விளக்க, **“யானை, காந்தள்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. முருகனின் சிறப்பினை விளக்கும், **“செங்கோல் அம்பின் செங்கோட்டு யானை; குருதிப் பூவின் குலைக் காந்தட்டே”** (குறுந்; பா-1; வரி-2,4) என்ற பாடல் வரி வழி அறியலாம்.

தொல்காப்பியர் எண்வகைக் கருப்பொருள்களைக் குறிப்பிட்டிருக்கின்றார். அவற்றுள் தெய்வத்தை முதலில் வைத்துள்ளார். ***“கருப்பொருள்களுள் முதலாவதாகவும் தலையாயதாகவும் தெய்வத்தைத் தொல்காப்பியர் வைத்திருப்பது மக்களுடைய வாழ்க்கை இன்றியமையாத உணவு முதல் அனைத்திற்கும் அ∴து எவ்வளவு இன்றியமையாதது என்பதை விளங்க உணர்த்தற்கேயாகும்”*** (மொ.அ.துரை அரங்கசாமி; தொல்காப்பிய நெறி; ப-95) என்பர்.

பொதுவிடத்திலுள்ள மராமரத்தில் குடிகொண்டிருக்கும் முதிர்ந்த தெய்வம் எனத் தெய்வம் உறைதலினை விளக்க **"மராஅம்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"மன்ற மராஅத்த பேஎம் முதிர் கடவுள்"** (குறுந்; பா-87; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

நறிய கடம்பின் மலர்க்கண்ணியைச் சூடிக்கொண்டு ஆடும் வேலவன், என வேலனை வேண்டுதலை விளக்க, **"கடம்ப"** மலர் பயன்படுத்தப்பட்டுள்ளது என வேலனைப் பற்றிய கருத்தினை வெளிப்படுத்த, **"கார் நறுங் கடம்பின் கண்ணி சூடி"** (நற்; பா-34; வ-8) என்ற வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

மலையிலுள்ள செங்காந்தள் மலர்களைக் கண்ணியாக அமைத்துச் சூட்டி முருகனை வழிபட்டனர் என்பதனை விளக்க, **"காந்தள்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"மலைச் செங்காந்தட் கண்ணி தந்தும்"** (நற்; பா-173; வ-2) என்ற பாடல் வரி புலப்படுத்தும்.

**தலைவனின் மலை**

பலாப் பழத்தின் முற்றிய சுளையாலும், பாறையில் அமைந்த பெரிய சுனையில் உண்டான தேனைத் தேன் என்று அறியாது உண்டது ஆண் குரங்கு அது மிளகுக் கொடி படர்ந்த சந்தன மரத்தில் ஏற மாட்டாமல் உறங்கும், எனத் தலைவனின் மலையினை விளக்க, **"பலா, கடுவன், சாந்தம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"சாரற் பலவின் சுளையொடு ஊழ்படு; அறியாது உண்ட கடுவன் அயலது; கறிவளர் சாந்தம் ஏறல்செல்லாது"** (அகம்; பா-2; வரி-3,5,6) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

***"சேயோன் மேயும் மைவரை உலகம் குறிஞ்சி தமிழகத்தின் எப்பகுதியிலும் ஏதேனும் ஒரு திசையில் மலைக்காட்சி இருப்பதுண்டு"*** (பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை; ப-276) என்று மு.வரதராசனார் குறிப்பிடுகிறார்.

பெரிய ஆண் பன்றியைக் கொன்ற பிளவுடைய வாயையுடைய ஆண்புலி, பலா மரங்கள் செறிந்த பக்க மலைகளில் புலால் நாற்றம் உண்டாக அப்பன்றியை இழுத்துச் செல்லும். அங்கு மூங்கில்கள் ஒலிக்கும். அங்குச் சுரபுன்னை மரத்துடன் வாழை ஓங்கி வளர்ந்த தாழ்ந்த இடத்தையுடைய எப்போதும் நீர் நீங்காத குழி அதில் ஆண் யானை அகப்பட்டது. அதன் வருத்தத்தைப் போக்குதற்கு அதன் பெண்யானை அந்த ஆண் யானை ஏறுதற்குப் படியாக அமைத்திடப் பெரிய மரத்தை முறித்தது, இத்தகைய தலைவனின் மலை, என மலையினை விளக்க, **"கேழல், பலா, கழை, வாழை, களிறு, பிடி"** போன்ற

கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கேழல் அட்ட பேழ்வாய் ஏற்றை; பலா அமல் அடுக்கம் புலாவ ஈர்க்கும்; கழை நரல் சிலம்பின் ஆங்கண் வழையொடு; வாழை ஓங்கிய தாழ்கண் அசும்பில்; படுகடுங் களிற்றின் வருத்தம் சொலிய; பிடி பிடி முறுக்கிய பெரு மரப் பூசல்"** (அகம்; பா-8; வரி-6-11) என்ற கருப்பொருள்கள் விளக்கி நிற்கின்றன.

தினைப்புனம் காக்கும் அழகிய மகளிர் ஓயாமல் ஆரவாரிக்கும் தோறும் கிளிகள் தம் இனம் என எண்ணிப் பலகாலும் அழைப்பதற்கு இடமாய் அமைந்தது. குறவர் அணில்கள் ஆடும் பெரிய கிளையையும் சிறந்த காய்களையுமுடைய பலா மரத்தின் இனிய கனியான பயனைக் கொள்வதற்கு அமைந்த குடிசையின் கூரை மறையுமாறு வேங்கை மலர்கள் உதிர்ந்து பரவியுள்ளது. அத்தோற்றத்தைக் கண்டு புலி என்று எண்ணி அஞ்சியது. புள்ளிகளையுடைய யானை அஞ்சியதால் மேகங்கள் தங்கும் மலைச்சாரலில் மூங்கில்கள் முரிந்து விழும்படி ஓடுகின்ற மலைப்பகுதி, எனத் தலைவனின் மலையினை விளக்க, **"கிளி, பலா, வேங்கை, புலி, வேழம், கழை,"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை விளக்கும் பாடல் வரிகள், **"கிளி விளி பயிற்றும் வெனில் ஆடு பெருஞ் சினை; விழுக்கோட் பலவின் பழுப்பயம் கொண்மார்; குறவர் ஊன்றிய குரம்பை புதைய; வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்; புலிசெத்து வெரீஇய புகர்முக வேழம்; மழை படு சிலம்பில் கழைபட பெயரும்"** (அகம்; பா-12; வரி-7-12) என்பதாகும்.

மலையிடத்துச் சுற்றி கொடியை உடைய வேங்கை மரத்தின் புது மலர்களைப் பறிக்க விரும்பிய குறமகள், 'புலி புலி' என்னும் ஆரவாரத்தைப் பக்க மலையில் பசுவைக் கவர்கின்ற வலிய புலி வந்ததால் எழுந்த வில்லை உடைய வேடர். அந்தப் புலியைக் கொல்வதற்குக் கூடிவரும் தலைவன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **"வேங்கை, புலி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கிளர்ந்த வேங்கைச் சேண்நெடும் பொங்கர்ப்; ஆகொள் வயப்புலி ஆகும் அஃது எனத் தம்"** (அகம்; பா-52; வரி-2,6) என்ற இப்பாடல் வரிகள் விளக்குகின்றன.

தன் இனமான யானைகளைக் காத்தற் பொருட்டு மத நீரை உடைய புள்ளிகள் பொருந்திய நெற்றியால் பொலிவுற்ற ஆண் யானைகளின் தலைவன். அதன் காதலியான முதல் கருப்பத்தை உடைய இளம் பிடி யானையானது அகன்ற இடத்தையுடைய மலைப்பகுதி, என மலைப்பகுதியினை விளக்க, **"யானை, பிடி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பொறி நுதற் பொலிந்த வயக் களிற்று ஒருத்தல்; கடுஞ்சூல் மடப்பிடி நடுங்கும் சாரல்"** (அகம்; பா-78; வரி-4,6) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

அசையும் மூங்கில் துளைக்கப் பெற்று விளங்கும் குழலிசை, கூட்டமான கலைமான்களின் தாழ ஒலிக்கும் கடிய குரலின் இசை இவைகளைக் கேட்டு ஆரவாரம் மிகுந்து குரங்குகளாகிய நல்ல அவையினர் வியப்புற்றுப் பார்க்க, மூங்கில்கள் வளர்வதற்கு இடமான பக்க மலைகளில் அங்குமிங்கும் கூத்தாடும் மயில்கள் கூத்தியர் போலத் தோன்றும் தலைவனின் மலையினை விளக்க, **“அமை, கலை, மந்தி, கழை, மயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“தோடு அமை முழவின் துதை குரல் ஆக; கணக்கலை இருக்கும் கடுங்குரற் தூம்பொடு; மந்திநல் அவை மருள்வன நோக்க; கழை அளர் அடுக்கத்து இயலி ஆடு மயில்”** (அகம்; பா-82; வரி-4-5, 8-9) என்ற வரிகள் விளக்குகின்றன.

புள்ளிகளை உடைய மயிலைக் கண்டு பாம்பின் தலைகள் படத்தை விரிந்தவை போல், காயாவின் மென்மையான கொம்புகளைத் தீண்டுமாறு நீண்டு அரும்பிய காந்தளின் தாதினை நுகர்கின்றன வண்டுகள், எனத் தலைவனின் மலையினை விளக்க, **“மயில், காயா, காந்தள்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“விரவுப் பொறி மஞ்ஞை வெரீஇ அரவின்; காயா மென் சினை தோய நீடி; பல்துடுப்பு எடுத்த அலங்கு இலைக்காந்தள்”** (அகம்; பா-108; வரி-12,14-15) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

சிறிய சுனையில் பூத்த குவளை மலரை வண்டுகள் மொய்க்கச் சூடிய குறிஞ்சி நிலத் தலைவன் வரும் வழியில் யானையின் முதுகில் உள்ள கயிற்றுத் தழும்பைப் போன்ற மலைப்பகுதி எனத் தலைவன் மலையினை விளக்க, **“குவளை, யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடி; கான நாடன் வரூஉம் யானைக்”** (அகம்; பா-128; வரி-9-10)என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

யானை பனைமரத்தைப் போன்று பருத்த கையை உடையது. புலியைக் கதறுமாறு குத்தி அதன் வெற்றியைத் தொலைக்கும். பின் தினை விளைந்த பெரிய புனத்தைக் கவர்ந்து கொள்ளும் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“பனை, யானை, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பனைத்திரள் அன்ன பருஏர் ஏறுழ்த் தடக்கை; வண்டுபடு கடாஅத்து உயர்மருப்பு யானை; உறுபுலி உரறக் குத்தி விறல் கடிந்து”** (அகம்; பா-148; வரி-1,3,5) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

சோலையில் உள் மூங்கில் குருத்தினைத் தின்னும் பெரிய களிறு திரியும் மலைச் சாரல், என மலைச் சாரலினை விளக்க, **“மூங்கில், களிறு”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை **“முளைமேய் பெருங்களிறு வழங்கும்”** (அகம்; பா-148; வரி-13) என்ற வரி விளக்குகின்றது.

பலா மரத்துடன் வேங்கை மரமும் பொலிவை அடைய வில்லையுடைய படையுடைய பசும்பூண் பாண்டியனின் களிற்றின் மீது எடுக்கப்பட்ட கொடியைப் போன்று அழகுண்டதாக இழியும் அருவிகள் பொருந்திய மலையின் சாரல், என மலைச் சாரலினை விளக்க, **“பலா, வேங்கை, களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன, என்பதனை விளக்கும் பாடல் வரிகள், **“கோள் அறவு அறியாப் பயம் கெழு பலவின்; வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய; களிறு அணி வெல்கொடி கடுப்ப காண்வர”** (அகம்; பா-162; வரி-19-20,22) என்றவாறு விளக்கி நிற்கின்றன.

வெண்கடம்ப மரத்தைச் சார்ந்து வரியுடைய நெற்றியையுடைய ஆண் யானையின் மார்பில் செலுத்திப் பகையைக் கொல்லும் மத்தளம் போல் விளங்கும் பலாப் பழத்தினின்று எடுத்த மதுவை உண்ட களிப்புக் கொண்டவனாய் உறவினருடன் ஆரவாரம் மிக்குச் சந்தன விறகால் ஆன தீயில் ஊனுடன் கூடிய சோற்றை உண்பான். இத்தகு இயல்பு வாய்ந்த குன்றத்தை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“மராஅம், யானை, பலா, சாந்து”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“விரிமலர் மராஅம் பொருந்தி கோல் தெரிந்து; வரி நுதல் யானை அருநிறத்து அழுத்தி; முன்றில் நீடிய முழவு உறழ் பலவின்; சாந்த ஞெகிழியின் ஊன்புழுக்கு அயரும்”** (அகம்; பா-172; வரி-7-8,11,13) என்ற வரிகள் பயன்படுத்தப்பட்டுள்னன.

மூங்கிலது வேரைப்போன்ற பருத்த மயிரையும் உடைய பன்றி, அது சுனையின் நீரைக் குடித்துச் சேம்புச் செடியின் கிழங்கைத் தின்று, பெண் யானை துயின்று கிடந்ததைப் போன்று கல்லின் மேல் வருத்தமின்றி இறங்கி வந்தது. வெண் நாரைகள் இருந்தாற் போன்று தோன்றுகின்ற வெள்ளிய கூதளஞ் செடியின் அசையும் கொத்தில் உள்ள மலரில் பொருந்தியது. தினையின் கதிரை மேய்ந்து பின் இனிதாய் உறங்கியது. இத்தகைய மலை நாட்டை உடையவன் தலைவன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **“மூங்கில், பன்றி, யானை, நாரை, கூதளஞ்செடி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வெதிர் அன்ன பருஉ மயிர்ப் பன்றி; பிடிமடித் தன்ன கல்மிசை ஊழ் இழிபு; பைம்புதல் நளிசினைக் குருகு இருந்தன்ன”** (அகம்; பா-178; வரி-2,6,8) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

வேங்கை மரத்தின் பொன் போன்ற பூங்கொத்துகளைச் சூடி மூங்கிலால் ஆன வில்லைத் தோளில் இட்டு இனிய பலாப்பழத்தின் சுளையினின்று விளைந்த தேனை இளையருடன் நிறையக் குடித்து விலங்குகளைத் தப்பாமல் பற்றும் வலிய நாய் பின்வர, வேட்டைக்குச் சென்ற குறவன் காட்டில் உள்ள மல்லிகையான குளிர்ந்து புதரானது

குருதியுடன் விளங்க முள்ளம் பன்றியைக் கொன்று வீழ்த்துவன். இத்தகைய குன்றுகளையுடையவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“வேங்கை, மூங்கில், பலா, வயநாய், மல்லிகை, முள்ளம்பன்றி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை விளக்க, **“பூங்கண் வேங்கைப் பொன் இணர் மிலைந்து; வாங்கு அமை நோன் சிலை எருத்தத்து இரீஇத்; தீம்பழப் பலவின சுளைவினை தேறல்; ஓட்டு இயல் பிழையா வயநாய் பிற்பட; குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர; முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட”** (அகம்; பா-182; வரி-1-3,5,7-8) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

தோன்றிப் பூவுடன் வேங்கைப் பூமணக்கும் குளிர்ந்த பெரிய மலைச் சாரல். என மலைச் சாரலினை விளக்க, **“தோன்றி, வேங்கை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“வண்டு இறை கொண்ட எரிமருள் தோன்றியொடு; ஒண் பூ வேங்கை கமழும்”** (அகம்; பா-218; வரி-20-21) ஆகிய வரிகள் விளக்கி நிற்கின்றன.

மூங்கிலைத் தின்னும் யானை அந்த மேகத்தின் ஒலியைப் புலி எழுப்பும் ஒலி என எண்ணி அஞ்சிப் பெரிய மலையின் குகையிடம் ஓடும் அத்தகையது தலைவனின்மலை என மலையின் காட்சியினை விளக்க, **“கழை, யானை, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“மழை முழங்கு அரவம் கேட்ட கழைதின்; மாஅல் யானை புலிசெக்து வெரீஇ”** (அகம்; பா-232; வரி-2-3) என்ற வரிகள் விளக்குகின்றன.

சிறிய இலைகளையுடைய சந்தன மரத்தின் மென்மையான கிளைகள் தீண்டத் தேன்அடை தொங்கும் உயர்ந்த உச்சியையுடைய மூங்கிலைத் தன்னகத்தே கொண்ட மலை நாடன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“சாந்து, மூங்கில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **“சாந்த மென்சினை தீண்டி மேலது”** (அகம்; பா-242; வ-20) என்ற வரியானது விளக்குகின்றது.

இதில் சந்தன மரத்தின் தேனின் இனிமையை விளக்கும் சான்று பின்வருமாறு: ***“சந்தன மரக்கிளைக்கிடையே உள்ள தேன் சுவையுடையதாகவும், தூய்மையுடையதாகவும் இருப்பதால் கொம்புத்தேன் என்றழைக்கப்படுகின்றது”*** (ச.வே.சுப்பிரமணியம்; தமிழகராதி: ப-432) என்பதாகும்.

வெற்றி பொருந்திய வேட்டையையுடைய புலியானது நடுங்கிட ஆள் பாய்ந்து உயர்ந்த நெற்றியையுடைய யானையின் புள்ளி பொருந்திய முகத்தைத் தாக்கி அதன் கொம்பைப் பறிக்கும். குளிர்ந்த மணம் கமழும் சோலை பொருந்திய மலையின் சாரல், என மலையின் சாரலினை விளக்க, **“புலி, யானை”** போன்ற கருப்பொருள்கள்

பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"இடம்படுபு அறியா வலம்படு வேட்டத்து; உயர்நுதல் யானைப் புகர் முகத்து ஒற்றி"** (அகம்; பா-252; வரி-1,3) ஆகிய வரிகள் விளக்கி நிற்கின்றன.

புள்ளிகளையும் வரிகளையும் உடைய நெற்றியையுடைய யானையோடு புலி போரிட அதனால் குருதியால் குழைந்த சிவந்த களம் புலால் நாற்றம் நீங்க அதனை வேங்கை மலர்களின் நாற்றம் காட்டு மல்லிகை மலர் நாற்றத்துடன் கூடி மாற்றும் மலையை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"யானை, புலி, வேங்கை, குளவி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பூநுதல் யானையொடு புலிபொரக் குழைந்த; குருதிச் செங்களம் புலவு அற வேங்கை; உருகெழு நாற்றம் குளவியொடு விலங்கும்"** (அகம்; பா-268; வரி-2-4) போன்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மலர்ந்துள்ள வேங்கை மரத்தின் அசையும் கிளை மேலும் அழகுபெற நீலமணியைப் போன்ற நிறம் உடைய மயில் இருந்து அகவும் இவ்வியல்பு பொருந்திய மலை நாட்டை உடையவன் தலைவன் எனத் தலைவன் மலையினை விளக்க, **"வேங்கை, மயில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"மலர்ந்த வேங்கை அலங்குசினை பொலிய; மணிநிற மஞ்ஞை அகவும்"** (அகம்; பா-272; வரி-17-18) ஆகிய வரிகள் விளக்குகின்றன.

தினைப் புனத்தில் இரவில் தினையை மேய்வதில் பொருந்தும் யானையினது காலின் வலிய நடையை அறிந்த வேட்டுவன் இறகையுடைய அம்பு போல் விரைவாய்ப் போய்ப் பக்கமலையில் வேங்கை மரத்தின் பூக்களைச் சிதறும். இதனை அழிக்கும் பின் பலாப்பழத்தின் போய்த் தங்கிவிடும் இயல்புடைய நாடன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"யானை, வேங்கை, பலா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **"இரவின் மேயல் மரூஉம் யானைக்; வேங்கை விரி இணர் சிதறி தேன் சிதையூஉப்; பலவின்பழத்துள் தங்கும்"** (அகம்; பா-288; வரி-8,13-14) போன்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

இளம் பெண் யானை தனது முதிர்ந்த முதல் கருவை ஈன்று மூங்கிலைத் தின்னும் தன் உடலைத் தன்னிடம் விருப்பம் உடைய ஆண் யானைத் தடவிக் கொண்டிருக்க, வாழைகளையுடைய அழகிய பக்க மலையை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"பிடி, கழை, களிறு, வாழை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை, **"அடக்கு வம்மன்னோ தோழி! மடப்பிடி; கழைதின் யாக்கை விழை களிறு தைவர; வாழை அம் சிலம்பில் துஞ்சும்"** (அகம்; பா-328; வரி-11,13-14) பாடல் வரிகள் விளக்குகின்றன.

ஆண்யானையானது முளைகள் வளரும் புதர்களில் உள்ள மூங்கில்கள் ஒடித்துத் தன் இனத்துடன் தின்று நீரை விரும்பி நீர்த் துறையருகே செல்லும் அதனுடன் மாறுபட்ட புலியைப் போரிட்டுக் கொல்லும். பக்க மலையில் மெல்லச் சென்று தன் பெண் யானையைச் சேரும். வாழை மரங்களையுடைய அம்மலையில் உறங்கும் மலையினை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"மூங்கில், யானை, உழுவை, பிடி, வாழை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"முளை வளர் முதல்; மூங்கில் முருக்கி; கிளையொடு மேய்ந்த கேழ் கிளர் யானை; பொரு முரண் உழுவை தொலைச்சி கூர் நுனைக்; யாழ் இசைப் பறவை இமிர பிடி புணர்ந்து; வாழை அம் சிலம்பில் துஞ்சும் நாடன்"** (அகம்; பா-332; வரி-1-2,4,8-9) என்ற வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தேன் போன்ற சுவையுடைய திரண்ட அடியையுடைய மாமரத்தினது கோடைக் காலத்தில் முதிர்ந்த மணம் கமழும் கனிகளுடன் பிசினையுடைய பலா மரத்தின் சுளைகளையிட்டுத் தேனுடன் கலந்து ஆக்கிய வண்டு மொய்க்கும் அரியலான கள்; அது மூங்கிலின் நீண்ட குழாயில் அடைக்கப்பட்டது. பாம்பினது சீற்றத்தை ஒத்த வெறியுடையது நம் மலைப் பகுதி, என மலையின்காட்சியினை விளக்க, **"மா, பலா, மூங்கில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை விளக்க, **"தேன் தேர் சுவைய திரள் அரை மா அத்து; பயிர்ப்புறப் பலவின் எதிர்ச் சுளை அளைஇ; நெடுங்கண் ஆடு அமைப் பழுதி கடுந்திறல்"** (அகம்; பா-348; வரி-2,4,6) போன்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

நீண்ட குன்றின் பக்கத்தில் உள்ள நீண்ட அடியையுடைய வேங்கை மரம், இளம் மயிலின் உச்சியில் உள்ள குடுமியைப் போல் தோன்றும் மலை நாட்டையுடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையை விளக்க, **"வேங்கை, மயில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"குறும் பொறை அயலது நெடுந்தாள் வேங்கை; மட மயிற் குடுமியின் தோன்றும் நாடன்"** (அகம்; பா-368; வரி-6-7) இப்பாடல் வரிகள் விளக்குகின்றன.

அழகிய தளிர்களையுடைய வேங்கை மரத்தின் பொன் போன்ற நறுமணத்தாது உதிர்கிறது. அதனால் பீலி பொருந்திய சிறந்த தோகையை உடைய மயில் மலையில் வாழும் வருடை என்ற விலங்குகளின் கொம்பில் பொருந்தி இளைய கடாக்கள் செய்யும் ஒலிக்கு அஞ்சியது. மென்மையான மூங்கில் இடம் வளையத் தங்கியிருக்கும் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"வேங்கை, மயில், வருடை, அமை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"வங்கூழ் ஆட்டிய அம்குழை வேங்கை; காமர் பீலி ஆய் மயில் தோகை; வேறு வேறு இனத்த வரைவாழ் வருடைக்; இருங்கண் ஆடு அமைத்தயங்க இருக்கும்"** (அகம்; பா-378; வரி-3,5-6,10) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

நெருங்கிய இலைகளையுடைய பலா மரத்தின் பழத்தைக் கவர்ந்து எடுத்த கைகளை உடைய பெண் குரங்கு ஆண்குரங்குடன் துள்ளித் திரியும் மிக்க வலிமையுடைய தெய்வத்தையுடைய நீண்ட மலை, எனத் தலைவனின் மலையினை விளக்க, **“பலா, கடுவன், மந்தி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை விளக்க, **“அள் இலைப் பலவின் கனி கவர்கைய; கல்லா மாந்தி கடுவனோடு உகளும்”** (அகம்; பா-378; வரி-20-21) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மலையில் வளர்ந்த மூங்கிலை அறுத்துச் செய்த கொடிய ஒலியையுடைய தட்டையைக் கைக்கொண்டு நறிய மணம் உடைய சந்தன மரத்தை முழுவதும் வெட்டி உழுது விளைந்த தினையின் துய்யை உடைய சிறுகதிர்களைக் கவர்தலால் மூங்கில்கள் நெருங்கிய பெரிய மலைச்சாரலின் கிளிகளை ஓட்டி, ஒளி பொருந்திய கொத்துகளில் நறுமண மலர்களைக் கொண்ட வேங்கை மரத்தின் கவையில் உயரக்கட்டிய பரணை உடைய மலை, என மலையின் காட்சியினை விளக்க, **“அமை, ஆரம், கிளி, தினை, வேங்கை,”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“அமை அறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டையின்; நறு விரை ஆரம் அற எறிந்து உழுத; உளைக் குல் சிறு தினை கவர்தலின் கிளை அமல்; வேங்கை அம் கவட்டிடை நிவந்த இதணத்து”** (அகம்; பா-388; வரி-2-4,6) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

தினையை மேய்ந்த யானைக் கூட்டம் ஓடும் படி உயர்ந்த பரணில் கவின் கல்லில் இருந்து வீச அதனைக் கேட்டு புலி உறுமும், யானை கதறும், அகலமான காட்டில் உள்ள மயில் இடியோசை கேட்டு அஞ்சும் மலைப்பகுதி எனத் தலைவனின் மலையினை விளக்க, **“யானை, புலி, மயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை விளக்க, **“தினை மேய் யானை இனன் இரிந்து ஓட; மறப்புலி உரற வாரணம் கதற; நனவுறு கட்சியின் நல் மயில் ஆல்”** (அகம்; பா-392; வரி-13,16-17) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

பெரிய ஆண்புலி தாக்கியதால் புண் மிகுந்து வருந்தும் பெண் யானையால் தழுவப்படும் வலி குன்றிய ஆண் யானை வளைவான மூங்கிலால் செய்த தூம்பு என்ற ஊது கருவியைப் போன்று ஒலிக்கும் மலை, எனத் தலைவனின் மலையினை விளக்க, **“புலி, யானை, மூங்கில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை விளக்க, **“குயவரி இரும்போத்துப் பொருத புண்கூர்ந்து; உயங்கு பிடி தழீஇய மதன் அழி யானை; வாங்கு அமைக் கழையின் நரலும் அவர்”** (அகம்; பா-398; வரி-22-24) போன்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

குறிஞ்சி நிலத்தினைப் பல்வேறு பெயர்களால் சுட்டுகின்றனர். இதனை, **“மலை, வரை, சிலம்பு, குன்றம், குன்று, பிங்கல், குறும் பொறை, சாரல், அடுக்கம், கவான், வெற்பு, பொருப்பு, கோடு, சிமையம், கல், பாறை என்று குறிஞ்சி நிலம் சுட்ட புலவர்கள் பல பெயர்களைப் பயன்படுத்தியுள்ளார்”** (இரா.செகதீசன்: தொல்காப்பியப் பொருளதிகார வழி அகநானூறு ஓர் ஆய்வு: ப-132) என்ற சான்றின் வழி அறியலாம்.

வேங்கையின் பொன் போன்ற புதிய பூக்கள் போய்ப் படியும் இயல்புடைய நாடு, எனத் தலைவன் நாட்டினை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“கிழங்ககழ் நெடுங்குழி மல்க வேங்கைப்”** (ஐ.நூறு; பா-208; வ-2) என்ற வரி விளக்குகின்றது.

சந்தன மரத்தின் இடையில் உள்ள நிலத்தில் உள்ள அகிலைச் சுடுவதால் எழும் புகை அச்சந்தனப் பூவின் மணத்துடன் கமழும் மலைநாடன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **“சாந்தம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“சாந்த மரத்த பூழில் எழுபுகை”** (ஐ.நூறு; பா-212; வ-1) எனும் பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

குறுகிய முன் கால்களை உடைய பெரிய புலிகள் கொலையில் வல்ல ஆண், பெரிய புதர்கள் நிறைந்த காட்டில் மடப்பம் உடைய பெண்யானை ஈன்ற அசைந்த நடையையுடைய கன்றைக் கொல்லும் பொருட்டு நிற்கும் பலா மரத்தின் கனிகள் தொங்கும் மலைநாடன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **“புலி, பிடி, பலா”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை; நெடும்புதல் கானத்து மடப்பிடி ஈன்ற; நடுங்கு நடைக் குழவி கொளீஇய பலவின்”** (ஐ.நூறு; பா-216; வ-1-3) விளக்க பாடல் வரிகள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

பெரிய மலையில் நின்ற வேங்கை மரத்தினது பொன்னைப்போன்ற நல்ல மலர்களை மான் கூட்டங்களின் பெரிய சுற்றம் பலவும் மேய்ந்து உண்ணும் மலைப்பகுதி எனத் தலைவனின் மலையினை விளக்க, **“வேங்கை, மான்,”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“பெருவரை வேங்கைப் பொன் மருள் நறுவீ; மானினப் பெருங்கிளை மேயல் ஆரும்.** (ஐ.நூறு; பா-217; வ-1-2) போன்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

ஆண்யானையைக் கொள்ளுமிடத்துத் தவறியதால் சினம் மிக்கு எழுந்த புலி எழும் மேகங்களைப்போல் ஒலிக்கும் மலைப்பகுதி, எனத் தலைவனின் மலையினை விளக்க, **“களிறு, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“களிறுகோள் பிழைத்த கதழ் சிறந்தெழு புலி”** (ஐ.நூறு; பா-218; வ-3) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மதக் களிப்பையும் புள்ளி பொருந்திய பட்டம் அணிந்த சருச்சரை முகத்தையும் உடைய யானை, கருமையான சருச்சரைப் பொருந்திய துறுகல்லைப் பெண்யானை என எண்ணிப் போய்த் தழுவும் மலை பொருந்திய நாடு, எனத் தலைவனின் நாட்டினை விளக்க, **"வேழம், பிடி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"சுரும்புணக் களித்த புகர்முக வேழம்; இரும்பிணர்த் துறுகல் பிடிசெத்துத் தழூஉதின்"** (ஐ.நூறு; பா-239; வ-1-2) போன்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

புலியால் கொல்லப்பட்ட பெண் பன்றியின் அழகிய வரிகள் பொருந்திய குட்டியை வளைந்த வெண்மையான கொம்பையுடைய ஆண்பன்றி காக்கும் மலைநாடன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"புலி, பன்றி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"புலிகொல் பெண்பால் பூவரிக் குவளை; வளைவெண் மருப்பின் கேழல் புரக்கும்"** (ஐ.நூறு; பா-265; வரி-1-2) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

சிறு கண்களை உடைய பன்றியின் மிக்க சினம் பொருந்திய ஆணொடு குறுகிய முன் கால்களையுடைய பெரிய புலி போரிடுகின்ற மலைநாடன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"பன்றி, புலி"** போன்ற விலங்கினங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"சிறுகட் பன்றி பெருஞ்சின ஒருத்தலொடு; குறுங்கை இரும்புலி பொரூஉம் நாட"** (ஐ.நூறு; பா-266; வ-1-2) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

அசோக மரத்தினது பவளம் போன்ற ஒள்ளிய தளிர்களைப் புல்லிய தலையை உடைய குரங்கின் வலிய குட்டி உண்ணும் மலை எனத் தலைவனின் மலையினை விளக்க, **"அசோகம், மந்தி"** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"புன்தலை மந்தி வன்பறழ் ஆரும்"** (ஐ.நூறு; பா-273; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

பெண் குரங்கு கணவனான கல்லா ஆண்குரங்கு ஒளியுடைய வலிய புலி முழங்குததால் அஞ்சி ஓடி மலையை உடையவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"மந்தி, கடுவன், புலி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"மந்திக் கணவன் கல்லாக் கடுவன்; ஒண்கேழ் வயப்புலி குழுமலின் விரைத்துடன்"** (ஐ.நூறு; பா-274; வரி-1-2) போன்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

குரங்கானது தன் மீது இருந்தபோது அது நீங்கிப் போகும் போது நிமிர்கின்ற மூங்கில் போல் மீனைப் பிடிக்கின்ற தூண்டிற் கோல் விளங்கும். எனத் தலைவனின் மலையினை விளக்க, **"மூங்கில், குரங்கு, மீன்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"சிலம்பின் வெதிரத்துக் கண்விடு கழைக்கோல்; குரங்கின் வன்பறழ் பாய்ந்தென இலஞ்சி; மீனெறி தூண்டிலின் நிவக்கு நாடன்"** (ஐ.நூறு; பா-278; வரி-1-3) பாடல் வரிகள் விளக்குகின்றன.

கற்களின் மேல் ஓடும் இற்றிமரத்தின் வேரையும் பற்றிச் சென்று இற்றி மரத்தில் படர்ந்த குளவித் தளிரை மேய்ந்த மந்தி தன் துணைக் குரங்கோடு கூடி மலைகளின் மேல் தாவி ஆடும் மலைநாடன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“இற்றி, குளவி, மந்தி,”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்குகின்ற பாடல் வரிகள், **“கல் இவர் இற்றி புல்லுவன் ஏறிக்; குளவி மேய்ந்த மந்தி துணையொடு”** (ஐ.நூறு; பா-279; வரி-1-2) என்பவையாகும்.

கருமை பொருந்திய விரலையுடைய மந்தியின் கல்லாத இளைய குட்டி பெரிய மூங்கிலின் பசிய கழைமேல் ஏறிக் கோலைக் கொண்டு புடைக்கும் தோற்றத்தை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“மந்தி, கழை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை **“கருவிரல் மந்திக் கல்லா வன் பார்ப்பு; இரு வெதிர் ஈர்ங்கழை யேறிச் சிறுகோல்”** (ஐ.நூறு; பா-280; வரி-1-2) என்ற விளக்க பாடல் வரிகள் விளக்குகின்றன.

குறுகிய கால்களையுடைய வருடைமானைக் கண்டு தினையை உண்ணும் கிளிகள் அஞ்சி ஓடும்நாடன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **“வருடை, கிள்ளை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நெடுவரை மிசையது குறுங்கால் வருடை; தினை பாய் கிள்ளை வெரூஉம் நாட”** (ஐ.நூறு; பா-287; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

வேங்கை மரத்தில் அமர்ந்திருந்த மயில் அணிகளை அணிந்த மகளிர் போல் தோன்றும் தலைவனின் மலை, என மலையினை விளக்க, **“வேங்கை, மயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“எரிமருள் வேங்கை இருந்த தோகை,”** (ஐ.நூறு; பா-294; வ-1) என்ற வரியானது விளக்குகின்றது.

மலர்ந்து விரிந்த மலர்களையுடைய வேங்கை மரத்தின் பெரிய கிளைகளிடத்தில் தங்கிய மயில், மலர்பறிக்கின்ற மகளிரைப் போல் தோன்றும் நாடன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **“வேங்கை, மயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. என்பதை, **“விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை”** (ஐ.நூறு; பா-297; வ-1) என்ற வரி விளக்குகின்றன.

குறிஞ்சி நிலத்தின் கண் கவர்கின்ற காட்சியினை விளக்கும் சான்றுக் கருத்தாவது: ***“காடு மற்றும் மலைகள் சார்ந்த காட்சியே கண்களுக்கு விருந்தளிக்கும் காட்சியாகும். கலைகள் மனிதர்க்கு விஞ்ஞான உண்மைகளைப் போதிப்பனவல்ல அவை ஒரு வகையான ஒழுக்க உண்மைகளையே போதிக்கின்றன.”*** (அழகியல்; ப-153) என சோ.கிருஷ்ணராஜா குறிப்பிடுகின்றார்.

புலியினது வடிவை ஒத்த வேங்கை மரத்தைப் புலி கறுவு கொண்டு அதன் அடியில் குத்திய யானை தன் கொம்பைத் திரும்ப எடுக்க மாட்டாது வருந்தும் மலை. என மலையின் காட்சியினை விளக்க, **"புலி, வேங்கை, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"உறு புலி உரு ஏய்ப்பப் பூத்த வேங்கையைக்; கறுவு கொண்டு அதன் முதல் குத்திய மத யானை"** (கலி; பா-38; வரி-6-7) என்றவரி விளக்குகின்றது.

காந்தள் பூமணம் கமழ்கின்ற கரியமலை, என மலையின் காட்சியினை விளக்க, **"காந்தள்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. என்பதனை, **"காந்தள் கடி கமழும் கண் வாங்கு இருஞ் சிலம்பின்"** (கலி; பா-39; வ-15) என்ற வரியானது விளக்குகின்றது.

தேனையுடைய கொத்துகள் அசையும் காந்தளின் தேனெழுகும் படியாக உள்ள மலையில் ஆண்குரங்கு களவொழுக்கம் ஒழிந்து மணந்து கொள்ளும் நிலைமையைக் கற்றுத் திரண்ட சுற்றத்தவரிடம் போய் மகள் பேசுவார் போல மென்மையான விரலையுடைய பெண்குரங்கை எனக்குத் தர வேண்டும் என்று தனது குறையைக் கூறும். மேலும் யானை தான் விரும்பும் பெண் யானைக்கு முதல் சூலால் உண்டான வயாநோய்க்கு உள்ளம் பொருந்தி இனிய கணுவில் தோன்றிய கிளையை உடைய கரும்பினை முரிக்கும் மலை எனத் தலைவனின் மலையினை விளக்க, **"காந்தள், கடுவன், மந்தி, வேழம், கரும்பு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"எடுத்த நறவின் குலை அலங்காந்தள்; கல்லாக் கடுவன் கணம் மலி சுற்றத்து; மெல் விரல் மந்தி குறை கூறும் செம்மற்றே; ஒடுங்கா எழில் வேழம் வீழ் பிடிக்கு உற்ற; தீம்கண் கரும்பின் கழை வாங்கும் உற்றாரின்"** (கலி; பா-40; வரி-12,15-16,26,28) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

பெண்யானைகளுடன் வந்து புன்செய் நிலத்தில் மேய்வன ஆண் யானைகள் அவற்றின் அடிகள் வைக்கும் நடையினது ஓசையைக் கேட்டனன் கானவன். உயர்ந்த மலையின் ஆசினிப் பலா மரத்தின்மேல் இட்ட பரணில் ஏறினன். கவணில் கல்லை வைத்து எறிய அக்கல் மலையில் நின்ற வேங்கை மரத்தின் ஒளியுடைய மலர்களைச் சிதறும். ஆசினிப் பலாவினது மென்மையான பழம் கனிந்துள்ளவற்றை உதிர்க்கும். நல்ல பிஞ்சையுடைய மாமரத்தின் பசுமையான கொத்துகளைக் கலக்கும். குலையை உடைய வாழையினது கொழுமையான மடலைக் கிழிக்கும். பலாவின் பழத்துக்குள் போய்த் தங்கும் வளம் உடைய தலைவன் மலை எனத் தலைவனின் மலையினை விளக்க, **"பிடி, யானை, ஆசினிப்பலா, வேங்கை, மா, வாழை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க. **"பிடியொடு மேயும் புன்செய் யானை; நெடு வரை ஆசினிப் பணவை ஏறி;**

**இறுவரை வேங்கை ஒள் வீதறி; ஆசினி மென் பழம் அளிந்தவை உதிரா; நறுவடி மாவின் பைந்துணர் உழக்கி; குலையுடை வாழைக் கொழுமடல் கிழியா; பலவின் பழத்துள் தங்கும் மலை கெழுவெற்பனைப்" (**கலி; பா-41-; வரி-7,9,11-12,14-16) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மறமுடைய பெரிய புலியினது பழைய பகைமையைக் கெடுத்து முறம் போல் செவிகளை உடைய யானை எனத் தலைவனின் மலையின் காட்சியினை விளக்க, **"புலி, யானை,"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் வரிகள், **"மறக்கொள் இரும்புலித் தொல் முரண் தொலைந்த; முறம் செவி வாரணம் முன் குளகு அருந்தி" (**கலி; பா-42; வரி-1-2) ஆகிய பாடல் வரிகள் ஆகும்.

குளிர்ந்த கோங்கு மலர்ந்த பக்க மலையெல்லாம் பொன்னால் செய்யப்பட்ட பல ஆரம் அணிந்த யானைகள் போல் சிறந்து விளங்குகின்றன எனத் தலைவனின் மலையினை விளக்க, **"கோங்கு, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன என்பதை விளக்கும் பாடல் வரிகள், **"தண்நறுங் கோங்கம் மலர்ந்த வரையெல்லாம்; பொன் அணி யானை போல் தோன்றுமே நம் அருளாக்" (**கலி; பா-42; வரி-16-17) என்பனவாகும்.

அகன்ற பாறையில் உள்ள கருங்குரங்கைச் சேர வெருண்டு பார்த்து இருள் பொதிந்த பகல் மலையில் ஏறி இறங்கி ஆடும் வருடை மானின் குட்டிகளை உடைய வளம் உடைய மலை, எனத் தலைவனின் மலையை விளக்க, **"வருடைமான், கருங்குரங்கு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை விளக்க, **"வருடைமான் குழவிய வள மலை நாடனை" (**கலி; பா-43; வ-14) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

மானின் செவியைப் போன்று மூங்கிலின் முளையின் கணுவை மூடிய பாளை கழன்று கீழே விழுகின்ற பண்பை உடையது தலைவனின் மலை எனத் தலைவனின் மலையை விளக்க, **"மான், வெதிர்"** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"நுண் பொறி மான் செவி போல வெதிர் முளை" (**கலி; பா-43; வ-16) எனும் பாடல் வரி விளக்குகின்றது.

அஞ்சாமையுடைய புலியினது அடியைப்போல் வாழை மரத்தின் வளைவான காய் குலைகள் தோறும் தொங்கும் மலை என, **"புலி, வாழை"** போன்ற கருப்பொருள்கள் மூலம் தலைவனின் மலையானது விளக்கப்படுகின்றது என்பதனை விளக்க, **"கடுங்கண் உழுவை அடி போல வாழைக்" (**கலி; பா-43; வ-24) என்ற வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

வேங்கை மரத்தின் அழகிய கொம்புகளின் மீது வீழ்தலால் முதிர்ந்த கொத்துக்கள் அலரும் புள்ளியை உடைய மத்தகத்தையும் அழகையும் உடைய யானைகள் பூவுடன் கூடிய நீரை மேலே சொரிய எக்காலத்திலும் தாமரை மலரின் அழகையுடைய உள் இதழிலே வீறுடன் திருமகள் விரும்பியிருத்தலைப் போல் விளங்கும் தலைவனின் மலையினை விளக்க, **“வேங்கை, வேழம், தாமரை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“முதிர் இணர் ஊழ் கொண்ட முழவுத்தாள் எரி வேங்கை; வரி நுதல் எழில் வேழம் பூ நீர் மேல் சொரிதர; புரி நெகிழ் தாமரை மலர் அம்கண் வீறு எய்தி” (**கலி; பா-44; வரி-4-6) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மதத்தையும் வெண்மையான கொம்பையும் உடைய தலைமையுடைய யானையுடனே புலி வந்து போரிட்ட பொழுது வேங்கை மரத்தின் அழகிய கொம்பு என்று எண்ணி ஆற்றல் வாய்ந்த புலியைச் சூழ்ந்தது. வேங்கை மரத்தின் கொம்பு என்று புள்ளிகளை உடைய யானையின் முகத்தை அணுகியது. அத்தகைய தலைவனின் மலையினை விளக்க, **“யானை, புலி, வேங்கை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“வாய் இழி கடாத்த வால் மருப்பு ஒருத்தலோடு; ஆய்பொறி உழுவை தாக்கிய பொழுதின்; வேங்கை அம் சினை என விறற் புலி முற்றியும்; பூம்பொறி யானைப் புகர் முகம் குறுகியும்” (**கலி; பா-46; வரி-3-6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தானே வளையும் மூங்கில் கோலை நெல்லுடன் வளைத்துத் தின்னும் முழந்தாளையுடைய கரிய பெண் யானை. அ∴து அம் மலையில் செறிந்த இலையினையுடைய வாழை மிக்க இடத்தில் புகுந்து அங்கு வருடை மானின் குட்டி பரந்து திரியும் இடம் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“மூங்கில், நெல், யானை, வாழை, வருடைமான்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வாங்குகோல் நெல்லோடு வாங்கி வருவைகல்; மூங்கில் மிசைந்த முழந்தாள் இரும்பிடி; தூங்கு இலை வாழை நளி புக்கு ஞாங்கர்; வருடை மட மறி ஊர்வு இடைத் துஞ்சும்” (**கலி; பா-50; வரி-1-4) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

முறத்தைப் போன்ற யானையின் செவியை மறைவிடமாய்க் கொண்டு பாய்ந்து மாறுபாடு செய்த புலியைச் சினந்து தன் நீண்ட கொம்பின் கூர்மையான முனையினால் குத்தி புலியின் மார்பைப் பிளந்து பகைமை நீங்கிய யானை சுற்றத்துடனே திரியும் மலை எனத் தலைவனின் மலையை விளக்க **“புலி, யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“முறம் செவி மறைப் பாம்பு முரண் செய்த புலி செற்று; நிறம் சாடி முரண் தீர்ந்த நீள் மருப்பு எழில் யானை” (**கலி; பா-52; வரி-1,4) ஆகிய வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வற்கடத்தை அறியாத சுரபுன்னை மரங்கள் நெருங்கிய பக்க மலையையும் வெற்றியையும் கொண்ட மலையின் அகன்ற பாறையில் வாழ்கின்ற தான் விரும்பிய பெண் யானை தன்னிடத்தே உள்ளது. தனக்கு மாறான யானையைத் தன் மனத்தில் கொண்ட வலிமையால் அதன் புள்ளியையுடைய நெற்றியைப் புண்படுத்திய மறம் மிக்க யானை குத்தி எடுத்த கொம்பைப் போல உயர்ந்த அரும்பையுடைய காந்தள் நாள் தோறும் புதுமையை உண்டாக்கும் தலைவனின் மலை என மலையினை விளக்க **“சுரபுன்னை, யானை, காந்தள்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வறன் உறல் அறியாத வாழை அமை நறுஞ் சாரல்; விறல் மலை வியல் அறை வீழ் பிடி உழையதா; மறல் மிகு வேழம் தன் மாறுகொள் மைந்தினான்; உயர் முகை நறுங் காந்தள் நாள் தோறும் புதிது ஈன” (**கலி; பா-53; வரி-1-3,5) ஆகிய வரிகள் விளக்கி நிற்கின்றன.

குறிஞ்சி மரத்தின் மலர்களைக் கொண்டு பெரிய தேனடையை வண்டுகள் உருவாக்குவதற்கு இடமாகிய நாட்டையுடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க **“குறிஞ்சி”** எனும் மலர் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதனை, **“கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு”** (குறுந்; பா-3; வ-3) என்ற பாடல்வரி விளக்குகின்றது.

சிறு மூங்கிலாகிய வாழ்வேலியையுடைய வேரிலே குலைகளையுடைய பலாமரங்கள் செறிந்த மலைப்பக்கத்தை உடையவன் எனத் தலைவனின் மலையை விளக்க, **“மூங்கில், பலா”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வேரல் வேலி வேர்க் கோட் பலவின்”** (குறுந்; பா-18; வ-1) என்ற வரி விளக்குகின்றது.

கரிய அடியை உடைய வேங்கை மரத்தின் மேலே வளர்ந்த பெரிய கிளையில் இருந்த மயிலானது வேங்கை மலரைக் கொய்யும் மகளிரைப்போலத் தோன்றுவதற்கு இடமாகிய தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க **“வேங்கை, மயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“அரும்பு அற மலர்ந்த கருங்கால் வேங்கை; மேக்கு எழு பெருஞ் சினை இருந்த தோகை”** (குறுந்; பா-26; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

யானை என்னும் பெரிய கொடியானது உருண்டைக் கல்லின் மீது படராமல், அருகில் தூங்குகின்ற களிற்றின் மீது படரும் குன்றினை உடையவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்ற கருத்தினை விளக்கும் பாடல் வரி **“துஞ்சு களிறு இவரும் குன்ற நாடன்”** (குறுந்; பா-36; வ-2) என்பதாகும்.

காட்டிலுள்ள மயிலானது பாறையில் ஈன்ற முட்டைகளைக் கருங்குரங்கின் குட்டி உருட்டி விளையாடும் மலை எனத் தலைவனின் மலையினை விளக்க, **“மயில், குரங்கு”**

போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“கான மஞ்ஞை அறை ஈன் முட்டை; வெயில் ஆடு முசுவின் குருளை உருட்டும்”** (குறுந்; பா-38; வரி-1-2) என்பனவாகும்.

தினைப்புனம் காப்பவரின் கவண்கல்லின் ஒலிக்கு அஞ்சி காட்டு யானை கைவிட்ட பசிய மூங்கிலானது மீனைக் கவர்ந்து கொண்ட தூண்டிலைப்போல விரைந்து நிமிர்தற்கு இடமாகிய காட்டின் தலைவன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **“யானை, மூங்கில், மீன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கான யானை கைவிடு பசுங்கழை; மீன் எறி தூண்டிலின் நிவக்கும்”** (குறுந்; பா-54; வரி-3-4) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

ஆண்குரங்கு இறந்ததால் ஏற்பட்ட கைம்மைத் துன்பத்தினை ஆற்றாத பெண்குரங்கு மரம் ஏறுதலை அறியாத குட்டியைச் சுற்றத்தாருடன் ஒப்பித்து மலையிலிருந்து குதித்துத்தன் உயிரை மாய்த்துக் கொள்ளும் நாட்டை உடையவன் தலைவன், எனத் தலைவனின் மலையினைவிளக்க, **“ஆண்குரங்கு, பெண்குரங்கு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“கருங்கா தாக்கலை பெரும் பிறிது உற்றெனக்; கைம்மை உய்யாக் காமர் மந்தி”** (குறுந்; பா-69; வரி-1-2) என்ற வரிகள் விளக்குகின்றன.

வளைத்து விட்ட மூங்கில் வானத்தைத் தோயும்படி நிமிர்ந்து நிற்கும் குன்றத்தினை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையின் காட்சியினை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“விசும்பு தோய் பசுங்கழைக் குன்ற நாடன்”** (குறுந்; பா-74; வ-2) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

பலாமரங்களை உடைய உயர்ந்த மலைநாட்டுத் தலைவன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **“பலா”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை, **“தீம்பழம் தூங்கும் பலவின்”** (குறுந்; பா-83; வ-4) இவ் வரியானது விளக்குகின்றது.

ஆண்குரங்கு தீண்டியதனால் நழுவிய மணம் வீசும் பலாக் கனியை நீருண்ணும் துறையின்கண் கொண்டு தருகின்ற நாட்டிற்குத் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“குரங்கு, பலா”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை விளக்க, **“கலை தொட இழுக்கிய பூ நாறு பலவுக் கனி”** (குறுந்; பா-90; ப-4) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

அருவியை அடுத்துள்ள வேங்கை மரங்களை உடைய உயர்ந்த மலைநாட்டிற்குரியவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது எனத் தலைவனின் மலையினை விளக்க, **“அருவி**

**வேங்கைப் பெருமலை நாடற்கு"** (குறுந்; பா-96; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

அசைகின்ற மூங்கில்கள் நீண்டு வளர்ந்திருக்கும் மலைப்பக்கத்தின் கண் மெல்லிய நடையை உடைய காட்டுப்பசு இலைகளை விரும்பி உண்ணும் மலையின் தலைவன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **"மூங்கில், காட்டுப்பசு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"ஆடு அமை ஒழுகிய தண்நறுஞ் சாரல்; மென்நடை மரையா துஞ்சும்"** (குறுந்; பா-115; வரி-4-5) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

கொருக்காத் தட்டையை யானையானது கவளமாக உண்ணும் மலைகள் பொருந்திய தலைவனின் மலையினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"கயம் நெடு யானை கவளம் மாந்தும்"** (குறுந்; பா-170; வ-3) என்ற வரி விளக்குகிறது.

பொருத களிறுகளால் மிதிக்கப்பட்ட நெறிந்த அடியை உடைய வேங்கை குறமகளிர் தம்முடைய கூந்தலின் கண்ணே அணிந்து கொள்ளும் பொருட்டு நின்றபடியே மலர்களைக் கொய்யும்படி தாழ்ந்து தரும் அத்தகைய வேங்கை மரம் மலர்தற்கு இடமாகிய நாட்டினையுடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"களிறு, வேங்கை,** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"பொருகளிறு மிதித்த நெரிகாள் வேங்கை"** (குறுந்; பா-208; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

காந்தள் பூவின் நறிய மகரந்தத்தை ஊதுகின்ற தும்பி பாம்பினால் உமிழப்படும் மணியைப் போன்று தோன்றும். மூங்கிலை வேலியாக உடைய மலைகளை உடையவன் தலைவன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **"காந்தள், முந்தூழ், மூங்கில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"சிலம்புடன் கமழும் அலங்கு குலைக் காந்தள்; முந்தூழ் வேலிய மலைகிழவோற்கே"** (குறுந்; பா-239; வரி-3,6) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

வேங்கை மரத்தினது கெடாத மெல்லிய கிளையிலிருந்து மலர்கள் உதிர அங்ஙனம் உதிருமிடத்திலே யானையானது பெறுதற்கரிய உறக்கம் கொள்ளுதலைச் செய்யும் நாட்டை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"வேங்கை, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"ஆங்கு அறிந்திசினே தோழி! வேங்கை; வீயா மென் சினை வீஉக யானை"** (குறுந்; பா-247; வரி-4-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

போர் செய்த யானையினது புள்ளிகளைக் கொண்ட முகத்தை ஒப்ப செங்காந்தள் மலர்கள் பல ஒருங்கே விழுந்திருக்கும் நாட்டை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“யானை, காந்தள்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பொருத யானைப் புகர் முகம் கடுப்ப; ஒண் செங்காந்தள் அவிழும் நாடன்”** (குறுந்; பா-284; வரி-1,3) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

பசிய கண்களை உடைய யானை நறிய தழை உடை அணிந்த மகளிர் ஓட்டுகின்ற கிளிகளோடு குறிய பொற்றைக் கல்லினிடத்துச் செல்லமேல் நோக்கும் மலை நாட்டுத் தலைவன், எனத் தலைவனின் மலையினை விளக்க. **“யானை, கிளி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரியானது பின்வருமாறு, **“புனம் உண்டு கடிந்த பைங்கண் யானை; நறுந்தழை மகளிர் ஓப்பும் கிள்ளையொடு”** (குறுந்; பா-333; வரி-2-3) என்பதாகும்.

ஆண் குரங்கு தன் கையால் தோண்டி எடுத்த மணம் கமழ்கின்ற சுளைகளை உடைய பெரிய பலாப் பழத்தைக் காத்தலைமறந்த வேடன் அதன்பின் பழத்தால் மணமுடைய மரங்கள் தோறும் குரங்குகள் அகப்படுவதற்குரிய வலைகளை மாட்டி வைக்கும் மலை நாடன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **“குரங்கு, பலா”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“கலை கை தொட்ட கமழ்சுளைப் பெரும் பழம்”** (குறுந்; பா-342; வரி-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

இளம் பெண்யானையை விரும்பிய மூங்கில் முளையைப் போன்ற கொம்புகளை உடைய இளங்களிறு குறவர் முழங்கியதனால் ஊர்ப்பொது மன்றத்தைப் பிரிந்து செல்லும் தலைவனின் மலை எனத் தலைவனின் மலையினை விளக்க, **“பிடி, மூங்கில், களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை விளக்க, **“நாகு பிடி நயந்த முளைக்கோட்டு இளங்களிறு”** (குறுந்; பா-346; வ-1) என்ற வரியானது விளக்குகின்றது.

நல்ல யானையானது விண்மீன் வீழ்வதினால் உண்டாகிய ஒளியைக் கண்டு அஞ்சுகின்ற மலையினை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“ஞெகிழியின் பெயர்ந்த நெடுநல் யானை”** (குறுந்; பா-357; வரி-6) என்ற வரியானது விளக்குகின்றது.

பெண் யானையின் கையை ஒத்த பெரிய கதிர்க் கொத்தில் உள்ள தினையை உண்ணுகின்ற கிளிகளை ஓட்டும் குறமகளின் கையிலுள்ள குளிர் என்னும் கருவி ஒலிக்கும் மலைநாட்டுத் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“பிடி, கிளி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பிடிக்கை அன்ன பெருங்குரல்**

**ஏனல்; உண் கிளி கடியும் கொடிச்சி கைக் குளிரே"** (குறுந்; பா-360; வரி-4-5) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

கருங்குரங்கினது கருத்த விரல்களை உடைய ஆணானது பக்கத்திலே தோண்டியதனால் உடைந்து மலரின் மணத்தை வீசுகின்ற பலவினது பழம், காந்தளை உடைய அழகிய சிறிய ஊரினிடத்து மணக்கின்ற ஓங்கிய மலையை உடையவன் தலைவன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **"குரங்கு, பலா, காந்தள்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கடும் பல் ஊகக் கறை விரல் ஏற்றை; புடைத் தொடுபு உடைப் பூ நாறு பலவுக்கனி; காந்தள் அம் சிறுகுடிக் கமழும்"** (குறுந்; பா-373; வரி-5-7) விளக்க இப்பாடல் வரிகள் விளக்குகின்றன.

பலாமரத்திற் பொருந்திய பழத்தை உண்ட திரளை உடைய ஆண்குரங்குகள் பெரிய மூங்கிலினது நீண்ட கோல் அசையப் பாய்கின்ற மலைப் பக்கத்தை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"குரங்கு, மூங்கில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை விளக்கும் பாடல் வரிகள் பின்வருமாறு, **"பலவில் சேர்த்த பழம் ஆர் இனக் கலை; இரு வெதிர் நீடு அமை தயங்கப் பாயும்"** (குறுந்; பா-385; வரி-1,4) என்பதாகும்.

குறிஞ்சி நிலத்தின் இயற்கை வளத்தினை விளக்குகின்ற கருத்தாவது பின்வருமாறு: ***"இயற்கை வளம் நிறைந்த குறிஞ்சியில் உழவர் உழாது இயற்கையாய் விளைந்த உணவுப் பொருட்கள்(மூங்கில், நெல், பலா, வள்ளிக் கிழங்கு, தேன்) உணவாகப் பயன்படுத்திக் கொள்ளப் பட்ட அதே வேளையில் புன்செய் வேளாண்மையும் நடைபெற்றுள்ளது. மென்தினையாணர்த்து எனத் தினை புதுவருவாயாகக் காட்டப்பட்டுள்ளது. மழைபெய்த காலத்து உழுது விதைத்து விளைந்த வரகு, தினை, எள், அவரை போன்ற புது வருவாய்கள் பற்றியும் பேசப்பட்டுள்ளது"*** (முனைவர் பெ.மாதையன்; பெண்டிர் – காதல் - கற்பு; ப-1) என்பர்.

காந்தள் மலரின் தேனையுண்ட அழகிய நிறத்தையுடைய தும்பி ஒலிக்கும் மலை எனத் தலைவனின் மலையினை விளக்க, **"காந்தள்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **"காந்தள் ஊதிய மணி நிறத் தும்பி"** (நற்; பா-17; வ-10) என்பதாகும்.

தினைகளில் பெரிய கதிர்களைக் கைக்கொண்ட மந்தி ஆண்குரங்கோடு சேர்ந்து அகங்கையிலிட்டுக் கசக்கிச் சேர்த்து உண்ணும் மலையை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"மந்தி, குரங்கு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"முந்து விளை பெருங்குரல் கொண்ட மந்தி;**

**கல்லாக் கடுவனொடு நல் வரை ஏறி"** (நற்; பா-22; வரி-2-3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பறியாத குவளை மலரோடு குருதி போன்ற ஒள்ளிய மலராகிய காந்தளைச் சேர்த்து கட்டிய மாலையைச் சூடி சூர்மகள் ஆடும் மலை எனத் தலைவனின் மலையினை விளக்க, **"குவளை, காந்தள்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பறியாக் குவளை மலரொடு காந்தட்"** (நற்; பா-34; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது

பெரிய ஆண்புலி அழகிய நுதலையுடைய கரிய பெண்யானை வருந்துமாறு தாழ்ந்த நீருள்ள அகன்ற இடத்தில் பெரிய ஆண்யானையைத் தாக்கிக் கொல்லும் மலை எனத் தலைவனின் மலையினை விளக்க, **"புலி, பிடி, களிறு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"குறுங்கை இரும் புலிக் கோள்வல் ஏற்றை; பூநுதல் இரும்பிடி புலம்ப தாக்க; தாழ் நீர் நனந் தலைப் பெருங்களிறு அடுஉம்"** (நற்; பா-36; வரி-1-3) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

பெரிய களிற்றைப் புலியானது கொன்றது. அதனால் கரிய பெண்யானை துன்பத்துடன் நெய்தல் இலைகள் போன்ற அழகிய காதுகளையுடைய கன்றை அணைத்துக் கொண்டு செல்லும் மலைப்பகுதி எனத் தலைவனின் மலையினை விளக்க, **"களிறு, உழுவை, பிடி, நெய்தல்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"பெருங்களிறு உழுவை அட்டென இரும்பிடி; நெய்தற் பாசடை புரையும் அம் செவிப்"** (நற்; பா-47; வரி-1,3) போன்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

பெரிய குளிர்ந்த காட்டு மல்லிகையை மிதித்த பரந்த அடியையும் கரிய சேறுபடிந்த நெற்றியையுமுடைய கொல்கின்ற களிறு அறியாமையால் ஈரப்பலா மரத்தை ஒடித்துப் பூக்கள் பரந்து காணப்படும் வேங்கை மரத்தின் கீழே தங்கியிருக்கும் மலைக் கிழவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"மல்லிகை, களிறு, பலா, வேங்கை,** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பெருந்தண் குளவி குழைத்த பாஅடி; இருஞ்சேறு ஆடிய நுதல கொல்களிறு; பேதை ஆசினி ஒசித்த; வீ ததர் வேங்கைய மலை கிழவோற்கே?"** (நற்; பா-51; வரி-8-11) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மலையில் வேங்கை மரநிழலில் வளைந்த கொம்பையுடைய ஆ தன் கன்றோடு வந்து தங்கியது. அது தூங்குநிலை பெற்றதைக் கண்ட பஞ்சுபோன்ற தலையையுடைய பெண் குரங்கு ஆவின் பெரியபால் மடியில் பாலைக் கறந்து தன் குட்டிகளின் கை நிறையக் கொடுக்கும் மலைநாடன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"வேங்கை,**

**குரங்கு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தென; துஞ்சு பதம் பெற்ற துய்த் தலை மந்தி"** (நற்; பா-57; வரி-2-3) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

புலியொடு போரிட்டுப் புண்ணடைந்தது யானை. அவ்யானையின் நல்ல கொம்பை விரும்பிய கானவன் அம்பு எய்தான். அம்பின் அடிபட்டுச் சுழற்சியடைந்த யானை அச்சம் தரும் ஓசை உண்டாக்கும் மலை, எனத் தலைவனின் மலையினை விளக்க, **"புலி, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"புலியொடு பொருத புண் கூர் யானை"** (நற்; பா-65; வ-5) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

முள்ளம் பன்றியின் ஊனைக் கிழங்கோடு சேர்த்துக் காந்தள் நிரம்பிய அழகிய சிறு குடியினருக்குப் பகிர்ந்து கொடுப்பாள். அத்தகைய மலையை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"காந்தள்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை விளக்க, **"காந்தள் அம் சிறுகுடிப் பாக்கம்"** (நற்; பா-85; வரி-10) என்ற வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆண்புலி மணம் கமழும் மலைப் பக்கத்திலே ஆண் யானையோடு போர் செய்தலால் குறவரின் சிறுவர்கள் தொண்டகப் பறையை முழக்குவார்கள். அந்த ஓசை தினைக் கதிர்களைத் திண்ண வருகின்ற கிளியை ஓட்டும் மலைநாடன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"புலி, யானை, கிளி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"பூம்பொறி உழுவைப் பேழ் வாய் ஏற்றை; தேம் கமழ் சிலம்பின் களிற்றொடு பொரினே; பைந்தாட் செந்தினைப் படுகிளி ஓப்பும்"** (நற்; பா-104; வரி-1-2,6) ஆகிய பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கரிய அடிமரத்தையுடைய வேங்கை மரத்தில் வண்டுகள் ஒலிக்கும் அங்கேயுள்ள பக்க மலைகள் தனிமையுறக் களிற்றைக் கொன்று அச்சமற்ற உள்ளத்தோடு பெரிய மலையில் அரிமா திரியும் மலை எனத் தலைவனின் மலையினை விளக்க, **"வேங்கை, களிறு, அரிமா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"அரும்பு அற மலர்ந்த கருங்கால் வேங்கைச்; சுரும்பு இமிர் அடுக்கம் புலம்பக் களிறு அட்டு; உரும்பு இல் உள்ளத்து அரிமா வழங்கும்"** (நற்; பா-112; வரி-2-4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கருப்பம் முதிர்ந்த இளம் பெண்யானை, பெரிய மூங்கில் ஈன்ற கூர்மையான முளையைக் காலை மேய்ச்சலின் போது அறியாது உண்ணும் மலைநாடன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"பிடி, மூங்கில்"** போன்ற கருப்பொருள்கள்

பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை விளக்க, **“சூல் முதிர் மடப்பிடி நாள் மேயல் ஆரும்”** (நற்; பா-116; வ-5) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

பன்றி அஞ்சி ஓடும்படி வைத்து அடார் என்னும் இயந்திரத்தில் வலிய புலி அகப்படும், மலைக்குரியவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“பன்றி, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“ஒண் கேழ் வயப்புலி படூஉம் நாடன்”** (நற்; பா-119; வ-3) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

கொல்லையில் இனிய முசுவின் பெரிய ஆண்குரங்கு நல்ல உணவை உண்ணும் பல மலர்களையுடைய கான்யாற்றுக்கு அப்பால் பெரிய கலைமான் கூட்டமான மலையாட்டு இனத்துடன் பரந்தனவாய்த் தாவும் பெரிய மலை நிழல் என மலையின் காட்சியினை விளக்க, **“குரங்கு, மான்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“இன் முசுப் பெருங்கலை தன் மேயல் ஆரும்; பல்மலர்க் கான் யாற்று உம்பர் கருங்கலை”** (நற்; பா-119; வரி-5-6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

செம்முக மந்தி ஆண் குரங்கோடு களவில் புணர்ந்ததால் வேறுபாட்டைப் பெருஞ்சுற்றம் அறிவதை அஞ்சும். அதனால் வேங்கை மரத்தின் கிளையின் மேல் சென்று சுனை நீரில் தனது சிதறிய மயிரைத் திருத்தும் மலைநாடன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“மந்தி, வேங்கை,”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **“செம்முக மந்தி செய்குதி கருங்கால்; பொன் இணர் வேங்கைப் பூஞ் சினைச் செலீஇயர்”** (நற்; பா-151; வரி-8-9) விளக்க போன்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சினமுள்ள கரிய புலி, புள்ளி முக யானையை வருந்தும்படி தாக்கி, அதன் குருதியைப் பருகிய கொழுமையான கன்னத்தையுடைய தன் பெரிய அடியை வேங்கை மர அடிப்பாகத்தில் துடைக்கும் உயர்ந்த மலை, எனத் தலைவனின் மலையினை விளக்க, **“புலி, வேழம், வேங்கை,** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“விடர் முகைச் செறிந்த வெஞ்சினை இரும்புலி; புகர் முக வேழம் புலம்பத் தாக்கி; வேங்கை முதலொடு துடைக்கும்”** (நற்; பா-150; வரி-5-6,8) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

யானையின் முகத்திலே காணப்படும் வரிகள் போன்ற அரும்பு மலர்ந்த ஒள்ளிய செங்காந்தள் மலர்களும், வாழை மரங்களுமுள்ள அழகிய மலையில் யாழ் ஒலியைக் கேட்பது போன்ற இனிய குரலையுடைய மலைச்சாரல் என மலைச் சாரலினை விளக்க, **“யானை, காந்தள், வாழை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை

விளக்க, **“நிரைத்த யானை முகத்து வரி கடுப்பப்; போது பொதி உடைந்த ஒண்செங் காந்தள்; வாழை அம் சிலம்பின் வம்பு படக் குவைஇ”** (நற்; பா-176; வரி-5-7) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மலைப்பக்கத்தில் தழைத்த வாழையின் வளைந்த மடல் ஈன்ற கூரிய நுனியையுடைய குவிந்த மொட்டானது செங்காந்தளின் பெரிய இதழிலே தோயும் மலை எனத் தலைவனின் மலையினை விளக்க, **“வாழை, காந்தள்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“படுநீர்ச் சிலம்பில் கலித்த வாழைக்; மெல் விரல் மோசை போல காந்தள்”** (நற்; பா-188; வரி-1,4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

குருதி வேட்கையுடைய அச்சத்தை உண்டாக்கும் வலிய புலி உடல் வலிமை மிகுந்த இளைய களிற்றை எதிர்பார்க்கும் மரங்கள் நெருங்கிய சோலையில் ஆட்டு மந்தை போல கரிய கரடிக்கூட்டம் திரியும், என மலைச் சாரலினை விளக்க, **“புலி, களிறு, கரடி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“குருதி வேட்கை உருகெழு வய மான்; வலிமிகு முன்பின் மழ களிறு பார்க்கும்”** (நற்; பா-192; வரி-1-2) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

யானை கரிய நிறத்தையுடைய வலிமையான புலி அஞ்சியோட பக்கத்திலுள்ள கரிய அடிமரங்கொண்ட வேங்கை மரத்தை முறித்துத் தள்ளித் தன் சினத்தைத் தணித்துக் கொள்ளும் எனத் தலைவனின் மலையினை விளக்க, **“யானை, புலி, வேங்கை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“காண் தொறும் பொலியும் கமழ் வாய் வேழம்; இருங்கேழ் வயப்புலி வெரீஇ அயலது; கருங்கால் வேங்கை ஊறுபட மறலி”** (நற்; பா-217; வரி-2-4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பலா, வாழை உயர்ந்த சுர புன்னை மரங்கள் பொருந்திய மலையில் பெண்யானை உறங்கும் மேகம் வந்து அதனை மறைக்கப் பெண் யானையைக் காணாத பெரிய ஆண்யானை பிளிறும் அவ்வாறாய சோலையுடைய தலைவனின் மலை எனத் தலைவனின் மலையினை விளக்க, **“பலா, வாழை, சுரபுன்னை, பிடி, களிறு,”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள் பின்வருமாறு. **“செலவுடன் விடுகோ தோழி! பலவுடன்; வாழை ஓங்கிய வழை அமை சிலம்பில்; துஞ்சு பிடி மருங்கின் மஞ்சுபட காணாது: பெருங்களிறு பிளிறும் சோலை அவர்”** (நற்; பா-222; வரி-6-9) என்ற வரிகள் விளக்குகின்றன.

முருகன் போன்ற வலிமையோடு கடுஞ்சினம் கொண்டு போர் செய்த யானையின் குருதி படிந்திருப்பது போல வாழைமரம் ஈன்ற வாழைப்பூவோடு பூக்கள் அசையும் மலையினை உடையவன் தலைவன் எனத் தலைவனின் மலையினை விளக்க **“முருகன், யானை, வாழை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க,

**"முருகுன உறழ் முன்பொடு கடுஞ்சினம் செருக்கிப்; பொருத யானை வெண்கோடு கடுப்ப; வாழை ஈன்றவை ஏந்து கொழு முகை"** (நற்; பா-225; வரி-1-3) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

முருகன் எனும் தெய்வம் கருப்பொருள்களுள் ஒன்றாகக் கருதப்படுவதை விளக்கும் சான்றுக் கருத்தாவது பின்வருமாறு: ***"மக்கள் வாழும் நிலத்தியல்புக்கு ஏற்ப அவர்தம் மனத்தியல்பாகிய தெய்வங்கொள்கையும் வழிபாட்டுமுறைகளுந் தோன்றி நிலைபெறுவனவாதலின் தெய்வக் கொள்கையினையும் கருப்பொருள்களுள் ஒன்றாகவே பண்டைத் தமிழாசிரியர் வகுத்துரைப்பாராயினர்"*** (வெள்ளை வாரணன்; தொல்காப்பியம் நுதலிய பொருள்+ வரலாறு; ப-2) என்பதாகும்.

பழைமையான வலிமையோடு யானை தன் பகையான புலியின் மேல் மிகவும் சினந்து போர் செய்து கொம்பால் குத்திப் புலியைக் கொன்றது. அதனால் பட்ட குருதிக் கறையை மழையில் கழுவும் மலைநாடன், எனத் தலைவனின் மலையினை விளக்க, **"யானை, புலி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"கொன்ற யானைச் செங்கோடு கழாஅ"** (நற்; பா-247; வரி-2) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

பொன் போன்ற மலரையுடைய வேங்கை மரம் ஓங்கிய மணம் கமழ் சாரலில் பெரிய மலைநாடனொடு கரிய புனத்துத் தங்கி, சிவந்த வாயையுடைய பசிய கிளிகளை ஓட்டி, மலைச் சாரலில் வளர்ந்த சந்தனத்தின் தேய்வையை வண்டு படப்பூசி அமைந்த தலைவன் தலைவி இருவரும் புணர உதவியாக இருந்த மலைச் சாரலினை விளக்க, **"வேங்கை, கிளி, சந்தனம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை விளக்கும் பாடல் வரிகளாவன, **"வேங்கை ஓங்கிய தேம் கமழ் சாரல்; செவ்வாய்ப் பைங்கிளி ஓப்பி அவ்வாய்ப்; சாரல் ஆரம் வண்டு பட நீவி"** (நற்; பா-259; வரி-2,4,6) என்பதாகும்.

மூங்கில் நிரம்பி கொறுக்காந்தட்டை முளைத்து நிறைந்தது பெரிய மலை அதில் நிலையான வலிமையோடு மாறுபட்டு மிகவும் சினந்து புலியைக் கொன்றது யானை. அதன் கொம்பில் சிவந்த நிறத்தைப் போன்றது அரும்பு அவிழ்ந்த காந்தள் மலர் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"மூங்கில், புலி, யானை, காந்தள்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"மாயம் அன்று தோழி! வேய் பயின்று; கொன்ற யானைக் கோடு கண்டன்ன; செம்புடைக் கொழு முகை அவிழ்ந்த காந்தள்"** (நற்; பா-294; வரி-3,6-7) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

ஆண்யானை, பெண்யானையோடு சேர்ந்து பொலிவு பெற்ற முகத்தோடும் புள்ளியோடும் செல்கின்றது. தினைக்கதிர் பவளம் போலச் சிவந்த வாயுடைய பசிய

கிளிகள் கவர்ந்து செல்கின்ற உயர்ந்த மலைநாடன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"பிடி, ஒருத்தல், கிளி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"நீடு இருஞ் சிலம்பின் பிடியொடு புணர்ந்த; பூம்பொறி ஒருத்தல் ஏந்து கை கடுப்ப; பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரும்"** (நற்; பா-317; வரி-1-2,4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

சிவந்த முகத்தோடு கூடிய மந்தி உயர்ந்த மூங்கிலில் ஊசலாடித் தொங்கியது. மலையிலுள்ள வேங்கை மரத்தின் கிளையிலேறி நறிய மலர்கள் மலைச் சுனையில் உதிரும்படி செய்தது. அதன் பின்னர் கடுவனோடு திளைத்தது எனத் தலைவனின் மலையினை விளக்க, **"மந்தி, மூங்கில், வேங்கை,"** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"கரு விரல் மந்திச் செம் முகப் பெருங்கிளை; பெருவரை அடுக்கத்து அருவி ஆடி; ஓங்கு கழை ஊசல் தூங்கி வேங்கை"** (நற்; பா-334; வரி-1-3) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

சந்தனத்தை அழகு விளங்கும் மார்பில் பூசுபவனாகிய தலைவனின் மலை உயர்ந்த மூங்கிலையுடைய பெரிய மலையகத்துப் பிளப்பிடமெங்கும் எதிரொலிக்கக் கரிய புலி களிற்றைத் தொலைத்து முழங்கும் முழக்கம் இடி முழக்கம் எனக் கருதுவான். அத்தகைய மலையாகும் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"ஆரம், புலி, களிறு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"ஆரம் நீவிய அணி கிளர் ஆகம்; பெருங்கல் விடரகம் சிலம்ப இரும்புலி; களிறு தொலைத்து உரறும் கடி இடி மழை செத்து"** (நற்; பா-344; வரி-6,9-10) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

காந்தள் பூக்குலையின் வாயில் கொழுவிய மடலையுடைய வாழை மரத்தின் அழகிய மடல் தோயும் போது அம்மடலில் பட்ட அருவியின் இனிய நீரைச் செம்முக மந்தி பருகும் மலைநாடன் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"காந்தள், வாழை, மந்தி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"முலைவாய் உறுக்கும் கைபோல் காந்தட்; குலைவாய் தோயும் கொழு மடல் வாழை; செம்முக மந்தி ஆரும் நாட** (நற்; பா-355; வரி-3-5) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

நெடிய மூங்கில் உயர்ந்த நிழல் படும் மலையில் முதிர்ந்த கருப்பமுடைய வலிய பெண் யானை கன்றையீன வருந்தியது. அதன் பசி தீர்க்க விரும்பிய ஆண்யானை அதனால் மகிழ்ச்சி மிக்கு வளைந்த தினைக் கதிரைக் கவர்ந்தது. அது கண்ட கானவன் எரி கொள்ளியை எறிந்தான். கடுஞ்செலவினையுடைய அது மூங்கில் நெருங்கிய மலைச் சாரல் எனத் தலைவனின் மலையினை விளக்க, **"கழை, பிடி, வேழம், வேய்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை **"நெடுங்கழை நிவந்த நிழல் படு சிலம்பின்; கடுஞ்சூல் வயப்பிடி கன்று ஈன்று உயங்க; வாலா வேழம் வணர் குரல் கவர்தலின்; வேய் பயில் அடுக்கம் சுடர மின்னி"** (நற்; பா-393; வரி-1-2,4,6) போன்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

மணக்கும் காந்தள் பூ வண்டு உண்ணுதற்கு மலரும் வாழையிருக்கும் அழகிய பக்கமலையில் பன்றி பறித்த நிலத்தின் மேலே எழுந்த மணிகளின் ஒளி விளங்கும் வெளிச்சத்தில் கன்றையீன்ற பெண்யானை ஆண்யானை தன்னைக் காத்து நிற்கும் மலை என மலையின் காட்சியினை விளக்க, **"காந்தள், வாழை, கேழல், பிடி, களிறு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை விளக்கும் பாடல் வரிகள் பின்வருமாறு, **"குருதி ஒப்பின் கமழ் பூங் காந்தள்; வாழை அம் சிலம்பில் கேழல் கெண்டிய; ஒளி திகழ் விளக்கத்து ஈன்ற மடப்பிடி; களிறு புறங்காப்ப கன்றொடு வதியும்"** (நற்; பா-399; வரி-2,4,6-7) என்பதாகும்.

இவ்வாறு மேலே கூறப்பட்டுள்ள அனைத்துப் பாடல்களும் தலைவனின் மலையினை விளக்கி நிற்கின்றன.

**திருமணம்**

பசிய புதர்கள் சூழ்ந்த வேங்கை மரங்களும் ஒளியுடை பூங்கொத்துகள் மலர்கின்ற காலம் எனத் திருமணக் காலத்தினை விளக்க, **"வேங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை, **"வேங்கையும் ஒள் இணர் விரிந்தன"** (அகம்; பா-2; வ-16) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

மன்றத்தில் உள்ள வேங்கை மரங்கள் மண நாளினை உணர்த்த பூத்தன என மணநாளினை விளக்க, **"வேங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"மன்ற வேங்கை மணநாட் பூத்த"** (அகம்; பா-232; வ-7) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

வேங்கை மலர்கின்ற காலத்தைப் பார்த்துப் பெருத்த முன்கையை உடைய பணை போன்ற தோளையுடைய தலைவியைத் திருமணம் செய்வான் தலைவன் எனத் திருமணத்தினை விளக்க, **"வேங்கை, பணை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **"வேங்கை விரிவு இடம் நோக்கி; வீங்கு இறைப் பணைத் தோள் வரைந்தனன் கொளற்கே"** (கலி; பா-38; வரி-25-26) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நல்ல நாளை அறிவுறுத்தும் வேங்கையும் மலர்க எனக் கூறியதில் இருந்து அறுவடை செய்யும் நாள் வந்தது. எனவே விரைவாக வரைந்து மணம் புரிக என்பதனை விளக்க, **"வேங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. திருமண நாள் வர வேண்டும் என்பதை விளக்க. **"நல்நாள் வேங்கையும் மலர்கமா இனி என"** (நற்; பா-206; வ-7) என்ற வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

வேங்கை மரங்களும் மலர்களை ஈன்றன எனத் திருமணப் பருவம் வந்துற்றதை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“வேங்கையும் புலி ஈன்றன அருவியும்”** (நற்; பா-389; வ-1) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

**தலைவியின் அழகு நலம்**

மிகுந்த அழகையுடைய மூங்கில் போன்ற பருத்த தோள், எனத் தலைவியின் தோளினை விளக்க, **“வேய்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வெறுத்த ஏஎர் வேய் புரை பணைத்தோள்”** (அகம்; பா-2; வ-11) எனும் பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது

அகன்ற மலையில் உள்ள வளைந்த மூங்கிலின் கணுக்களுக்கு இடையேயான இடத்தைப் போன்ற தோளை உடையவள் தலைவி எனத் தலைவியின் தோளினை விளக்க, **“அமை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை, **“வாங்கு அமைக்கண் இடை கடுப்பயாய்”** (அகம்; பா-18; வ-17) விளக்க இப்பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

வரிகளையுடைய முன்கையை உடைய மூங்கில் போன்ற தோள் எனத் தலைவியின் தோளினை விளக்க, **“பணை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“சாய் இறைப் பணைத் தோட் கிழமை தனக்கே”** (அகம்; பா-32; வ-18) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

நெய்தல் மலரைப்போன்ற நின் மகளின் மை பூசப்பெற்ற கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **“நெய்தல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“ஆய்மலர் உண்கண் பசலை”** (அகம்; பா-52; வ-14) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

‘நெய்தல்’ மலர் கண்களுக்கு ஒப்பாக விளங்குவதற்கான சான்றுக் கருத்து பின்வருமாறு; ***“நெய்தலாகிய கருங்குவளை மலரையும் செங்குவளையாகிய செங்கழுநீர் மலரையும் மகளிரது கண்களுக்கு உவமிப்பது புலவர் தம் மரபாகும்”*** (கு.சீநிவாசன்; சங்க இலக்கியத் தாவரங்கள்; ப.33) என்கிறார்.

மூங்கில் போன்ற தோளையும் கரிய தண்டை உடைய குவளையின் இரண்டு மலர்களை இணைத்து வைத்தாற் போன்ற கண்களை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“பணை, குவளை”** போன்ற கருப்பொருள்கள்

பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“ஆகத்து அரும்பிய முலையள் பணைத்தோள்; மாத்தாட் குவளை மலர் பிணைத்தன்ன”** (அகம்; பா-62; வரி-3-4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

நீண்ட மெல்லிய மூங்கிலைப்போன்ற தோளை உடையவள் தலைவி, எனத் தலைவியின் தோளினை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“நெடு மென் பணைத் தோள் இவளும் யானும்”** (அகம்; பா-92; வ-6) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

அழகிய மூங்கிலைப் போன்ற மென்மையான தோளை உடையவள் எனத் தலைவியின் தோளினை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“அம்பணை மென்தோள் ஆய்இதழ் மழைக் கண்”** (அகம்; பா-132; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

குவளை மலரைப் போன்ற தலைவியின் மையுண்ட கண்கள், எனத் தலைவியின் கண்களை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“குவளை உண்கண் தெண்பனி மல்க”** (அகம்; பா-138; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

ஆண் யானைகளைக் கொடையளித்து மகிழும் பாரம் என்ற ஊரின் தலைவனின் ‘ஏழில்’ என்ற மலையின் ‘பாழி’ என்ற பக்கமலையில் மயில்களின் தோகையை ஒத்திருந்த தலைவியின் கூந்தல் எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“யானை, மயில்”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“இசைநல் ஈகைக் களிறுவீசு வண்மகிழ்ப்; களிமயிற் கலாவத் தன்ன தோளே”** (அகம்; பா-152; வரி-11,14) போன்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

காந்தள் மலருள்ளும் அழகிய மலர் ஒன்று சேர்ந்து மணப்பது போன்ற நறுமணம் கமழுகின்றது தலைவியின் தோள் எனத் தலைவியின் தோளினை விளக்க, **“காந்தள்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“கடவுட் காந்தளுள்ளும் பல உடன்”** (அகம்; பா-152; வ-17) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

ஆய் என்பவன் பெரிய யானைகளை உடையவன் மலையில் உள்ள மூங்கில் கணுக்களின் நடுவிடம் போல் உள்ளன. தலைவியின் தோள் எனத் தலைவியின் தோளினை விளக்க, **“யானை, மூங்கில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **“மாஅல் யானை ஆஅய் கானத்துத்; வேய் அமைக் கண் இடை புரைஇச்”** (அகம்; பா-152; வரி-21,23) போன்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மூங்கில் போன்ற அழகு ஒழியாது விளங்குபவள் தலைவி எனத் தலைவியின் தோளினை விளக்க, **“பணை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பணைக்கவின் அழியாது துணைப்புணர்ந்து என்றும்”** (அகம்; பா-178; வ-15) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

குவளையின் தேன் பாயும் நறுமண மலர்களைச் சூடிய கூந்தல் உடையவள் தலைவி எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“மல்லல் அறைய மலர் சுனைக் குவளைத்”** (அகம்; பா-308; வ-11) எனும் பாடல் வரி விளக்குகின்றது.

பொதிய மலையின் சாரலில் உள்ள காந்தள் மலரைப் போல் நறுமணம் கமழும் நெற்றியை உடையவள் தலைவி எனத் தலைவியின் நெற்றியினை விளக்க, **“காந்தள்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“சினை ஒண்காந்தள் நாறும் நறுநுதல்”** (அகம்; பா-338; வ-7) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

அழகிய பீலியாகிய சிறந்த தோகையையுமுடைய மயில்கள் இனிய குரலை உடையன, கண்ணை ஒத்த இதழ்களை உடைய குளிர்ந்த குவளை மலரின் குறிய மாலையைக் கூந்தலில் சூடியவள், எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மயில், குவளை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“காமர் பீலி ஆய் மயில் தோகை; கண்நேர் இதழ்தண் நறுங்குவளைக்”** (அகம்; பா-358; வரி-2,5) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.மூங்கிலைப் போன்ற மென்மையான தோளையுடைய குறவரின் மங்கையர், என மங்கையரை விளக்க, **“அமை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“வாங்கு அமைமென் தோட் குறவர் மடமகளிர்”** (கலி; பா-39; வ-16) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

நெய்தல் மலர் போன்ற மையூட்டப் பெற்ற கண்கள், மூங்கிலைப்போன்ற தோள்களை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“நெய்தல், மூங்கில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“நெய்தல் இதழ் உண்கண் நின்கண் ஆக என்கண் மன; வேய்புரை மென்தோட் பசலையும் அம்பலும்”** (கலி; பா-39; வரி-44,48) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மூங்கில் போன்ற தோளினை உடையவள் தலைவி எனத் தலைவியின் தோளினை விளக்க, **“பணை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஆய் நுதல் அணி கூந்தல் அம் பணைத் தட மென்தோள்”** (கலி; பா-40; வ-8) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

யானையுடன் புலி போரிட்டுத் துதைத்துத் திரியும் தலைவனின் அகன்ற மலையில் உள்ள மூங்கில் போல் விளங்குவன தலைவியின் தோள், எனத் தலைவியின் தோளினை விளக்க, **“களிறு, புலி, அமை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“புகர் முகக் களிறொடு புலி பொருது உழக்கும் நின்; அகன் மலை அடுக்கத்த அமை ஏய்க்கும் என்பதோ”** (கலி; பா-45; வரி-12-13) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

தலைவனின் பக்க மலையிடத்துள்ள தீயைப்போன்ற வேங்கையின் மலர்க் கொத்தை ஒக்கும் தலைவியின் அழகு எனத் தலைவியின் அழகினை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“விடர் வரை எரி வேங்கை இணர் ஏய்க்கும் என்பதோ”** (கலி; பா-45; வ-17) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

தோள் மூங்கிலின் தன்மை உடையது. மெல்ல நடக்கும் மயிலின் சாயல், சொல்லும் சொற்கள் கிளியின் குரலைப் போன்றன எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“வேய், மயில், கிளி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“வேய் அமன்றன்று மலையும் அன்று; மெல்ல இயலும் மயிலும் அன்று; சொல்லத் தளரும் கிளியும் அன்று”** (கலி; பா-55; வரி-11,13-14) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஞாழல் என்ற மரத்தின் கொத்துக்களைப் பறித்து முடியில் சூடிய கூந்தலினை உடையவள் தலைவி எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“ஞாழல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“கொழு நிழல் ஞாழல் முதிர் இணர் கொண்டு”** (கலி; பா-56; வ-2) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

மான் போன்ற பார்வை மயிலைப் போன்ற நடையினை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மான், மயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“ஆய் தூவி அணம் என அணி மயிற் பெடை என; மாதர் கொள் மான் நோக்கின் மட நல்லாய்! நிற் கண்டார்ப்”** (கலி; பா-56; வரி-15,17) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மூங்கில் போன்ற தோளினை உடையவள். கோங்க மரத்தின் அரும்பைப் போலவும், அடி வரைந்து கண்ணுக்குப் புலப்படும் குரும்பை போன்ற கொங்கைகளையும் உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“அமை, கோங்கு, குரும்பை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நுணங்கு அமைத்திரள் என நுண் இழை அணை என; முதிர் கோங்கின் முகைஎன முகம் செய்த குரும்பை என”** (கலி; பா-56; வரி-19,23) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மூங்கிலைப் போல் திரண்ட தோள், மான் போன்ற பார்வை, மயில் போன்ற சாயலையும் உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மூங்கில், மான், மயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை விளக்க, **“வேய் எனத் திரண்ட தோள்வெறி கமழ் வணர் ஐம்பால்; மா வென்ற மட நோக்கின் மயில் இயல் தளர்பு ஒல்கி”** (கலி; பா-57; வரி-1-2) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கிளி, மயில் போன்ற பறவைகள் கருப்பொருள்களாக அதிகம் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை விளக்குகின்ற சான்றுக் கருத்தாவது பின்வருமாறு; ***“குறிஞ்சித் திணையில் மயில், கிளி, வண்டு, அசுணம், கிள்ளை, முருகு, கூகை, கோழி, வாரணம்(கானங்கோழி), சிதர், சேவல், தும்பி, பருந்து போன்ற பறவைகள் அதிகமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன”*** (ஆ.சிவலிங்கனார்; தொல்காப்பிய உரைவளம் அகத்திணையியல்; (ப.ஆ); ப-145) என்பர்.

அசோக மரத்தின் குளிர்ந்த சோலையிடத்து நின்ற மிக்க அழகையுடைய மாமரத்தின் தளிர் போன்ற மாநிறத்தை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“அசோகம், மா”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“பொழி பெயல் வண்மையின் அசோகம் தண் காவினுள்; கழி கவின் இளமாவின் தளிர் அன்னாய்! அதன் தலை”** (கலி; பா-57; வரி-12-13) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பெண் மானின் மருண்ட பார்வை விழுந்து முளைக்காத முல்லை அரும்பைப்போன்ற இடையை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மான், முல்லை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பேர் எழில் மலர் உண்கண் பிணை எழில் மான் நோக்கின்”** (கலி; பா-58; வ-2) என்ற வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

தாமரை வளையம் போல் விளங்கும் முத்துப் பதித்த தொடியணிந்த முன்கை அழகிய அலர்களை உடைய காந்தளின் வடிவுடைய துடுப்பு எனச் சொல்லும் முன்கையை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“தாமரை, காந்தள்,** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“தளை நெகிழ் பிணி நிவந்த பாசடைத் தாமரை; அடுக்கம் நாறு அலர் காந்தள் நுண் ஏர் தண் ஏர் உருவின்”** (கலி; பா-59; வரி-1,3) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

குவளை மலருடன் மாறுபட்டுப் புணரும்போதெல்லாம் பொலிவு உண்டாகுமாறு பூத்த கண்களை முல்லையரும்புடன் மாறுபடும் பற்களை உடையவள் எனத் தலைவியின் அழகு

நலத்தினை விளக்க, **“குவளை, முல்லை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“குவளையும் நின் உழவு அன்றோ இகலி; முகை மாறு கொள்ளும் எயிற்றாய்! இவை அல்ல”** (கலி; பா-62; வரி-16-17) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

வேங்கைப் பூவின் அழகைக் கொண்ட சுணங்குடைய உடல் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஆங்கு ஆக! அத் திறம் அல்லாக்கால் வேங்கை வீ”** (கலி; பா-62; வ-26) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

குளிர்ந்த மலராகிய குவளையின் மணம் உள்ளே கமழும் கூந்தலை உடையவள் தலைவி எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“பாசடை நிவந்த பனிமலர்க் குவளை”** (ஐ.நூறு; பா-225; வ-2) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

சந்தனத்தின் மணம் கமழும் நறியவளின் கூந்தல் எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“சாந்தம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதனை விளக்க, **“சாந்தம் நாறும் நறியோள்”** (ஐ.நூறு; பா-240; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

சந்தன மரத்தை அறுத்துச் சுட்டதால் அதனுடைய நறுமணம் புகை சூழ்ந்து காந்தள் மலருடன் மணம் கமழும் நெற்றியை உடையவள் எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“சாந்து, காந்தள்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **“குன்றக் குறவன் ஆரம் அறுத்தென, நறும்புகை சூழ்ந்து காந்தள் நாறும்”** (ஐ.நூறு; பா-254; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மலர்ந்த காந்தளின் மணம் வீசும் நீர்வடியும் கண்களை உடையவள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **“காந்தள்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“மலர்ந்த காந்தள் நாறிக்”** (ஐ.நூறு; பா-259; வ-5) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

நறுமணம் வீசும் காந்தளின் பூக்குலை போன்ற கைகள், மயில் போன்ற சிறப்பையும் உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“காந்தள், மயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“சிலம்பு கமழ் காந்தள் நறுங்குலை அன்ன; தோகை மாட்சிய மடந்தை”** (ஐ.நூறு; பா-293; வரி-1,4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

நீர்ச்சுனையுள் பூத்த அகன்ற வாயையுடைய குவளை மலர் போன்ற கண்களையும், மயில் போன்ற சாயலையும் உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"குவளை, மயில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையும்; தன்போல் சாயல் மஞ்ஞைக்கும் அரிதே"** (ஐ.நூறு; பா-299; வரி-2,5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மயில் போன்ற மென்மைத் தன்மை உடையவள், எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"மயில்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"பயிலியது கெழீஇய நட்பின் மயில் இயல்"** (குறுந்; பா-2; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

நரந்தம் பூவின் மணம் கமழ்கின்ற தொகுதியான கூந்தலை உடையவள் தலைவி எனத் தலைவியின் கூந்தலை விளக்க, **"நரந்தம்பூ"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டள்ளது. இதனை, **"நரந்தம் நாறும் குவை இருங் கூந்தல்"** (குறுந்; பா-52; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

காந்தள் மலரையும் செவ்விய மலர்களாகிய முல்லை மலர்களையும், குவளை மலர்களையும் ஒன்று சேர்த்திய மாலை போன்ற நறுமணம் உடையது தலைவியின் உடல் எனத் தலைவியின் உடல் மணத்தை விளக்க, **"காந்தள், முல்லை, குவளை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கோடல் எதிர் முகைப் பசுவீ முல்லை; நாறு இதழ்க் குவளையொடு இடையிடுபு விரைஇ"** (குறுந்; பா-62; வரி-1-2) விளக்க என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மூங்கிலைப் போன்ற பெரிய தோள்களை உடையவள் தலைவி எனத் தலைவியின் தோளினை விளக்க, **"பணை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது இதனை விளக்க, **"மணத்தற்கு அரிய பணைப் பெருந் தோளே"** (குறுந்; பா-100; வ-7) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

தாமரைப்பூப் போன்ற மையுண்ட கண்களை உடையவள் தலைவி எனத் தலைவியின் கண்களை விளக்க, **"தாமரை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பூப்போல் உண்கண் பொன் போல் மேனி"** (குறுந்; பா-101; வரி-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மயிலினது பீலியைப் போன்று தழைத்த மெல்லிய கூந்தல் எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **"மயில்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

**“கலி மயிற் கலாவத்தன்ன இவள்”** (குறுந்; பா-225; வ-6) விளக்க என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

தண்ணிய நறிய காந்தள் அரும்புகள் மலர்ந்து அமையாதனவாய் மணம் வீசுகின்ற நெற்றியையும், தாமரைப் பூவைப் போன்ற குளிர்ச்சியான கண்களையும் உடையவள் தலைவி எனத் தலைவியன் அழகு நலத்தினை விளக்க, **“காந்தள், தாமரை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“அருவி ஆர்ந்த தண் நறுங்காந்தள்; பல் இதழ் மழைக்கண் மாஅயோயே”** (குறுந்; பா-259; வரி-2,4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மெல்லிய மூங்கிலைப் போன்ற தோள்களை உடையவள் தலைவி எனத் தலைவியின் தோளினை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை விளக்க, **“நெடு மென் பணைத்தோள் அடைந்திசினோரே”** (குறுந்; பா-268; வ-6) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மூங்கிலைப் போன்ற தோள்களை உடையவள் தலைவி, எனத் தலைவியின் தோள் அழகினை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பணைத் தோட் குறுமகள் பாவை தைஇயும்”** (குறுந்; பா-276; வ-1) விளக்க என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மணம் வீசுகின்ற அகிற்புகையும், சந்தனப் புகையும் மணக்கின்ற கருமணலைப் போன்ற கரிய கூந்தலையுடையவள் எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“அகில், ஆரம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“அமிழ்தம் ஊறும் அம் செவ்வாய் கமழ் அகில்; ஆரம் நாறும் அறல் போல் கூந்தல்”** (குறுந்; பா-286; வரி-2-3) விளக்க பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பல்வேறு மரங்கள் கருப்பொருளாகப் பயன்படுத்தப்பட்டதனை விளக்கும் சான்றுக் கருத்து: ***“ஆமை, ஆரம், ஈங்கை, கடம்பு, கழை, செயலை, பனை, அசோகு, பலவு, பலா, மராஅம்(வெண்கடம்பு), மா, முருக்கு, மூங்கில், வாழை, வேங்கை, வேம்பு, வேய் முதலான மரங்கள் சுட்டப் பெற்றுள்ளன”*** (ஆ.சிவலிங்கனார்; அகத்திணையியல்; தொல்காப்பிய உரை வளம்;(பதிப்பு); ப-144) என்பதாகும்.

குவளையின் மணத்தை உடைய கரிய கூந்தலையும் ஆம்பலின் மணத்தை உடைய சிவந்த வாயையும், தாமரைப் பூந்தாதைப் போன்ற நுண்ணிய தேமற் புள்ளிகளையும் உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“குவளை, ஆம்பல், தாமரை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“குவளை நாறும்**

**குவை இருங்கூந்தல்; ஆம்பல் நாறும் தேம்பொதி துவர் வாய்; குண்டு நீர்த் தாமரைக் கொங்கின் அன்ன"** (குறுந்; பா-300; வரி-1-3) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

கரிய இதழை உடைய குவளை மலரைப் போன்ற மையுண்ட கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **"குவளை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **"குவளை உண்கண் கலுழப்"** (குறுந்; பா-339; வ-6) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மூங்கிலினது அழகு நெகிழ்ந்த தோள்களை உடையவள் தலைவி எனத் தலைவியின் தோளினை விளக்க, **"பனை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"பனி கால் போழ்ந்து பணை எழில் ஞெகிழ் தோள்"** (குறுந்; பா-357; வ-2) என்ற இப்பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆம்பலின் உள்துளையுடைய திரண்ட தண்டுகளின் நார் உரித்தது போன்ற மாமை நிறத்தை உடையவள், குவளை மலர் போன்ற கண்களை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"ஆம்பல், குவளை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"நீர்வளர் ஆம்பல் தூம்புடைத் திரள் கால்; குவளை அன்ன ஏந்து எழில் மழைக்கண்"** (நற்; பா-6; வரி-1,3) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

பசிய இலைகளையுடைய அழகு மிக்க நெய்தலின் மலரைப் போன்ற தலைவியின் கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **"நெய்தல்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"சிறு பாசடைய செப்பு ஊர் நெய்தல்"** (நற்; பா-23; வ-7) என்ற வரி விளக்குகின்றது.

சிறந்த மூங்கில் போன்ற அழகுள்ள தோளையுடையவள் எனத் தலைவியின் தோளினை விளக்க, **"மூங்கில்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **"வேய் வனப்புற்ற தோளை நீயே"** (நற்; பா-82; வ-2) என்பதாகும்.

குவளை மலர் போன்ற மையுண்ட கண்களை உடையவள் தலைவி எனத் தலைவியின் கண்களை விளக்க, **"குவளை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **"குவளை உண்கண் மகிழ்மட நோக்கே"** (நற்; பா-77; வ-12) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

மூங்கில் போன்ற பருத்த தோள்களையுடையவள் தலைவி எனத் தலைவியின் தோளினை விளக்க, **"மூங்கில்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"வேய் மருள் பணைத்தோள் விறல் இழை நெகிழவும்"** (நற்; பா-85; வ-2) விளக்க என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

குளிர்ந்த சந்தனம் அதனுடன் சில பொருள்கள் சேர்த்துப்பூசிய கலவையைப் பூசிய கூந்தலை உடையவள் எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“சாந்தம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்”** (நற்; பா-140; வ-2) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

பொய்கையிலே பூத்த குவளை மலர் ஒன்றோடொன்று எதிர் வைத்துத் தொகுத்த மாலை போன்ற கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“முது நீர் இலஞ்சிப் பூத்த குவளை”** (நற்; பா-160; வ-8) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

கயல்மீன் போன்ற மையுண்ட கண்களை உடையவள் தலைவி, எனத் தலைவியின் கண்களை விளக்க, **“கயல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“கயல் ஏர் உண்கண் குறுமகட்கு”** (நற்; பா-220; வ-9) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

ஓரியின் செருக்கித் திரியும் மயிலின் கலாபம் போன்ற தழைத்த மெல்லிய கூந்தலையுடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மயில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“கலி மயில் கலாவத்து அன்ன இவள்”** (நற்; பா-265; வ-8) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

குறிஞ்சியின் அன்றலர்ந்த மலர் போன்ற மேனி, குவளை மலர்களைப் போன்ற கண்கள், மயிலின் சாயல், கிளியையொத்த மொழி, மூங்கில் போன்ற தோள்களையுடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“குறிஞ்சி, குவளை, மயில், கிளி, மூங்கில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நீள் மலைக் கலித்த பெருங்கோற் குறிஞ்சி; மலர் பிணைத் தன்ன மாஇதழ் மழைக்கண்; மயில் ஓரன்ன சாயல் செந்தார்க்; கிளி ஓரன்ன கிளவி பணைத் தோள்”** (நற்; பா-301; வரி-1,3,5) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

குவளை மலர் போன்ற சிவந்த கண்களையுடையவள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஆயமொடு குற்ற குவளை”** (நற்; பா-317; வ-9) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

சிவந்த காந்தள் மொட்டுக்கள் போன்றன தலைவியின் விரல்கள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“காந்தள்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“காந்தள் அம்கொழு முகை போன்றன சிவந்தே”** (நற்; பா-379; வ-13) என்ற வரி விளக்கி நிற்கின்றது.

**வள்ளைப்பாட்டு**

முற்றித் தாழ்ந்த தினைக்கதிரை உருவி, சந்தன மரத்தால் ஆக்கப்பட்ட உரலில் இட்டு முத்துடைய யானைக் கொம்பால் செய்யப்பட்ட உலக்கையால் குத்தி வள்ளைப்பாடலைப் பாடுகின்றனர் என வள்ளைப் பாட்டினை விளக்க, **“தினை, சந்தனம், யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“தகை கொண்ட ஏனலுள் தாழ் குரல் உரீஇ; முகைவளர் சாந்து உரல் முத்து ஆர் மருப்பின்”** (கலி; பா-40; வரி-3-4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

அசையும் மூங்கிலின் நெல்லைப் பாறையாகிய உரலில் இட்டு வன்மை வாய்ந்த யானைக் கொம்பான உலக்கையால் குற்றி நல்ல சேம்பினது இலையை முறமாய்க் கொண்டு புடைத்து வள்ளைப் பாட்டைப் பாடினர் என வள்ளைப்பாட்டு பாடும் பொழுது பயன்படுத்தியவையாக, **“மூங்கில், யானை, சேம்பு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“பாடுகம் வா, வாழி தோழி! வயக் களிற்றுக்; கோடு உலக்கையாக நல் சேம்பின் இலைகளகா; ஆடு கழை நெல்லை அறை உரலுள்பெய்து இருவாம்”** (கலி; பா-41; வரி-1-3) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

யானையின் கொம்பால் மூங்கில் நெல்லைக் குற்றுதற்கு வள்ளைப் பாட்டினைப் பாடுவோம் என வள்ளைப் பாட்டினைப் பாட, **“மூங்கில், யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை விளக்க, **“கொல் யானைக் கோட்டால் வெதிர்நெல் குறுவாம் நாம்”** (கலி; பா-42; வ-7) என்ற வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஐவனமாகிய வெண்ணெல்லைப் பாறை என்ற உரலில் இட்டு புலியைக் கொன்ற மதமுடைய புகர் பொருந்திய யானையினது கொம்பாலும் இனமான வண்டுகள் ஒலித்துத்தாது ஊறும் சந்தன மரத்தால் ஆகிய உலக்கையாலும் குற்றி முருகன் மீது வள்ளைப் பாட்டு பாடுவோம் எனத் தோழியானவள் தலைவியை வள்ளைப்பாட்டுப் பாட அழைக்கும் போது, **“வேங்கை, வாரணம், சாந்தம், வெண்நெல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வேங்கை தொலைத்த வெறி பொறி வாரணத்து; சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்; ஐவன வெண்நெல் அறை உரலுள் பெய்த இருவாம்”** (கலி; பா-43; வரி-1,3-4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**தந்தையின் ஒப்புதல்**

மணம் பொருந்திய வேங்கை மரத்தின் கீழ் இருந்து தலைவனுக்கு மணம் செய்து கொடுக்க உடன்பட்டான் தந்தை எனத் தலைவன் தலைவி திருமணத்திற்கு தந்தையின்

ஒப்புதலை விளக்க, **"வேங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு, **"மன்றல் வேங்கைக் கீழ் இருந்து"** (கலி; பா-41; வ-43) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**உவமை**

பெரிய கையையுடைய ஆண்கரடி இரும்பு வேலை செய்யும் கொல்லனைப்போல் தோன்றும் எனக் கொல்லனை உவமையின் மூலம் விளக்க, **"கரடி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஒரு கரடியின் தன்மையினை விளக்க, **"குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை"** (அகம்; பா-72; வ-5) என்ற வரி பயன்படுத்தப்பட்டது.

மலையில் மடப்பத்தை உடைய மயிலைப் போன்று வண்டுகள் மொய்க்க மலர்களைச் சூடியவள் எனத் தலைவியின் இயல்பினை விளக்க, **"மயில்"** எனும் கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"இளமழை சூழ்ந்த மடமயில் போல"** (அகம்; பா-198; வ-7) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டது.

கரிய பக்க மலைகளில் பனை மரத்தின் அடிப்பக்கத்தில் நிலை பெற்றிருக்கும். காந்தளின் மெல்லிய அரும்புகள் இதழ் விரிந்து மலர்ந்து மணம் கமழும் புதிய மலர் போன்ற நெற்றியை உடையவள், எனத் தலைவியின் நெற்றியினை விளக்க, உவமையாக, **"பனை, காந்தள்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"நளிமுகை உடைந்த நறுங்கார் அடுக்கத்து; போந்தை முழுமுதல் நிலைஇய காந்தள்"** (அகம்; பா-238; வரி-15-16) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வீர முரசம் முழங்கும் மன்னர் படைக் கலங்கள் ஏந்திய படையில் யானைகளை அணிவகுத்தது போல் தோன்றும் மேகங்கள் என்ற உவமையை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"தோல்நிரைத் தனைய ஆகி வலன் ஏர்பு"** (அகம்; பா-278; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

நெற்றிப்பட்டத்தை உடைய யானையின் மீது கட்டப்பட்ட அசையும் வெண்துகில் கொடியை ஒப்பத் தோன்றுவது தலைவனின் மலை எனத் தலைவனின் மலைக்கு உவமையாக, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"ஓடை யானை உயர் மிசை எடுத்த"** (அகம்; பா-358; வ-13) என்ற பாடல் வரி பயன்பட்டுள்ளது.

காட்டில் தன் பெண்யானையை இழந்த கை பொருந்திய வெண்மையான கொம்பையுடைய ஆண்யானை உண்ணும் தழையை உண்ணாது நீக்கியதால் உண்டான

வாட்டம் போலத் தலைவனின் உடல் வாடியது எனத் தலைவனின் வாட்டத்தினை விளக்க, **"பிடி, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை விளக்கப் பயன்படுத்தப்பட்ட பாடல் வரியாவது, **"வீழ் பிடி கெடுத்த வெண் கோட்டு யானை"** (அகம்; பா-392; வ-2) என்பதாகும்.

கொன்றை மரத்தின் மலர்ந்த மலரைப்போன்றது தலைவியின் மேனி எனத் தலைவனின் மேனிக்கு உவமையாக, **"கொன்றை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"மென் தோள் நெகிழச் சாஅய் கொன்றை"** (அகம்; பா-398; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

யானை குறிஞ்சித் திணையில் அதிகப் பாடல்களில் கருப்பொருளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

***"யானை, களிறு, வயக்களிறு, வேழம், வாரணம் என்ற சொற்களால் ஆண் யானை சுட்டப்படுகின்றது. பெண் யானை, 'பிடி'என்ற பெயரில் வழங்கப்பட்டுள்ளது. புலி, கடுவன், மந்தி, கோண்மா(சிங்கம்), மான், கலை, ஆமான், ஆளி, இரும்போத்து, எண்கு, குதிரை, குரங்கு, ஞமலி, நாய், பன்றி, முளவு(முள்ளம் பன்றி), பகடு, மதலை போன்ற விலங்குகள் குறிஞ்சித் திணையில் கருப்பொருட்களாகச் சுட்டப்படுகின்றன. இதில் யானையும், புலியும் பெரும்பான்மையாகப் பாடல்களில் இடம் பெறுகின்றன" என்பதாகும்.*** (ஆ.சிவலிங்கனார் (பதிப்பு); தொல்காப்பிய உரைவளம், அகத்திணையியல்; ப-144) என்பர்.

காந்தளின் தேனை உண்ணும் வண்டைப் போல், தலைவியின் அழகைக் கவர்ந்து சென்றவன் தலைவன் என உவமையின் மூலம் தலைவனின் தன்மையினை விளக்க, **"காந்தள்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"நறுந்தண் சிலம்பின் நாறு குலைக் காந்தள்"** (ஐ.நூறு; பா-226; வ-2) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

அழகிய மயில் போன்ற அசைந்த நடையையுடைய கொடிச்சி எனக் கொடிச்சியின் தன்மையை விளக்க, **"மயில்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"அணிமயில் அன்ன அசை நடைக் கொடிச்சியைப்"** (ஐ.நூறு; பா-258; வ-2) விளக்க என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

செங்கோலை உடைய மன்னனைப் போன்று தலைவியும் உயர்ந்தவள் தலைவி வளர்த்த கிளியும் உயர்ந்தவை எனத் தலைவியின் சிறப்பை விளக்க, **"கிளி"** எனும் கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"சிறந்தன போலுங் கிள்ளை பிறங்கிய"** (ஐ.நூறு; பா-290; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

நிழலையுடைய குளத்துள் நீரில் நின்ற குவளை வெந்தது போன்ற இயல்புடையதாக மாறும், எனத் தலைவன் வாராது ஒழிய ஏற்படும் கொடிய செயலினை விளக்க, **"குவளை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. தலைவியின் வருத்தத்தினை விளக்கும் உவமையாக, **"நீருள் குவளை வெந்தற்று"** (கலி; பா-41; வ-31) இப்பாடல் வரி விளக்குகின்றது.

நான் விரும்பிய பெண்யானையை அருள் செய்யும் மயக்கத்தையுடைய ஆண் யானையைப் போல் தலைவியின் உடல் முழுவதும் தடவினான் எனத் தலைவன் தலைவியின் அன்பு நெகிழ்ச்சியை விளக்க, **"பிடி, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வாறு அன்பு நிகழ்வினை விளக்கப் பயன்பட்ட பாடல் வரிகளாவன, **"தொய்யல் அம் தடக் கையின் வீழ் பிடி அளிக்கும்; மையல் யானையின் மருட்டலும் மருட்டினான்"** (கலி; பா-54; வரி-13-14) என்பவையாகும்.

தலையில் பொருந்திய கொம்பையும் யானையையும் உடைய பகைவர்க்கு பாண்டியன் வேல் மனத்தை வருந்துவதைப்போல், தலைவன் தலைவியை வருத்துகின்றான் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க. **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை, **"ஏந்து கோட்டு எழில் யானை ஒன்னாதார்க்கு அவன் வேலன்"** (கலி; பா-57; வ-10) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

தலைவியின் முகைகள் மிக்க மதத்தை உடைய பாண்டியன் யானைக் கொம்புகளை விடச் சினம் கொண்டவை எனத் தலைவியின் சினத்தை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **"மத வலி மிகு கடாஅத்து அவன் யானை மருப்பினும்"** (கலி; பா-57; வ-18) என்பதாகும்.

புழுதி நீங்கும்படி பாகனாற் கழுவப்பட்ட யானையைப் போலப் பெரு மழையினாற் தூய்மை பெற்ற கரிய துறுகல், என துறுகல்லிற்கான உவமையினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"மாசு அறக் கழீஇய யானை போலப்"** (குறுந்; பா-13; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

சேம்பினது அசைகின்ற வளப்பமான இலை பெரிய ஆண் யானையின் செவியைப் போலத் தோன்றும் என உவமையினை விளக்க, **"களிறு"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதனை விளக்க, **"பெருங்களிற்றுச் செவியின் மானத்தை"** (குறுந்; பா-76; வ-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

பெரிய களிறு உண்ணும் பொருட்டு வளைக்கவும் முறிந்து நிலத்திற்படாது பட்டையை உடைய ஒடிந்த கிளையைப் போன்றது தலைவியின் பெண்மை நலம் எனத் தலைவியின் பெண்மை நலத்தினை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“பெருங்களிறு வாங்க முரிந்து நிலம் படாஅ”** (குறுந்; பா-112; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

யானை அதிமதுரத் தழையை மென்று தின்று அதனால் கொண்ட மதத்தைப் போலக் காமம் வெளிப்படும் தன்மையை உடையது எனக் காமத்தினை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“கடுத்தலும் தணிதலும் இன்றே யானை”** (குறுந்; பா-136; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

நடுயாமத்துத் துயிலுதலை உடைய யானையைப் போலப் பெருமூச்சு விட்டுக் கொண்டுள்ளது தலைவனின் நெஞ்சம், எனத் தலைவனின் பிரிவுத் துயரினை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை **“பள்ளி யானையின் உயர்ந்து என்”** (குறுந்; பா-142; வ-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மலையில் வளைந்த சந்தனம் நனைந்த யானையைப் போல இவ்வீட்டுப் புறத்தே வந்து நிற்கின்றான் தலைவன் என இரவுக்குறியின் கண் வந்த தலைவனை விளக்க, **“சந்தனம், யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“ஆரம் நாறும் மார்பின்; மாரி யானையின் வந்து நின்றனனே”** (குறுந்; பா-161; வரி-6-7) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

நல்ல மயில் வளையின் கண்ணே அகப்பட்டது போலத் தலைவியானவள் காப்பு மிகுதியால் வருத்தமடைகின்றாள் என உவமையினை விளக்க, **“மயில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு விளக்கும் பாடல் வரி, **“நல் மயில் வலைப் பட்டாங்கு யாம்”** (குறுந்; பா-244; வ-5) என்பதாகும்.

தன் இனத்தினின்று பிரிந்த துன்பத்தையும் மடப்பத்தையும் உடைய பெண் மான் நேரே இருப்ப தலைவியின் தமையன்மார் சிலைத்தல் மாட்சிமைப்பட்ட மிக்க வேகத்தை உடைய ஆண் மானினது மருமத்திலே அழுந்திய இரத்தத்தோடு பிடுங்கிய சிவந்த திரட்சியுடைய அம்பு, ஒன்றை ஒன்று மாறுபட்டாற் போன்றன தலைவியின் கண்கள் எனத் தலைவியின் கண்களுக்கு உவமையாக **“மான்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“புன்கண் மடமான் நேர்படத் தன்னையர்”** (குறுந்; பா-272; வ-4) விளக்க என்ற வரி விளக்குகின்றது.

மலையில் உள்ள சுனையிடத்துப் பூத்த குவளையினது வண்டுகள் பூத்தது போன்றது எனத் தலைவனின் கண்களை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“குண்டு நீர்ப் பைஞ்சுனைப் பூத்த குவளை”** (குறுந்; பா-291; வ-6) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

சுரபுன்னை போன்று தலைவி மென்மையானவள் என்ற உவமையின் மூலம் தலைவியின் மென்மைத் தன்மையை விளக்க, **“சுரபுன்னை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வழை தந்தனையால் சிலம்பு புல்லெனவே”** (குறுந்; பா-327; வ-7) என்ற வரியானது விளக்குகின்றது.

தாமரையின் குளிர்ந்த தாதிலுள்ள தேனைக் கொண்டு போய் சந்தன மரத்தில் உயர்ந்த இடத்தில் வண்டு சேர்க்கும். அதனைப் போலத் தலைவனின் நட்பு உயர்வுடையது எனத் தலைவனின் நட்பினை விளக்க, **“தாமரை, சாந்து”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“தாமரைத் தண் தாது ஊதி மீமிசைச்; சாந்தில் தொடுத்த தீம் தேன்போல”** (நற்; பா-1; வரி-3-4) விளக்க என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

புலியின் வளைந்த வரிகளையுடைய பெரிய முதுகில் நடுங்கும்படி குத்தி விளையாடிய யானையின் புலால் நாறும் கொம்பின் நுனி போல சிவந்த கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க உவமையாக, **“புலி, வேழம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“புலி விளையாடிய புலவு நாறு வேழத்தின்”** (நற்; பா-39; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டது.

பலாமரத்தின் பெரிய கிளையை விட்டு நீங்கிய பழம் மலைப்பிளப்பினுள் சிந்தினாற் போல நெடுநாள் முன்னே சென்று கரைந்தது எனத் தலைவியின் உடல் அழகு நீங்கியதை விளக்க, **“பலா”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“மலைகெழு நாடன் கேண்மை பலவின்”** (நற்; பா-116; வ-6) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

கைவிடப்பட்ட வறிய தலையையுடைய பெரிய களிறு போலத் தனியாகத் தலைவன் வந்தான் எனத் தலைவனின் வருகையினை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வறுந் தலைப் பெருங் களிறு போல”** (நற்; பா-182; வ-9) என்ற வரியானது விளக்குகின்றது.

அசோகின் அழகிய தளிர் போன்ற பசலை எனத் தலைவி தனக்கு உண்டான பசலையினை விளக்க, **“அசோகு”** என்ற கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன எனப் பசலைத் தன்மையினை விளக்க, **“செயலை அம் தளிர் அன்ன என்”** (நற்; பா-244; வ-10) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

படுத்திருக்கும் யானை பெருமூச்சு விடுவது போலத் தலைவி பெருமூச்சு விடுகின்றாள். எனத் தலைவனின் நிலையை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை விளக்க, **“பள்ளி யானையின் வெய்ய உயிரினை”** (நற்; பா-253; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

பலாமரம் மிக்க பறம்பு மலை போன்ற மிக்க அழகுடையவள் தலைவி, எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“பலா”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பலவு உறு குன்றம் போல”** (நற்; பா-253; வ-8) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

அகிற் கட்டையுடன் சருகுகளைச் சேர்த்துச் சுடும் பொழுது கமழும் புகை மழைமேகம் போலக் காணப்படும் என அகிற் புகையை உடைய தலைவனின் நாட்டினை விளக்க, **“அகில்”** எனும் கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதனை, **“அகில் சுடு கானவன் உவல் சுடு கமழ் புகை”** (நற்; பா-282; வ-7) விளக்க என்ற பாடல் வரி விளக்குகின்றது.

நீரில் இறங்கிக் குவளை மலர் பறிப்பவர் நீர் வேட்கையால் துன்புறுவது போல நாள்தோறும் தலைவியின் தோள்கள் தலைவனின் கையால் தழுவப்படுவதால் வழுவின எனத் தலைவியின் நிலையினை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“குவளை குறுநர் நீர் வேட்டாங்கு”** (நற்; பா-332; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

கருமையான தினைக்கதிர் பெரிய பிடியானையின் நெடிய கைபோலப் பருத்திருந்தது எனத் தினைக்கதிரை விளக்க, **“பிடி”** உவமையாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை விளக்க, **“இரும் பிடித் தடக்கையின் தடைஇய பெரும் புனம்”** (நற்; பா-344; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

யானையின் நீண்ட துதிக்கை போலப் பெருத்து வளைந்த கதிர்கள், எனக் கதிர்களை விளக்க, **“யானை”** உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது எனக் கதிர்களை விளக்க, **“முறம் செவி யானைத் தடக்கையின் தடைஇ”** (நற்; பா-376; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**சுனை**

ஒளியுடைய செங்காந்தள் மலர்ந்திருக்கும் அவ்விடத்தில் குளிர்ந்த பல அருவிகள் பாயும் சுனை எனச் சுனையினை விளக்க, **“செங்காந்தள்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஒண் செங்காந்தள் அவிழ்ந்த ஆங்கண்”** (அகம்; பா-92; வ-9) என்ற வரி விளக்குகின்றது.

மலையினின்றும் இறங்கும் அருவி சந்தன மரத்தில் வீழ்ந்து அதனைக் குளிர்ந்ததாக நனைக்கும் செறிந்த பக்க மலையில் உள்ள மலர்ந்த கரிய இதழையுடைய குவளை மலர்களையுடைய மலையில் உள்ள பெரிய சுனை எனச் சுனையினை விளக்க, **“சந்தனம், குவளை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வாறு சுனையின் அழகினை விளக்க, **“வரை இழி அருவி ஆரம் தீண்டி; கண்என மலர்ந்த மா இதழ்க்குவளை”** (அகம்; பா-228; வரி-2,4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சுனைநீரினை உண்டு வந்தான் என்பதற்கான சான்று வருமாறு: ***“மண்ணினால் ஏனங்களைச் செய்து அவற்றில் நீரை நிரப்பி வைத்திருக்க அவன் அறியாத காலத்தே சுனை நீரைப் பருகினான்” குறிஞ்சி நிலம் தான் மனிதன் முதன் முதலாக வாழ்வைத் தொடங்கினான் என்பதற்கு உதாரணமான கூற்றாகும்”*** (ந.சி.கந்தையா பிள்ளை; தமிழர் சரித்திரம்; ப-39) என்பர்.

ஞாயிற்றை மறைக்கும் மூங்கில் நெருங்கிச் சூழ்ந்த அகன்ற மாணிக்கப் பாறை அதில் அமைந்துள்ள சுனையில் காந்தள் அழகு பெற வளர்ந்துள்ளது எனச் சுனையினை விளக்க, **“மூங்கில், காந்தள்”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“விடியல் வெங்கதிர் காயும் வேய் அமல் அகல் அறை; கடி சுனை கவினிய காந்தள் அம் குலையினை”** (கலி; பா-45; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**இரவுப் பொழுது**

ஆண்கரடி தொங்குகின்ற தோல் உறைக்குள் உள்ள கூர்மையான நகம் பற்றிக் கொள்வதால் பாம்பு தனது வலிமையை இழக்கும் நள்ளிரவு என நள்ளிரவினை விளக்க, **“கரடி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“குரும்பி வல்சிப் பெருங்கை ஏற்றை”** (அகம்; பா-8; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

யானையின் புள்ளிகளையுடைய முகத்தில் விழுந்த புதிய ஆலங்கட்டி பளிங்கினைச் சொரிவதைப் போல் பாறையில் விழுந்து அழகு செய்யும் நள்ளிரவு என நள்ளிரவினை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வரை முதல் சிதறியவை போல் யானை”** (அகம்; பா-108; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

கூனிய முதுகையும் குறுகிய நடையையும் உடைய கரடிக் கூட்டம் புற்றாஞ் சோறான இரையைத் தின்னும் இரவுப் பொழுது, என இரவுப் பொழுதினை விளக்க, **“கரடி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“கூனல் எண்கின் குறு நடைத் தொழுதி”** (அகம்; பா-12; வ-1) என்ற வரி விளக்குகின்றது.

கொல்லும் புலிகள் இரை தேடித் திரியும், நிறைந்த இருளில் அவற்றுடன் பகைமை கொள்ள அஞ்சி கரிய பெண்யானையுடனும் கன்றோடும் கூடிய பெரிய வாயையும், கையையும் உடைய ஆண் யானை தான் அந்தப்புலி பிடித்துக் கொள்வதனின்று தப்பிப் பிடி முதலியவற்றை மறைத்து வைத்துக்கொள்ளும் நள்ளிரவு என நள்ளிரவினை விளக்க, **“பிடி, யானை, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“இரும்பிடி கன்றொடு வரைஇய கய வாய்ப்; பெருங்கை யானைக் கோள் பிழைத்து இரீஇய; அடுபுலி வழங்கும் ஆர் இருள் நடுநாள்”** (அகம்; பா-118; வரி-7-9) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நாகம் காந்தள் மலரின் புதிய பூவை மொய்க்கும் வண்டின் நல்ல நிறத்தைக் கண்டு தன் மணிஎன மயங்கும் இரவுக்குறி, என இரவுக்குறியினை விளக்க, **“காந்தள்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“திருமணி உமிழ்ந்த நாகம் காந்தட்”** (அகம்; பா-138; வ-17) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

ஆண் யானை ஈன்றணிமையுடைய பெண் யானையைத் தழுவிக் கொண்டு அசையும் நடையையுடைய கன்றினது பக்கத்தே இருந்து அதன் உறக்கம் கெடாமல் காவல் செய்யும். வரிகளையுடைய வலிய புலி தான் தங்கியிருக்கின்ற குகைவாயிலில் போய் முழங்கும், என நள்ளிரவினை விளக்க, **“பிடி, களிறு, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“ஈன்றணி இரும்பிடி தழீஇ களிறுதன்; வாள்வரி வயப்புலி கனமுழை உரற”** (அகம்; பா-168; வரி-9,12) என்ற வரிகள் விளக்குகின்றன.

தன் இனத்தைப் போற்றும் கடிய செலவையுடைய வன்மையான ஆண்யானை மூங்கில் முளைகளைத் தந்து பின் தழையையும் தந்து உண்ணும் படி செய்யும், என நடு இரவினை விளக்க, **“யானை, மூங்கில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்ற கருத்தினை விளக்க, **“கிளை பாராட்டும் கடுநடை வயக் களிறு”** (அகம்; பா-218; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

இரவுப் பொழுதானது குறிஞ்சி நிலத்தில் பெறுகின்ற பங்கினை விளக்குகின்ற சான்றுக் கருத்தாவது: ***“குளிர்கால யாமத்தில், குறிஞ்சி நிலத்தில் மலையில் புணர்ச்சி நிகழும். ஐப்பசி, கார்த்திகை மாதங்களாகிய குளிர் காலமும், அக்கால யாமமும், நள்ளிரவும் குறிஞ்சிக்குரியன. மலையடுக்குகளின் மறைந்த இடம் களவொழுக்கத்திற்கு ஏற்றது. இச்சிறப்பினாலேயே புணர்ச்சி குறிஞ்சிக்கு உரியது”*** (புலவர் குழந்தை; தொல்காப்பியர் காலத் தமிழர்; ப-107) என நள்ளிரவின் முக்கியத்துவமானது நமக்கு நன்கு புலப்படுகின்றது.

நொச்சிப்பூ விழும் நுண்ணிய ஒலியையும் கேட்கும் இரவுக்குறி என இரவுக்குறியினை விளக்க, **“நொச்சிப்பூ”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“கூடுதல் வேட்கையான் குறி பார்த்துக் குரல் நொச்சி”** (கலி; பா-46; வ-12) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

வரியையும் அஞ்சாமையையும் உடைய புலியைக் கொள்வதற்கு வைக்கப்பட்ட வலையிலே அத் தொழிலுக்கு வேறாய்க் குறுநரி அகப்பட்டுக் கொண்ட இரவுப்பொழுது, என இரவுக்குறியினை விளக்க, **“புலி, நரி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை விளக்க, **“இரும் புலி கொண்மார் நிறுத்த வலையுள் ஓர்; ஏதில் குறுநரி பட்டற்றால்; காதலன்”** (கலி; பா-65; வரி-24-25) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கரிய அடியையுடைய வேங்கை மரத்தின் மலர்கள் உதிர்ந்து கிடக்கின்ற குண்டுக் கல்லானது பெரிய புலிக்குட்டியைப் போலக் காணப்படும் காட்டினிடத்து இரவுக்குறியில் தலைவன் வருவான் என இரவுக்குறியினை விளக்க, **“வேங்கை, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கருங்கால் வேங்கை வீஉகு துறுகல்; இரும் புலிக் குருளையின் தோன்றும் காட்டிடை”** (குறுந்; பா-47; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

நெடிய கையை உடைய யானையினது கடிய பகையினால் வருந்திய குறுகிய கையை உடைய கொல்லுதல் வலிய பெரிய ஆண் புலியானது பசுமையான கண்ணையுடைய செந்நாய் அகப்படுகின்ற செவ்வியைப் பார்த்திருக்கும் மிக்க இருளையுடைய நடுயாமம் என நடுயாமத்தினை விளக்க, **“யானை, புலி, செந்நாய்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நெடுங்கை வன் மான் கடும் பகை உழந்த; குறுங்கை இரும் புலிக் கொலை வல் ஏற்றை; பைங்கட் செந்நாய் படுபதம் பார்க்கும்”** (குறுந்; பா-141; வரி-4-6) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

பலாமரத்தினது பெரிய கிளையினிடத்து ஆண்குரங்கு தாவித் துள்ளினாலும் அச்சங்கொள்ளும் இரவுப்பொழுது என இரவுக் குறியினை விளக்க, **“பலா, குரங்கு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை விளக்க, **“பலவின் இருஞ்சினைக் கலை பாய்ந்து உகளினும்”** (குறுந்; பா-153; வ-2) என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது.

வலிமையுடைய களிற்றைப் போன்ற தலைவன் இரவுப் பொழுதில் வந்து அடைக்கப்பட்ட கதவினைத் திறக்க முயன்றான் என இரவுக்குறியினை விளக்க, **"களிறு"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"உரவுக் களிறு போல் வந்து இரவுக் கதவு முயறல்"** (குறுந்; பா-224; வ-2) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

மன்றின்கண் உள்ள மரையாவானது நீங்க அதன் ஆணைக் கொன்று செவ்விய கண்களை உடைய கரிய புலி முழங்கும் நள்ளிரவு என நள்ளிரவினை விளக்க, **"மரை, புலி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை **"மன்ற மரையா இரிய ஏறு அட்டு; செங்கண் இரும்புலி குழுமும் அதனால்"** (குறுந்; பா-321; வரி-5-6) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

கொல்லும் வலிய கரிய புலியை அரிய ஒடுக்க வழியில் ஆண் யானை தாக்கித் தன் கொம்பை மலையிலிருந்து வரும் அருவியில் கழுவும் சாரல் வழியில் தலைவன் இரவுக்குறிக்காக வருவான் எனத் தலைவனின் இரவுக்குறியின் அச்சத்தினை விளக்க, **"புலி, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"கொல் முரண் இரும்புலி அரும் புழைத் தாக்கிச்; செம்மறுக் கொண்ட வெண் கோடு யானை"** (நற்; பா-151; வரி-2-3) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

தண்ணிய சந்தன மரத்தின் அசையும் கிளையில் நறிய தமாலக் கொடி சுற்றியிருக்கும் யானைகள் தம்முள் போர் செய்தலாலே இடிந்தொழிந்த பெரிய பள்ளங்கள் பொருந்திய கரையிடமெல்லாம் வெள்ளிய பளிங்குக் கற்களும், சிவந்த பொன்னும் மின்னும் இரவுப் பொழுது என இரவுக் குறியினை விளக்க, **"சந்தனம், களிறு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"நெடுந்தண் ஆரத்து அலங்கு சினை வலந்த; களிறு பொரக் கரைந்த கயவாய்க் குண்டு கரை"** (நற்; பா-292; வரி-1,5) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

பெண்புலி கிடத்தலால் பெரிய வரிகளையுடைய வலிய ஆண்புலி இரை விரும்பி நடக்கும் இரவுக்குறியில் தலைவன் வருவான், என இரவுக்குறியினை விளக்க, **"புலி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"ஈன் பிணவு ஒடுக்கிய இருங்கேழ் வயப் புலி"** (நற்; பா-332; வ-6) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

வலிமையோடு சினத்தையுமுடைய ஆண்யானை அங்கு வரும் புலியை எதிர்பார்த்து நிற்கும் இரவுப்பொழுதினை விளக்க, **"புலி, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. என்பதனை, **"உரவுச் சின வேழம் உறு புலி பார்க்கும்"** (நற்; பா-336; வ-7) விளக்குகின்றது.

கரிய புலியைக் கொன்ற பெரிய கைகளையுடைய யானை கொடிய சினமுள்ள தாய் இடிபோல் முழங்கும் அச்சம் தரும் வழியில் இரவுக் குறிக்காக வருகிறான் தலைவன் எனத் தலைவன் வரும் இரவுக்குறியினை விளக்க, **“புலி, யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“இரும்புலி தொலைத்த பெருங்கை யானை”** (நற்; பா-353; வ-8) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

கரிய அடியையுடைய வேங்கை மரத்தின் அசையும் அழகிய பூமாலைபோன்ற குட்டிகளை ஈன்றணிமையுள்ள வயா நோயுடைய கரிய பெண்புலி பசித்ததென்று வலிய ஆண்புலி புள்ளிகளையுடைய யானையின் முகம் சிவக்கும் படி தாக்கி முழக்கமிடும் இரவுப்பொழுது என இரவுக் குறியினை விளக்க, **“வேங்கை, புலி, களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கல் அயல் கலித்த கருங்கால் வேங்கை; வயப் புனிற்று இரும் பிணப் பசித்தென வயப்புலி; புகர் முகம் சிதையத் தாக்கி களிறு அட்டு”** (நற்; பா-383; வரி-1,3-4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**தலைவியின் வருத்தம்**

ஆண் யானையையும் உன்னிடம் வந்த புலவர்க்குக் கையொழியாமல் கொடுப்பதால் மழையை விட அருள் மிக்காய் ஆதலால் நானும் சுரபுன்னை வளர்ந்த மலைச் சாரலில் திரியும் வருடைமானின் நல்ல குட்டியை வளர்ப்பவரைப் போல் நீங்காமல் பாராட்டி பிரிவாய் எனில் தலைவியின் அழகு நீங்கும் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“யானை, சுரபுன்னை, வருடைமான்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கடுமா கடவுறூஉம் கோல் போல் எனைத்தும்; வழை வளர் சாரல் வருடை நன் மான்”** (கலி; பா-50; வரி-19,21) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

கரிய முகத்தையுடைய ஆண்குரங்கு தாங்கும் கிளை தெரிந்து பாயாத தவற்றினால் அக்குரங்கை ஏற்றுக் கொண்ட முறிந்த அக்கொம்பினிடத்துச் சென்றாற்போல தலைவன் குறி வாய்ப்புச் செய்த தவற்றினால் தலைவியின் தோள்கள் பசலையை அடைந்தன எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“குரங்கு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“மைப் பட்டன்ன மா முக முசுக்கலை”** (குறுந்; பா-121; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

விரைகின்ற குதிரையின் மேலே ஏறித் தலைவன் போனமையால் கரிய கழியினிடத்திலுள்ள நெய்தல் மலரைப் போல நைந்து வருத்தத்தை அடைந்தாள் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“நெய்தல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“இருங்கழி நெய்தல் போல”** (குறுந்; பா-336; வ-5) என்ற வரி விளக்குகின்றது.

மழையினால் உண்டான அருவியால் வந்த காந்தளினைத் தழுவி ஆற்றியிருந்தாள் எனத் தலைவி தன்னுடைய நிலையை விளக்க, **“காந்தள்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“காலை வந்த முழுமுதற் காந்தள்”** (குறுந்; பா-361; வ-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

அம்புபட்ட பெண்மான் போலத் தலைவியானவள் வருந்தினாள் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“மான்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஏ மான் பிணையின் வருந்தினெனாக”** (நற்; பா-61; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

சிறிய இலையையுடைய சந்தனமரம் வறட்சியடைந்து உலர்ந்து வாட்டம் அடைந்தது போல தலைவியின் உடம்பு வாடியது எனத் தலைவியின் உடல் வருத்தத்தினை விளக்க, **“சாந்து”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அறியாது அறுத்த சிறியிலைச் சாந்தம்”** (நற்; பா-64; வ-5) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

புல்லிய தலையையுடைய பெண்குரங்கின் அறியாமையுடைய வலிய குட்டி வேங்கை மரத்தின் அழகிய தாழ்ந்த கிளையில் பொருந்தியிருந்தது. அது தலைவி கையில் பருகுதற்கு வைத்திருந்த தேன் கலந்த பாலைப் பிடிங்கியதால் தலைவி வருந்தினான் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“மந்தி, வேங்கை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“புன் தலை மந்திக் கல்லா வன் பறழ்; வேங்கை அம்படு சினைப் பொருந்தி கைய”** (நற்; பா-379; வரி-1,4) விளக்க என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

இதில் ‘மந்தி’ என்னும் பெண்பாற் பெயர் தொல்காப்பியத்திலே உள்ளதை உணர்த்தும் சான்றுக் கருத்து: ***“பேடை, பெட்டை, பெடை, பெண், மூடு, நாகு, கடாமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி”*** என்பதாகும். (இளம்பூரணர் உரை; தொல்; மரபியல்; நூற்;3) என்பதாகும்.

**தலைவனின் வீரம்**

மதத்தால் அறிவை இழந்து குத்துக் கோலின் எல்லையில் நில்லாத ஆண் யானையைப் போன்றவன் எனத் தலைவனின் வீரத்தினை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“காழ் வரை நில்லாக் கடுங்களிறு அன்னோன்”** (கலி; பா-55; வ-20) என்ற வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

போரில் பகைவரைக் கொன்ற களிறு போன்றவன் எனத் தலைவனின் வீரத்தினை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அன்னையோ?**

**மண்டு அமர் அட்ட களிறு அன்னாள் தன்னை ஒரு"** (கலி; பா-61; வ-18) என்ற வரி விளக்குகின்றது.

**பகற்குறி**

பழங்கள் பழுத்துத் தொங்கும் மரச் செறிவினுள் காந்தள் புதரில் பகற்குறியில் தலைவன் தலைவியைச் சந்திக்கின்றான். இதில் **"காந்தள்"** எனும் கருப்பொருள் கொண்டு பகற்குறியானது விளக்கப்படுகின்றது. இதனை, **"பழம் நூங்கு நளிப்பின் காந்தள் அம் பொதும்பில்"** (அகம்; பா-18; வ-15) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

யானைக் கன்றின் காலை இழுத்துச் செல்லும் கடிய சுழியை உடைய வெள்ளத்தில் மென்மையான தலையை உடைய இளைய பெண் யானைகளின் ஆரவாரங்கள் பலவுடன் வெண்ணிறக் கொம்புகளையுடைய ஆண் யானைகளும் ஆரவாரம் ஏற்படக் கன்றுகளைப் பற்றுதற்கு நீரைத் துழாவும் பகற்காலம், எனப் பகற்காலத்தினை விளக்க, **"பிடி, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"புன்தலை மடப்பிடி பூசல் பல உடன்; வெண்கோட்டு யானை விளி படத் துழவும்"** (அகம்; பா-68; வரி-18-19) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

**காவலர்**

சந்தனம் நறுமணம் கமழப் பக்க மலையில் உள்ள அரிய குகைகளில் செறிந்த பல பூக்களை வண்டுகள் மொய்க்குமாறு ஆடியும், ஆண் யானையான இரையை அறிவதற்கு ஒதுங்கிய பார்வையுடன் மறைந்து இயங்கும் இயல்பு கொண்ட வலியுடைய ஆண் புலியைப்போல் நம் நல்ல இல்லங்களையுடைய நம்மூர்க் காவலர் எனக் காவலர்களை விளக்க, **"சந்தனம், களிறு, புலி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"ஆரம் நாற அரு விடர்த் ததைத்த; களிற்று இரை தெரீஇய பார்வல் ஒதுக்கின்; ஒளித்து இயங்கும் மரபின் வயப்புலி போல"** (அகம்; பா-22; வரி-12,14-15) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

**சூரர மகளிர்**

சிறிய தினையில் வந்து பொருந்தும் கிளிகளை ஓட்டிய குளிர் என்ற கருவியுடன் தட்டை என்ற கிளியோட்டும் கருவி ஆகியவற்றைக் கையில் கொண்ட சூரர மகளிர் என சூரர மகளிரினை விளக்க, **"கிளி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"சிறு தினைப் படு கிளி கடீஇயர் பல்மாண்"** (அகம்; பா-32; வ-5) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**வரலாற்றுச் செய்திகள்**

**கொல்லி மலை**

வெற்றியுடைய வேலையும் யானைகள் மிக்க படையையும் உடைய சேர மன்னனின் கொல்லிமலை எனக் கொல்லி மலையினை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“களிறு கெழு தானைப் பொறையின் கொல்லி”** (அகம்; பா-62; வ-13) எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது.

ஓரி என்ற வள்ளலின் பழங்களையுடைய பலா மரங்கள் பொருந்திய பயன் மிக்க கொல்லிமலை எனக் கொல்லி மலையினை விளக்க, **“பலா”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பல் பழப் பலவின் பயம் கெழு கொல்லி”** (அகம்; பா-208; வ-22) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

பயன் நிரம்பிய பலா மரங்களையுடையது கொல்லிமலை எனக் கொல்லி மலையினை விளக்க, **“பலா”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பயம் கெழு பலவின் கொல்லிக் குடவரை”** (நற்; பா-192; வ-8) என்ற வரியானது விளக்குகின்றது.

செவ்விய வேர்களையுடைய பலா மரங்களின் பயனை நிரம்ப உடையது தெய்வம் காக்கும் கொல்லிமலை எனக் கொல்லி மலையை விளக்க, **“பலா”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“செவ்வேர்ப் பலவின் பயம் கெழு கொல்லித்”** (நற்; பா-201; வ-5) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

பலா மரமானது மலையின் விளத்தை விளக்குவதோடு தலைவியின் தன்மையையும் விளக்குவதாக அமைகின்றது என்பதை உரைக்கும் கூற்று: ***“மலை சார்ந்த பகுதியில் நிறைந்துள்ள பலா மரங்களின் பலாச் சுளைகள் இனிய சுவையை உடையன. பலா மரத்தின் மேற்புறம் கடினமான தோற்றமுடையது. இத்தன்மை கொண்ட பலா மரங்கள் சூழ்ந்த பகுதியில் வாழும் தலைவியின் பண்பும் ஒழுக்கமும் பலா மரத்தின் இயல்போடு ஒத்துள்ளதைக் காணமுடிகிறது.*** (பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர்(உ.ஆ); நற்றிணை நானூறு; ப-135) என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

**மூவேந்தர்**

ஆண் யானைகளை உடைய மூவேந்தர் என மூவேந்தரினை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஏந்து கோட்டு யானை மூவேந்தர் ஓட்டிய”** (அகம்; பா-78; வ-21) என்ற வரியானது விளக்குகின்றது.

**நன்னன்**

உரல்போலும் அடியையுடைய யானையை உடையவன் நன்னன், என நன்னனின் வரலாற்றினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"கறை அடி யானை நன்னன் பாழி"** (அகம்; பா-142; வ-9) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

நீராடும் பொருட்டுச் சென்ற ஒள்ளிய நெற்றியை உடைய பெண் அந்நீரால் கொண்டு வரப்பட்ட பசுங்காயை உண்ட குற்றத்திற்காக எண்பத்தியோரு ஆண் யானைகளையும், பொன் பாவையையும் ஏற்றுக் கொள்ளாமல் அப் பெண்ணைக் கொலை செய்தான் நன்னன் என நன்னனின் செயலினை விளக்க, **"களிறு"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு அவள் நிறை"** (குறுந்; பா-292; வ-3) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

இக் குறுந்தொகைப் பாடல் உணர்த்துகின்ற கருத்தினை விளக்கும் '**குறுந்தொகை மூலமும் உரையும்"** என்ற நூலின் கருத்து பின்வருமாறு அமைகின்றது.

***"பல்குன்றக் கோட்டுத்துத் தலைவனாக விளங்கியவன் நன்னன், அவன் காவல் மரத்தினிலிருந்து விழுந்த காயைத் தின்ற பெண்ணைக் கொலை புரிந்தான். அதனால் 'பெண் கொலை புரிந்த நன்னன்' என்று குறுந்தொகை குறிப்பிடுகிறது"*** (உ.வே.சாமிநாதய்யர் (ப.ஆ); பா-292) என்பதாகும்.

**வேண்மான் ஆஅய் எயினன்**

வெண்மையான கொம்பையும் தலைமையையுமுடைய யானையை வழங்கும் கொடைத் தன்மையாலான மகிழ்ச்சியை உடையவன் என வேண்மான் ஆஅய் எயினனை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"அண்ணல் யானை ஈயும் வண் மகிழ்"** (அகம்; பா-208; வ-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**மிஞிலி**

பாழி என்னும் ஊரில் உள்ள போர்க் களத்தில் ஓடையை அணிந்த யானையையும் தேரினையும் உடைய மிஞிலி என்பவன் என மிஞிலி என்பவனை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு மிஞிலியினைப் பற்றிக்கூற, **"இழை அணியானை இயல் தேர் மிஞிலியொடு"** (அகம்; பா-208; வ-7) என்ற வரி விளக்குகின்றது.

**நள்ளி**

உயர்ந்த தேரை ஆண்யானையுடன் என்றும் வானம் மழை பொழிவதைப் போல் அளிக்கும் ஈகையையும் மகிழ்ச்சியையும் உடையவன். செருக்குடைய குதிரைகளை உடையவன் என நள்ளியின் சிறப்பினை விளக்க, **“யானை, குதிரை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“இழை அணி நெடுந்தேர் களிறொடு என்றும்; கழல் தொடித் தடக்கை கலிமான் நள்ளி”** (அகம்; பா-238; வரி-12,14) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

**திதியன்**

வெற்றியுடைய குறும்பினான போர்த்திறம் மிக்க குதிரையையுடையவன் திதியன், எனத் திதியனை விளக்க, **“குதிரை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“செரு இயல் நல்மான் திதியற்கு உரைத்து, அவர்”** (அகம்; பா-262; வ-10) என்ற வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆண் யானைகள் பொருந்திய வாட்கள் பின்னிய போரில் விளங்கும் வேலையுடைய படையையும் தேரையும் உடையவன் திதியன் எனத் திதியனை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“களிறு கண்கூடிய வாள் மயங்கு ஞாட்பின்”** (அகம்; பா-322; வ-7) என்ற வரி விளக்குகின்றது.

**மாங்காடு**

மென்மையான தலையையுடைய மத்தியின் பசியை நீக்குதற்காக அதன் குட்டியின் தந்தையான கடுவன் பலாப் பழத்தின் சுளையைத் தோண்டினாலும் பெரிய நோய் போலத் துன்பம் மிகச் செய்யும் சூரரமகளிர் வாழ்கின்ற மாங்காடு என மாங்காட்டினை விளக்க, **“மந்தி, பலாப்பழம்”** போன்ற கருப்பொருட்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **‘கயந்தலை மந்தி உயங்கு பசி களைஇயர்; பார்ப்பின் தந்தை பழச்சுளை தொடினும்”** (அகம்; பா-288; வரி-12-13) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**பொதியமலை**

பிறைச் சந்திரன் போன்ற கொம்பையும் அஞ்சாமையும் உடைய பன்றியினது ஊனைத் தின்ற புலிகள் கூடி முழங்கும் பக்க மலையை உடையது பொதிய மலை எனப் பொதிய மலையினை விளக்க, **“பன்றி, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பிறை உறழ் மருப்பின் கடுங்கண் பன்றிக்; குறை ஆர் கொடுவரி குழுமும் சாரல்”** (அகம்; பா-322; வரி-10-11) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**அதியமான்**

மிக்க வேகத்தையுடைய குதிரைகள் பூண்ட பெரிய தேரையுடையவன் அதியமான், என அதியமானின் வரலாற்றினை விளக்க, **"குதிரை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"கடும் பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி"** (அகம்; பா-352; வ-12) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**ஓரியின் காடு**

குமிழ மரத்தின் வளைந்த மூக்குடைய விளைந்த பழங்கள் துள்ளிக் குதித்து விளையாடும் இளைய மானுக்கு உணவாகும் காட்டினை உடையவன் ஓரி என்பவன், என ஓரியின் காட்டுப் பகுதியினை விளக்க, **"குமிழ், மான்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி; எறிமட மாற்கு வல்சி ஆகும்"** (நற்; பா-6; வரி-7-8) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**தொண்டி**

அகன்ற வயல்களில் மகளிர் நெய்தலின் தண்டுகளைச் சேர்த்துக் கதிர்ப் போராகச் சேர்ப்பர். அக்கதிர்ப் போரில் நெய்தற் பூ கண் போலப் பூக்கும் பொறையனின் தொண்டி என்னும் ஊர், எனத் தொண்டி என்னும் ஊரினை விளக்க, **"நெய்தல்"** எனும் பூ பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"கண் போல் நெய்தல் போர்வில் பூக்கும்"** (நற்; பா-8; வ-8) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**ஆர்க்காடு**

நெய்தல் நெற்கதிர்களிடையே மலரும் கள்ளையுடைய அழகிய வயல்களில் நிரம்பிய ஆர்க்காடு எனும் ஊரினை விளக்க, **"நெய்தல்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"வண்டு மூசு நெய்தல் நெல்லிடை மலரும்"** (நற்; பா-190; வ-5) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

**பாரம் என்னும் ஊர்**

புள்ளிகளையும் வரிகளையுமுடைய கலைமானைச் சேற்றில் ஓட்டி வருந்தச் செய்த ஒலியையுடைய அம்பால் எய்யும் வில் வீரர்களின் தலைவனின் பாரம் என்னும் ஊரினை விளக்க, **"கலைமான்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"அள்ளல் ஆடிய புள்ளி வரிக் கலை"** (நற்; பா-265; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**முன்பனிக்காலம்**

குறவரின் முற்றத்தில் மூங்கிலின் அழகிய பூக்கள் உதிரவும். நீண்ட இதழ்களை உடைய காந்தள் பூவின் தாள்கள் நீண்டு முறியும் முன்பனிக்காலம் என முன்பனிக்காலத்தினை விளக்க, **"மூங்கில், காந்தள்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"முந்தூழ் ஆய் மலர் உதிர காந்தள்"** (அகம்; பா-78; வ-8) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

செங்காந்தளின் நீண்ட இதழ்கள் மலரும் முன்பனிப் பருவம் என முன்பனிப் பருவத்தினை விளக்க, **"செங்காந்தள்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை **"வரையாம் இழியக் கோடல் நீட"** (ஐ.நூறு; பா-223; வ-2) என்ற வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

உழுந்தினது மிக முதிர்ந்த காய்களை மான் கூட்டங்கள் தின்னும் முன்பனிக்காலம் என முன்பனிக்காலத்தினை விளக்க, **"மான்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **"ஊழ்ப்படு முதுகாய் உழையினம் கவரும்"** (குறுந்; பா-68; வ-2) என்ற வரியானது விளக்குகின்றது.

**வெறியாடு களம்**

வெண்மையான பனந்தோட்டைக் கடம்ப மலருடன் சூடி முருகப் பெருமானின் புகழை எடுத்துக் கூறி வேலன் வெறியாடுகின்ற களம் என வெறியாட்டுக் களத்தினை விளக்க, **"கடம்பு"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"வெண் போழ் கடம் பொடு சூடி இன் சீர்"** (அகம்; பா-98; வ-16) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

கடம்ப மாலையையும் களிற்றையும் பாடினர். பனந் தோட்டையும் கடம்ப மாலையும் கையில் அணிந்து கொண்டனர் வெறியாட்டுக் களத்தில் கட்டுவிச்சியும் வேலனும் என வெறியாட்டுக் களத்தினை விளக்க, **"கடம்பு, களிறு, பனை, கடம்பம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கடம்பும் களிறும் பாடி நுடங்குபு; தோடும் தொடலையும் கைக்கொண்டு அல்கலும்"** (அகம்; பா-138; வரி-11-12) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**தலைவன் அணிந்தவை**

வேங்கை மலரால் ஆன வண்டுகள் மொய்க்கும் தலை மாலையையுடையவன். குவளை மலரால் ஆன தேன் துளிக்கும் மாலை அணிந்த மார்பினனாய் விளங்குபவன் எனத் தலைவன் சூடியவைகளை விளக்க, **"வேங்கை, குவளை"** போன்ற கருப்பொருள்கள்

பயன்படுத்தப்பட்டுள்ளன. **“விரி இணர் வேங்கை வண்டு படு கண்ணியன்; தெரி இதழ்க் குவளைத் தேம்பாய் தாரன்”** (அகம்; பா-38; வரி-1-2) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

வேங்கை மரத்தின் மலர்களைக் கொய்யச் சென்றோம். அப்போது ‘புலிபுலி’ என்ற ஆரவாரம் எழுந்தது. மகளிரின் கண்ணைப் போன்ற ஒளியுடைய அழகிய செங்கழுநீர் மலர்களை மாலையாய் அணிந்தவன். தலையின் ஒரு பக்கத்தே கொண்ட வெட்சிப் பூவால் ஆன கண்ணியை உடையவன். மார்பில் சிவந்த சந்தனத்தைப் பூசிய தலைவன், எனத் தலைவனின் தோற்றத்தினை விளக்க, **“வேங்கை, புலி, செங்கழுநீர், வெட்சி, சந்தனம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“ஒலி சினை வேங்கை கொய்குவம் சென்றுழி; ‘புலிபுலி’ என்னும் பூசல் தோன்ற; ஒண் செங்கழுநீர்க் கண்போல் ஆய் இதழ்; குயம் மண்டு ஆகம் செஞ்சாந்து நீவி”** (அகம்; பா-48; வரி-6-8,11) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

சந்தனம் பூசப் பெற்ற மார்பினை உடையவன் தலைவன், எனத் தலைவன் அணிந்தவை விளக்க, **“சந்தனம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஆர மார்பின் அரி ஞிமிறு ஆர்ப்ப”** (அகம்; பா-102; வ-10) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

பல மணங்களைக் கலந்த மாண்பு பொருந்திய சந்தனம் கமழும் மார்பினை உடையவன் தலைவன், எனத் தலைவனின் மார்பினை விளக்க, **“சந்தனம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“நுண்ணிதின் கூட்டிய பல மாண் ஆரம்”** (அகம்; பா-218; வ-14) என்ற வரியானது விளக்குகின்றது.

காட்டு மல்லிகை மலருடனே கூதள மலரையும் சேர்த்துக் கட்டிய மாலையைத் தலைவன் அணிந்திருந்தான் எனத் தலைவன் அணிந்த மாலையினை விளக்க, **“குளவி, கூதளம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“குளவியொடு மிடைத்த கூதளங் கண்ணி”** (அகம்; பா-272; வ-8) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

மலையினது சந்தனம் பூசப் பெற்ற அழகிய விளக்கமுடைய மார்பை உடையவனாய் வேங்கை மரத்தின் மிக்க கிளைகளில் உள்ள புதிய பூக்களால் ஆன மாலையைச் சூடியவன் தலைவன் எனத் தலைவனின் மாலையினை விளக்க, **“சந்தனம், வேங்கை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“மலைச் செஞ்சாந்தின் ஆர மார்பினன்; சுனைப் பூங் குவளைச் சுரும்பு ஆர் கண்ணியன்”** (குறுந்; பா-321; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

குறிஞ்சித் திணையில் காணப்படும் பூக்கள் கருப்பொருளாகப் பயன்படுத்துவதை விளக்குகின்ற சான்றுக் கருத்தாவது;

***“சேம்பு, திணை, நெல், பயிறு போன்ற சிறு செடிகளும் குறிஞ்சியில் இடம் பெறுகின்றன. மலர்களுள் ஆம்பல், இலமலர், காந்தள், காயா, குவளை, குறிஞ்சி, கூதளம், கொன்றை, செங்காந்தள், மந்திகை போன்ற மலர்கள் பெரும்பாலும் சுட்டப் பெற்றுள்ளன”*** (ஆ.சிவலிங்கனார்(பதிப்பு); தொல்காப்பிய உரைவளம்- அகத்திணையியல்; ப-145) என்ற கருத்து எண்ணிப் பார்க்கத்தக்கது.

காட்டு மல்லிகையுடனே வில்வத்தைச் சேர்த்துக் கட்டிய மாலையை உடையவன், எனத் தலைவன் அணிந்த மாலையினை விளக்க, **“குளவி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பெரு வரை நீழல் வருகுவன் குளவியொடு”** (நல்; பா-119; வ-8) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

சந்தனம் கமழும் மார்பினையுடையவன் எனத் தலைவனின் மார்பினை விளக்க **“சந்தனம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஆரம் கமழும் மார்பினை”** (நல்; பா-168; வ-10) என்ற வரி விளக்குகின்றது.

கஞ்சங்குல்லை, மலைமல்லி, கூதாளி, குவளை, தேற்றா மலரோடு கட்டிய மாலையை உடையவன் எனத் தலைவன் அணிந்த மாலையினை விளக்க மேலே கூறப்பட்டுள்ள, **“கஞ்சங்குல்லை, மலைமல்லி, கூதாளி, குவளை, தேற்றாமலர்”** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“குல்லை, குளவி, கூதளம், குவளை”** (நல்; பா-376; வ-1) என்ற வரியானது விளக்குகின்றது.

**வேடர்கள்**

ஆண் யானையின் மதம் பொருந்திய கன்னத்தையுடைய முகத்தைக் கிழித்த அம்பையும் நிணத்துடன் கூடிய உணவை உடைய வேடர்கள், என வேடர்களைப் பற்றி விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“களிற்று முகம் திறந்த கவுளுடைப் பகழி”** (அகம்; பா-132; வ-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**சோலை**

குட்டியை ஈன்ற அணிமையையுடைய வயா வருத்தத்துடன் இருக்கின்ற பெண்புலியானது பசித்ததாகத் தறுகண்மையுடைய ஆண்புலி ஒளிவீசும் ஏந்திய கொம்பையுடைய ஆண் யானையைக் கொன்று முழங்கும் பெரிய சோலை, எனச் சோலையினை விளக்க, **“புலி, களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“ஈன்று அணி வயவுப் பிணிப் பசித்தென மறப்புலி; ஒளிறு ஏந்து மருப்பின் களிறு அட்டுக் குழுமும்”** (அகம்; பா-112; வரி-5-6) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

மலையின் மேலுள்ள வேங்கை மரத்தின் மலர்கள் புலியின் உடம்பில் உள்ள புள்ளிகளைப் போல் தோன்றுவதனால் பெரிய வாயையுடைய பெண்யானை அஞ்சியோடும் இத்தன்மையுடைய சோலைகள், எனச் சோலையினை விளக்க, **வேங்கை, புலி, பிடி"** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"ஓங்கல் மிசைய வேங்கை ஒள்வீப்; புலிப்பொறி கடுப்பத் தோன்றலின் களவாய்; இரும்பிடி இரியும் சோலை"** (அகம்; பா-228; வரி-10-12) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

நறுமணமுடைய மலர்களையுடைய வேங்கை மரத்தின் வண்டுகள் ஒலிக்கும் மணம் வீசும் சோலை, எனச் சோலையினை விளக்க, **"வேங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"நறுவீ வேங்கை இன வண்டு ஆர்க்கும்"** (அகம்; பா-302; வ-6) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

காந்தட் குலை அவிழ்ந்த விருப்பமிகும் சாரலில் கூதளம் மணக்கும் நறிய சோலை. எனச் சோலையினை விளக்க, **"காந்தள்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"யாங்கு ஆகுவம் கொல் தோழி, காந்தள்"** (நற்; பா-313; வ-6) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

பீலியையுடைய மயில் உலாவி வரும் சோலை எனச் சோலையினை விளக்க, **"மயில்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"பீலி மஞ்ஞை ஆலும் சோலை"** (நற்; பா-357; வ-6) என்ற வரி விளக்குகின்றது.

**இல்செறிவு**

முற்றிய கதிரையுடைய தினைப் புனத்தில் கிளியை ஓட்டுதற்குப் பாடும் பாடலும் நீங்கி இல் செறிக்கப்பட்டாள் என இல்செறிவினை விளக்க, **"கிளி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"கிளி கூடி பாடலும் ஒழிந்தனள்"** (அகம்; பா-118; வ-13) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**நீர்த்துறை**

பெரிய மூங்கிலின் அழகிய தண்டு முறியும்படித் தாக்கி அழகிய குதிரை மரங்களைச் சாய்த்த பெரும் பரப்பையுடைய நீர்த்துறை, என நீர்த்துறையினை விளக்க, **"மூங்கில், குதிரை மரம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"இருவெதிர் அம்கழை ஒசியத் தீண்டி; வருவது மாதோ வண்பரி உந்தி"** (அகம்; பா-278; வரி-8-9) என்ற பாடல் வரிகள் விளக்கிநிற்கின்றன.

நீர் பெறக் கூடிய இடங்கள் சிலவற்றினைத் தொல்காப்பியர் கூறியுள்ளார். அவை பின்வருமாறு; ***"உணவைக் கூறியதனால் அவ்வுணவின் ஒரு கூறாகிய நீரினைத் தொல்காப்பியர் தனியாகக் கூறவில்லை. ஆனால் நீர் என்பதனை நறுஞ்சுவை, கூவல்,***

***கான்யாறு, யாறு, மனைக்கிணறு, இலஞ்சி(வாவி), அருவி, சுனை, உவர்க்குழி, அறுநீர்க் கூவல் என்று பல மேற்கோள்களுடன் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டிருக்கின்றார்"*** (தொல்;அகத்; பா-46) என்பதாகும்.

**தலைவியின் தந்தை**

இனிமையான பலா மரங்களையுடைய அழகு மிக்க செல்வத்தையுடையவன் தந்தை எனத் தலைவியின் தந்தையினை விளக்க, **"பலா"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"இன்தீம் பலவின் ஏர்கெழு செல்வத்து"** (அகம்; பா-282; வ-11) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

தலைவியின் தந்தை முற்றிய கொம்புகளையுடைய யானைகள் நிரம்பிய காட்டின் அரசன், எனத் தலைவியின் தந்தையினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"கோடு முற்று யானை காடுடன் திறைதர"** (நற்; பா-324; வ-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

களிற்றானையின் முகத்தைப் பிளந்த சிறந்த அம்புடையவர் தந்தை, எனத் தலைவியின் தந்தையினை விளக்க, **"களிறு"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது, இதனை விளக்க, **"களிற்று முகம் திறந்த கல்லா விழுத் தொடை"** (நற்; பா-389; வ-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**மாலைக் காலம்**

வேங்கை மரத்தின் ஒளி பொருந்திய தழைத்த தளிர்களையுடைய பெரிய கிளையானது அசைந்து குளிர்ந்த காற்றினை வீசும் மாலைக் காலம் என மாலைக் காலத்தினை விளக்க, **"வேங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"மணிமருள் மாலை மலர்ந்த வேங்கை"** (அகம்; பா-298; வ-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**மழை**

புலியுடன் போரிட்டு வருந்திய நடையையுடைய ஆண் யானையின் பெரிய பிளப்பான மத்தகப் புண்ணைக் கழுவி, இரவில் மழை பெய்தது என மழை பெய்ததனை விளக்க, **"புலி, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"உழுவையொடு உழந்த உயங்கு நடை ஒருத்தல்"** (அகம்; பா-308; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மூங்கில் நெருங்கிய பக்கமலை மறைய மேகம் கால் இறங்கி மழை பொழிந்தது. என மழைப் பொழிவினை விளக்க, **"வேய்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இதனை, **“வேய் பயில் அடுக்கம் புதையக் கால் வீழ்ந்து”** (அகம்; பா-312; வ-9) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

வேங்கை மரத்தின் நிழலில் நின் ஓட்டத்தைத் தவிர்த்துத் தங்கிப் பெய்யும் மழை, என மழைப் பொழிவினை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அழல் சினை வேங்கை நிழல் தவிர்த்து அசைஇ”** (அகம்; பா-398; வ-17) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**தலைவியின் ஊர்**

மழை வருகையை அறிந்து மயில்கள் ஆடும் மலைப் பக்கத்தில் உள்ள நல்ல ஊர் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“மயில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“மழை வரவு அறியா மஞ்ஞை ஆலும்”** (ஐ.நூறு; பா-298; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மடல்கள் தாழ்ந்த பனைமரங்களை உடைய எமது சிறிய ஊர் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“பனை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“மடல் தாழ் பெண்ணை எம் சிறுநல் ஊரே”** (குறுந்; பா-81; வ-7) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

பசிய மூங்கில்களின் குருத்தைத் தின்ற பெரிய ஆழமான வாயை உடைய பேதைமை உடைய யானை திண்ணுதலினால் குறைவுபட்ட மூங்கில் உடைய உச்சியினிடையே உள்ளது தலைவியின் ஊர், எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“கழை, யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“குவையுடைப் பசுங் கழை தின்ற கயவாய்ப்; பேதை யானை சுவைத்த; கூழை மூங்கிற் குவட்டிடையதுவே”** (குறுந்; பா-179; வரி-5-7) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

வேங்கை மரத்தின் மலர் மணம் வீசுகின்றது தலைவியின் சிற்றூர், எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு தலைவியின் ஊரினை விளக்க, **“வேங்கை கமழும் எனும் சிறுகுடி”** (குறுந்; பா-235; வ-6) என்ற வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

வேர்ப்பலா மரத்தின் கிளைகள் தோறும் சுளைகளையுடைய பழங்கள் தொங்கும் முற்றம் உள்ள வீட்டை உடையவள் தலைவி எனத் தலைவியின் இல்லத்தினை விளக்க, **“பலா”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு, **“சினை தொறும் தூங்கும் பயம் கெழு பலவின்”** (நற்; பா-77; வ-5) இப்பாடல் வரியானது விளக்குகின்றது.

பல இசைக் கருவிகள் இசைக்க வலிமையான கயிற்றால் கழையேறி விளையாட்டு நடத்தி விளையாடினாள். அதைப் பார்த்த குரங்குக்குட்டி மெல்லிய தலையையுடைய பெண்குரங்கின் வலிமையான குட்டி கயிற்றில் தொங்கி விளையாடியது. அதைப் பார்த்த சிறுவர்கள் நறிய சிறுகுன்றில் மூங்கில் கணுக்களில் ஏறி விரைவாகத் தாளம் கொட்டினர். அக்குன்றில் வாழ்பவள் கொடிச்சி, எனத் தலைவியின் ஊரினை விளக்க, **"குரங்கு, மூங்கில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"துய்த் தலை மந்திவன் பறழ் தூங்க; கழைக்கண் இரும் பொறை ஏறி விசைத்து எழுந்து"** (நற்; பா-95; வரி-4-5) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

இடியேறு மயக்கமுள்ள இளம்பிடியானை வருந்தும்படியும் செய்து ஆண்யானை துதிக்கையூன்றி விழும்படி எறிந்து கொன்றது. இறந்த யானையின் வெண்மையான கொம்பைக் கைக்கொண்டு பாறையில் வைக்கவும் பெரிய நகத்தைப் புதைக்கவும், சிறுகுடியில் ஆரவாரம் ஏற்படுத்தியமலை சிறுகுடி எனத் தலைவியின் சிறுகுடியினை விளக்க, **"பிடி, களிறு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"மையல் மடப்பிடி இனைய; கை ஊன்றுபு இழிதரு களிறு எறிந்தன்றே"** (நற்; பா-114; வரி-11-12) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

மெல்லிய பள்ளத்தின் பக்கத்தில் காட்டு மல்லிகை அரும்புகின்ற சிறுகுடி எனச் சிறுகுடியினை விளக்க, **"மல்லிகை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"மெல் அவல் மருங்கின் மௌவலும் அரும்பின"** (நற்; பா-122; வ-4) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

ஆண் மானைப் பிரியும் பெண்மானைப் போல் பிரிந்து சென்று மூங்கில் உயர்ந்துள்ள தன் சிறுகுடியினுள் சென்றாள் எனத் தலைவியின் சிறுகுடியினை விளக்க, **"மான், மூங்கில்"** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வாறு தலைவியின் சிறுகுடியினை விளக்க, **"ஏறு பிரி மடப்பிணை கடுப்ப வேறுபட்டு; உறு கழை நிவப்பின் சிறுகுடிப் பெயரும்"** (நற்; பா-204; வரி-9-10) என்ற வரிகள் விளக்குகின்றன.

இவ்வாறு தலைவியின் ஊர், குடி, நிலம், போன்றவற்றை விளக்க, கருப்பொருள்கள் இன்றியமையாத பங்கினைப் பெறுகின்றன என்பதை உணர்த்துகின்ற கருத்தாவது பின்வருமாறு; ***"எந்த ஒரு படைப்பாக்கமும் அது தோன்றிய நிலப் பரப்பில் உள்ள சமூகச் சூழலாகிய கருப்பொருளின்றி உருவாக்க இயலாது"*** (திணைக் கோட்பாடும் தமிழ் இலக்கிய மரபும்; ப-39) என ஜவஹர் குறிப்பிடுகின்றார்.

**தோழி கூற்று**

கரிய கிளைகளையுடைய குறிஞ்சி மரங்களையுடைய இருப்பதற்கு இனிய ஊர்க்கு, காவலர்க்கு மறைந்து காவல் உடைய தினைப் புனத்தை வளைந்து உண்ட பெரிய ஆண்

யானையைப் போல் செல், என தலைவனிடத்துத் தோழியுடைய கூற்றினை விளக்க, **“குறிஞ்சிமரம், யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பெருங்களிற்று ஒருத்தலின் பெயர்குவை; கருங்கோற் குறிஞ்சி நும் உறைவு இன் ஊர்க்கே”** (அகம்; பா-308; வரி-15-16) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

குறிஞ்சிப் பூக்கள் சிறப்புப் பூவாதலால் தான் குறிஞ்சி நிலம் எனப் பெயரிட்டனர் என்பதற்குச் சான்றுக் கருத்தாவது பின்வருமாறு;

***“தொல்காப்பியர் காலத்திற்குப் பன்னூற்றாண்டு கட்கு முற்பட்டத் தமிழ் மக்கள் மலைநாட்டிற்குக் குறிஞ்சி நிலம் எனப் பெயரிட்டார்கள். காந்தள், வேங்கை, ஆரம், அகில் என்ற இவற்றில் ஒன்றின் பெயரால் அதனைக் கூறியிருத்தல் கூடாதோ? குறிஞ்சிப்பூவே சிறப்புப் பூவாதலால் குறிஞ்சியென மலையையும் மலைசார்ந்த இடத்தையும் குறித்தார்கள். அவ்வாறே பிற நிலங்கட்கும் முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனப் பெயர் வைத்தற்கும் சிறந்த காரணங்கள் உள்ளன”*** (தனிநாயக அடிகள்; தமிழ்த் தூது; பக்-54-55) என்பதாகும்.

பெண்குரங்கு ஏறியறியாத மரங்கள் நெருங்கிய குன்றில் விளையாடினோம். அப்பொழுது தினைக் கதிர்களைக் கவர்ந்து கொண்டு போகாத இரு உயிரினங்கள். ஒன்று பிடியையும், குட்டியையும் கவர்ந்து கொண்டு திரியும் ஆண் யானை மற்றது சிறிய பசிய கிளிக்கூட்டம், என தலைவன் சிறைப்புறத்தனாக இருக்க தங்களது இற்செறிவினை விளக்க தோழி கூற்றாக அமைந்தது இக்கருத்து. அவ்வாறான தோழி கூற்றினை விளக்க பயன்பட்டக் கருப்பொருள்கள், **“மந்தி, பிடி, யானை, கிளி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கன்றுடை மருங்கின் பிடி புணர்ந்து இயலும்; அண்ணல் யானைக்கு அன்றியும் கல்மிசைத்; மந்தியும் அறியா மரம் பயில் ஒரு சிறை; பெருங்குரல் கொள்ளாச் சிறு பசுங் கிளிக்கே?”** (நற்; பா-194; வரி-3,5,7,10) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**ஆற்றுவழி**

வெண்மையான கொம்பையுடைய யானை பாய்ந்து குத்திய புண் மிக்கதால் பசுமையான கண்ணையுடைய ஆண் புலி குகைக்குள் ஒடுங்க இருக்க செம்முருக்கின் அரும்பைப் போன்ற கூரிய நகத்தையுடைய பெண்புலி அதனைக் காவல் மேற் கொண்டிருக்கும், என ஆற்று வழியினை விளக்க, **“யானை, புலி, முருக்கு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வெண்கோட்டு யானை பொருத புண் கூர்ந்து; பைங்கண் வல்லியம் கல் அளைச் செறிய; முருக்கு அரும்பு அன்னவள் உகிர் வயப் பிணவு”** (அகம்; பா-362; வரி-3-5) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**சாட்சி**

தினையின் அடியைப் போன்ற சிறிய பசிய கால்களையுடைய நாரையானது ஓடுகின்ற நீரில் ஆரல் மீனின் வரவை உண்ணும் பொருட்டுப் பார்த்து நின்றது. அது ஒன்றுதான் தலைவன் தலைவி களவு மணத்திற்குச் சாட்சியாக விளங்கியது எனக் களவு மனசாட்சியினை விளக்க, **“மீன், குருகு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. அதனை, **“ஒழுகு நீர் ஆரல் பாாக்கும்; குருகும் உண்டு தான் மணந்த ஞான்றே”** (குறுந்; பா-25; வரி-4-5) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**தலைவியின் செயல்**

வளைந்த அலகையுடைய சிறிய கிளிகளை விளைந்த தினையிடத்துப் படாமல் கடிதல் தலைவியின் செயல் எனத் தலைவியின் செயலினை விளக்க, **“கிளி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு தலைவியின் செயலினை விளக்க, **“வளைவாய்ச் சிறு கிளி விளைதினைக் கடீஇயர்”** (குறுந்; பா-141; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

தினைப் புனத்தில் கதிரை உண்ணும் பொருட்டு வரும் கிளிகளை ஓட்டுதலே தலைவியன் செயல் எனத் தலைவியின் செயலை விளக்க, **“கிளி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“புனக் கிளி கடியும் பூங்கட் பேதை”** (குறுந்; பா-142; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**மடலேறுதல்**

சிறந்த உச்சியை உடைய பனையின் கண் முதிர்தலை உடைய பெரிய மடலால் செய்த குதிரை என மடலேறுதலினை விளக்க, **“பனை”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“விழுத்தலைப் பெண்ணை விளையன் மா மடல்”** (குறுந்; பா-182; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

நெடிய கரிய பனை மரத்தின் மடல் செய்தான், எனத் தலைவன் செய்த மடலினை விளக்க, **“பனை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“நெடுமாப் பெண்ணை மடல் மானோயே”** (நற்; பா-146; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**குறத்தியின் ஊர்**

முழந்தாளை உடைய கரிய பிடியினது மெல்லிய தலையை உடைய குன்றுகள் மிக்க மலைப் பக்கத்திலுள்ள ஊர் எனக் குறத்தியின் ஊரினை விளக்க, **“பிடி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி”** (குறுந்; பா-394; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**அறுவடை நாள்**

நல்ல நாளை அறிவுறுத்தும் வேங்கையும் மலர்கள் எனக் கூறியதில் இருந்து அறுவடை செய்யும் நாள் வந்தது. எனவே விரைவாக வரைந்து மணம் புரிக என்பதனை விளக்க, **"வேங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"நல்நாள் வேங்கையும் மலர்கமா, இனி என"** (நற்; பா-206; வ-7) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**ஊசல் அமைத்தல்**

கரிய அடிப்பாகத்தையுடைய வேங்கை மரத்தின் சிவந்த பூவுள்ள வளைந்த கிளையில் வடு ஏற்படுமாறு கயிற்றைக் கட்டி ஊசல் அமைத்தான். என ஊசல் அமைத்தலை விளக்க, **"வேங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"கருங்கால் வேங்கைச் செவ்வீ வாங்கு சினை"** (நற்; பா-222; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**வீரரின் மகள்**

வலிய மானை விரும்பிக் கொள்ளும் வீரரின் மகளிர் என வீரரின் மகளிரை விளக்க, **"மான்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என வீரரின் மகளை விளக்க, **"காடு தேர்ந்து அசைஇய வயமான் வேட்டு"** (நற்; பா-276; வ-2) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

**குரவைக் கூத்து**

பெரிய மலையில் தோன்றிய வளைந்த மூங்கிலிலே முதிர்ந்த நறவை உண்டு வேங்கை மர முற்றத்திலே குரவைக் கூத்து நடைபெறுகின்றது எனக் குரவைக் கூத்தினை விளக்க, **"மூங்கில், வேங்கை"** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"வாங்கு அமைப் பழுதிய நறவு உண்டு; வேங்கை முன்றில் குரவையும் கண்டே"** (நற்; பா-276 வரி-9-10) என்ற பாடல் வரிகள் விளக்கிநிற்கின்றன.

**தொகுப்புரை**

மலையும், மலைச்சாரலுமான குறிஞ்சி நிலப் பகுதியில் காணப்படும் கருப்பொருள்களைக் கொண்டு தலைவனின் செயல், தினைப்புனம், தெய்வ வழிபாடு, தலைவனின் மலையின் சிறப்பு, திருமணம், தலைவியின் அழகு நலம், வள்ளைப்பாட்டு, தந்தையின் ஒப்புதல், உவமைகள், சுனை, இரவுப்பொழுது, தலைவியின் வருத்தம், தலைவனின் வீரம், பகற்குறி, காவலர் பற்றிய செய்திகள் விளக்கப்படுகின்றன.

மேலும் சூரர மகளிர், வரலாற்றுச் செய்திகளில் கொல்லிமலை, மூவேந்தர், நன்னன், வேண்மான் ஆஅய் எயினன், மிஞிலி, நள்ளி, திதியன், மாங்காடு, பொதியமலை, அதியமான், ஓரியின்காடு, தொண்டி, ஆர்க்காடு, பாரம் என்னும் ஊர், போன்றவையும், முன்பனிக்காலம், வெறியாடுகளம், தலைவன் அணிந்தவை, வேடர்கள், சோலை, இல்செறிவு, வெறியாடுகளம், நீர்த்துறை, தலைவியின் தந்தை, மாலைக்காலம், மழை, தலைவியின் ஊர், தோழி கூற்று, ஆற்றுவழி, சாட்சி, தலைவியின் செயல், மடலேறுதல், குறத்தியின் ஊர், அறுவடை நாள், ஊசல் அமைத்தல், வீரரின் மகள், குரவைக்கூத்து போன்ற செய்திகள் பின்புலங்களாகப் புலப்படுத்தப்படுகின்றன.

## இயல் 2

## முல்லைத்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத்திறன்

**முல்லைநிலம்**

முல்லை நிலத்திலே நிகழும் ஒழுக்கம் முல்லைத்திணை. காடும் காடு சார்ந்த நிலமும் முல்லை நிலம். முல்லை நிலத்தின் தெய்வம் மாயோன். மாயோனைத் திருமால் என்பர். மாயோன் மேய காடுறை உலகமும் என்பது தொல்காப்பியம்.

பிரிந்து போன காதலன் திரும்பும் வரையிலும் காதலி தன் கற்பின் வலிமையால் தன் துயரத்தைப் பொறுத்துக் கொண்டிருப்பது முல்லையொழுக்கம். அவள் ஆறுதலோடு இருப்பதற்கான காரணங்களைக் கூறுவதும் முல்லைத் திணையே. முல்லைத் திணையின் ஒழுக்கத்தை இருத்தல் என்று சுருக்கமாகக் கூறுவர்.

***“முல்லைநிலம், புறவு, காடு, கானம், செந்நிலம், செஞ்சுவல், பூவல், முல்லை, களரி, புன்புலம், குறும்பொறை என்று பல பெயர்களில் குறிப்பிடப் பெறுகின்றது”*** (தொல்காப்பிய உரைவளம் - அகத்திணையியல்; ப;134) என்று ஆ.சிவலிங்கனார் (ப.ஆ) கூறியுள்ளதைக் காணமுடிகிறது.

கார்கால மாலையில் முல்லை நிலத்தில் இருத்தல் ஒழுக்கம் நிகழும். இருத்தல் - பிரிந்து சென்ற தலைவன் வரும் வரை தலைவி ஆற்றியிருத்தல் மரம், செடி, கொடிகள் தழைத்த காட்டு நிலம், தழைத்த பசுமை நிறத்தால் தன்னிடம் வருவாருள்ளத்தைக் கிளர்ச்சி பெறச் செய்து அன்புணர்வை உண்டாக்குகிறது. இத்தகைய முல்லை நிலப் பாடல்களில் உள்ள கருப்பொருள்கள் மூலம் பல்வேறு செய்திகள் புலப்படுத்தப்படுகின்றன.

**தலைவன்கூற்று**

முல்லைக் கொடியின் நுண்ணிய அரும்பு மலர்ந்த காட்டில் பொறுமை நெருங்கிக் கலந்த நிலையொடு தலைவி உள்ளாள். எனவே மிக விரைவில் செல்லச் சொல்லி பாகனிடத்தில் கூறுகின்றான் தலைவன் எனத் தலைவனின் கூற்றினை விளக்க **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“உள்ளினள் உறைவோள் ஊரே; முல்லை”** (நல்; பா-59; வ-8) என்பதாகும்.

பெண்மான் மருண்டு விழிக்கும் கண்களையுடைய தன் குட்டிகளோடு மற்ற மான் கூட்டத்தினின்று இரிந்தோடியது. விருப்பமிக்க நெஞ்சத்தோடு அகலாமலிருந்த ஆண்மான் அவற்றைத் தேடி நிற்பதைப் பார். எனவே உன் தேரை விரைவாகச் செலுத்து என்று தேர்ப்பாகனிடம் கூறினான் தலைவன் எனத் தலைவன் கூற்றினை விளக்க, **“மான், இரலை”**

போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, விளக்கும் பாடல் வரிகள், **“கழிப் பெயர் களரில் போகிய மடமான், தேடூஉ நின்ற இரலை ஏறே”** (அகம்; பா-242, வரி-7,10) என்பதாகும்.

**முல்லைநிலம்**

புதுப் பூக்களுடன் தோன்றும் கொன்றை மலர்களோடு காணப்படும் காடு என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **“கொன்றை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற வரி, **“கதுப்பின் தோன்றும், புதுப்பூங் கொன்றை”** (குறுந்; பா-21; வ-3) என்பதாகும்.

காயாம் பூவின் வாடிய பூக்கள் பரவிக் கிடக்கும் காட்டில் உள்ள இடங்களில் இளமை வாய்ந்த பெண் மானைத் தழுவித் திரித்து விட்டாற் போன்ற கொம்பையுடைய ஆண்மான் புல்லை அருந்தித் தாவிச் செல்லும். பசுக்கூட்டங்களை அகன்ற முல்லை நிலத்தில் மேயவிடுவர் ஆயர்கள் என முல்லை நிலத்தினை விளக்க, **“காயா, பிணை, இரலை, முல்லை, கோவலர்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வாறு, **“காயாஞ் செம்மல் தாஅய், பல உடன்; அம் காட்டு ஆர்இடை மடப்பிணை தழீஇ; திரி மருப்பு இரலை புல் அருந்து உகள; முல்லை வியன் புலம் பரப்பி கோவலர்”** (அகம்; பா-14; வரி-2,5-7) என்ற இப்பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

சிறிய கரிய பிடவஞ்செடியாகிய வெண்மையான உச்சியை உடைய குறிய புதர் தலையில் சூடும் மாலை போல் மலர்கின்ற குளிர்ந்த நறுமணம் கமழும் முல்லைநிலம், என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **“பிடவம், முல்லை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“சிறு கரும் பிடவின் வெண்தலைக் குறும்புதல்; கண்ணியின் மலரும் தண் நறும் புறவில்”** (அகம்; பா-34; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

பசுமையான முல்லைக் கொடியின் மென்மையான நல்ல புதிய மலர்கள் வெண்மையாய் உள்ள களர்நிலம் முல்லைநிலம் என முல்லை நிலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“பைங்கொடி முல்லை மென் பதப் புதுவீ”** (அகம்; பா-74; வ-6) என்பதாகும்.

தீயைப் போன்ற கண்களையுடைய பன்றி நுண்ணிய மணலில் உள்ள சிறிய புதரில் உறங்கும். அதன் முதுகு மறைந்து போகுமாறு நறுமணம் கமழும் மலர்களை உடைய முல்லையின் மலர்கள் உதிரும் முல்லை நிலம், என முல்லை நிலப் பகுதியினை

விளக்க, **“பன்றி, முல்லை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நெருப்பின் அன்ன சிறுகட் பன்றி; நறுவீ முல்லை நாள் மலர் உதிரும்”** (அகம்; பா-84; வரி-6,8) என்ற பாடல் வரிகள் விளக்கிநிற்கின்றன.

காயாம் பூவின் நீலமணிபோன்ற அழகிய மலர்களிடையே சிவந்த இந்திர கோபப் பூச்சிகள் பரவின. முல்லைக் கொடிகளினின்றும் கழன்று விழும் வெண்மையான நல்ல மலர்களும் பரவிக் கிடக்கும் முல்லை நிலம், என முல்லை நிலத்தினை விளக்க, **“காயா, முல்லை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“மணிமருள் பூவை அணிமலர் இடைஇடை; முல்லை வீகழல் தாஅய், வல்லோன்”** (அகம்; பா-134; வரி-3,5) என்பனவாகும்.

பிடவுப் புதரின் நீண்ட காம்பையுடைய மலர்கள் செம்மண் நிலத்தில் உதிர்ந்து அழகுடன் விளங்கும். குளிர்ந்த காந்தள் பூ கட்டவிழ்ந்து விரியும். முறுக்கிய கொம்பையுடைய ஆண்மான் தெளிந்த நீரைக் குடித்து விருப்பம் உடைய துணையுடன் இன்பம் மிகத் தங்கும் முல்லை நிலம் என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **“பிடவம், கோடல், இரலை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“குறும்புதற் பிடவின் நெடுங்கால் அலரி; தண்கமழ் கோடல் தாது பிணி அவிழ; திரிமருப்பு இரலைதெள் அறல் பருகி”** (அகம்; பா-154; வரி-4,7-8) என்பனவாகும்.

நறுமணமுடைய முல்லைப் பூவுடன் செங்காந்தள் மலரும் மற்றும் பல பூக்களும் மலரும் முல்லைநிலம் என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **“முல்லை, செங்காந்தள்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நறுவீ முல்லையொடு தோன்றி தோன்ற”** (அகம்; பா-164; வ-6) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

வெண்மையான பிடவின் மலர்ந்த மலர் மணக்கும் முல்லைநிலம், குறுகிய முள்ளையும் கிளைகளையும் உடைய கள்ளி உச்சியை மூடிய முல்லைக் கொடியின் காம்பு கழன்ற புதிய பூக்களை மூச்செறிதலால் ஒதுக்கித் தெளிந்த நீரைக் குடித்து முறுக்குண்ட கொம்பையுடைய அழகிய மான் கலை, தன் பெண் மானுடன் தங்கும் முல்லைநிலம். இதனை விளக்க, **“பிடவு, கள்ளி, முல்லை, மான்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை. **“வெண்பிடவு அவிழ்ந்த வீகமழ் புறவில், குண்டைக் கோட்ட குறுமுள் கள்ளிப்; புன்தலை புதைத்த கொழுங்கொடி முல்லை; தெள்அறல் பருகிய திரிமருப்பு எழிற்கலை”** (அகம்; பா-184; வரி-7-9,11) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

செம்முல்லை, வெண்முல்லையுடன் கூடி நறுமணம் கமழும் மலர் செறிந்த முல்லைநிலம், என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **"செம்முல்லை, வெண்முல்லை"** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **"தளவ முல்லையொடு தலைஇத் தண்ணெண"** (அகம்; பா-254; வ-15) என்பதாகும்.

கிளி இனிதாய் வளர்ந்த இளைய குஞ்சின் சிறகைப் போன்ற பெய்யும் மலை வளர்ந்த பசிய பயிரையுடைய காடு என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **"கிளி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"தளிர் இயல் கிள்ளை இனிதினின் எடுத்த"** (அகம்; பா-324; வ-3) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

நிலவின் ஒளி என்னும்படி அரும்புகள் விரிந்த வளைந்த அடியையுடைய பிடாமரம், அம்மரத்தில் மெல்லென மயிலின் கூட்டம் திரியும் முல்லை நிலம் என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **"பிடா, மயில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"தொருமுகை விரிந்த முடக்காற் பிடவின்; மயிலினம் பயிலும் மரம் பயில் கானம்"** (அகம்; பா-344; வரி-3,6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

***"காந்தள், காயா, கொன்றை, முல்லை, பித்திகம், பீர்க்கம், நீலம் போன்ற மலர்கள் முல்லை பாடிய புலவர்களால் அதிகமாகப் பயன்படுத்தப்பட்ட பூக்களாகும்"*** (ஆ.சிவலிங்கனார்; தொல்காப்பிய உரைவளம் அகத்திணையியல்; ப-146) என்ற செய்தியின் மூலம் பூக்கள் எண்ணற்ற கருத்தினைப் புலப்படுத்தி நிற்கின்றன.

போதவிழ்ந்து மலர்ந்த காயாவும், கொன்றையும், நெய்தலும், முல்லையும், தளவமும், பிடவமும் மலர்ந்து அழகு செய்யும் முல்லை நிலம், என முல்லை நிலப் பகுதியினை, **"காயா, கொன்றை, நெய்தல், முல்லை, தளவம், பிடவம்"** போன்ற பூக்களனைத்தும் விளக்குகின்றன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **"காயா, கொன்றை, நெய்தல், முல்லை; போதவிழ் தளவமொடு பிடவலர்ந்து கவினிப்"** (ஐ.நூறு; பா-412; வரி-1-2) என்பனவாகும்.

இளைய பிடியினைத் தழுவிய களிப்புடன் களிறு விளங்கும் முல்லை நிலம், என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **"பிடி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"மடப்பிடி தழீஇய மாவே"** (ஐ.நூறு; பா-416; வ-4) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

பொன்னென்னுமாறு மலர்ந்த கொன்றை தேன்மிகுதியாகக் கொண்டு மலர்ந்த காயா, மலர்கள் நிரம்பிய தோன்றி போன்றவற்றால் நல்லழகினை அடைந்துள்ளது முல்லைநிலம் என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **"கொன்றை, காயா, தோன்றி"** போன்ற

கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“பொன்னென மலர்ந்த கொன்றை; மணியென; தேம்படு காயா மலர்ந்த; தோன்றியொடு”** (ஐ.நூறு; பா-420; வரி-1-2) என்பனவாகும்.

கொன்றை மலர்களைத் தலையிலே சூடித் தலைவர் செல்லும் முல்லைநிலம், என முல்லைநிலப் பகுதியினை விளக்க, **“கொன்றை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“சுடுபொன் அன்ன கொன்றை சூடிக்”** (ஐ.நூறு; பா-432; வ-2) என்பதாகும்.

குட்டியோடு கூடிய மான்பிணைகள் உலவிக் கொண்டிருக்கும் காட்டுப்பகுதி, என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **“மான்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற வரியாவது, **“மறியுடை மான்பிணை உகளத்”** (ஐ.நூறு; பா-434; வ-2) என்பதாகும்.

நிலத்துக்கு அணிசெய்யும் நெய்தற் பூக்கள் மலர, பொன் போல் அழகிய கொன்றையும் பிடவமும் உடைய காட்டுப்பகுதி என முல்லை நிலத்தினை விளக்க, **“நெய்தல், கொன்றை, பிடவம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நிலன் அணி நெய்தல் மலரப்; பொலன் அணி கொன்றையும் பிடவமும் உடைத்தே”** (ஐ.நூறு; பா-435; வரி-2-3) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

ஒளி சுடரும் பூங்கொத்துகளைக் கொண்ட கொன்றையோடு மலர்ந்துள்ள குருந்த மரங்களையும் உடைய காட்டுப் பகுதி என முல்லைநிலப் பகுதியினை விளக்க, **“கொன்றை, குருந்து”** போன்றக் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“கொன்றையொடு மலர்ந்த குருந்துமா குடைத்தே”** (ஐ.நூறு; பா-436; வ-3) என்பதாகும்.

குளிர்ந்த மழையானது பெய்தலாலே வெண்மையாய் மலர்ந்திருக்கும். முல்லைப் பூக்களை உடைய காட்டுப்பகுதி, என முல்லை நிலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“வாலிய மலர்ந்த முல்லையும் உடைத்தே”** (ஐ.நூறு; பா-437; வ-3) என்பதாகும்.

தண்ணிய பெயலினைத் தந்த கார்காலப் பொழுதின் அமைவினாலே ஒண்மை சுடரும் தோன்றியும் தளவமுமாகிய பூக்களை உடையகாடு என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **“தோன்றி, தளவம்”** போன்றக் கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“ஒண்சுடர்த் தோன்றியும் தளவமும் உடைத்தே”** (ஐ.நூறு; பா-440; வ-3) என்பதாகும்.

முல்லை நிலத்தில் கரிய பிடர் உடைய ஆண்மான் தன் பிணையைத் தழுவியது. முல்லை மொட்டு மலர்ந்தது. பல இடங்களிலும் செங்காந்தள் தோன்றிப் புதர்தோறும் விளக்குப் போல் இருந்தன என முல்லை நிலத்தினை விளக்க, **“மான், முல்லை, செங்காந்தள்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“மா எருத்து இரலை மடப்பிணை தழுவ; முல்லை முகை வாய் திறப்ப, பல்வயின்; தோன்றி தோன்றுபு புதல் விளக்கு உறாஅ”** (நல்; பா-69; வரி-4-6) என்னும் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வரகின் கவர்ந்த கதிரைத் தின்ற அழகிய இளம் பெண்மான். கொடும்பு என்னும் கொடியுடைய அழகிய காட்டில் ஆண் மானோடு தங்கும் முல்லை நிலம், என முல்லை நிலத்தினை விளக்க, **“பிணை, இரலை, வரகு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“கவைக் கதிர் கறித்த காமர் மடப்பிணை; அரலை அம் காட்டு இரலையொடு வதியும்”** (நல்; பா-121; வரி-3-4) என்பனவாகும்.

ஒள்ளிய பூவையுடைய செங்காந்தளோடு குளிர்ந்த புதர்களில் மலர்ந்து அழகு செய்யும் அழகிய நன்மலர்க் கொன்றையின் ஒள்ளிய பூங்கொத்துக்கள் கிளைதோறும் தொங்கும். இவற்றால் புதுமை விரிந்தாற் போன்ற சிவந்த முல்லைநிலம், என முல்லை நிலப் பகுதியினை விளக்க, **“செங்காந்தள், கொன்றை”** போன்ற கருப்பொருட்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்குகின்ற பாடல் வரிகள், **“ஒண்பூந் தோன்றியொடு தண்புதல் அணிய; கொன்றை ஒள் இணர் கோடுதொறும் தூங்க”** (நல்; பா-221; வரி-2,4) என்பவையாகும்.

**பூவிற்பவள்**

பசிய குருக்கத்தி மலரோடு பித்திகை கலந்த மலர்களை வாங்கிக் கொள்ளீரோ, என பூ விற்பவன் கூவிக் கூவிப் பூவினை விற்கின்றாள் என பூவிற்பவளை விளக்க **“குருக்கத்தி, பித்திகை”** போன்ற கருப்பொருட்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“துய்த் தலை இதழ பைங் குருக்கத்தியொடு; பித்திகை விரவு மலர் கொள்ளீரோ? என”** (நல்; பா-97; வரி-6-7) ஆகியவரிகள் விளக்குகின்றன.

**கார்காலம்**

தன் இன்பம் மிகுதற்குக் காரணமான துணையாகிய தன் பிணையோடு வலிய பரற்கற்களே உடைமையால் தெளிவுற்றிருந்த நீரைக் குடித்த கலைமானானது

களிப்பினாலே துள்ளி விளையாடா நிற்கின்றது எனக் கார்ப்பருவத்தினை விளக்க **“பிணை, மான்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“வன்பரல் தெள் அறல் பருகிய இரலைதன்”** (குறுந்; பா-64; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

முல்லைக் கொடியிடத்தே விளங்கும் தொகுதியான அரும்புகள் பெண்களின் பற்களைப் போல விளங்கச் செய்கின்ற கார்காலம், என கார் காலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“பெயல் புறந்தந்த பூங்கொடி முல்லைத்”** (குறுந்; பா-126; வ-3) என்பதாகும்.

காசைப் போன்ற பேரரும்பினைக் கொன்றை மரம் தோற்றுவித்தது. அது குருந்தமரத்தோடும் சேர்ந்து சுழல்கின்ற கார்காலம், என கார்கால வருகையினை விளக்க, **“கொன்றை, குருந்து”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“காசின் அன்ன போது ஈன் கொன்றை; குருந்தொடு அலம் வரும் பெருந்தண் காலையும்”** (குறுந்; பா-148; வரி-3-4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

காயாவினது பூக்கள் பொருந்திய பெருங்கிளையானது மென்மை கொண்ட மயிற் கழுத்தினைப் போலத் தோற்றும். கொன்றையின் பசும்பூக்கள் பசலை நிறத்தை அடைகின்ற கார்ப்பருவம், சிறுத்த தலையினைக் கொண்ட பிணையிடத்தினின்றும் பிரிந்த, நெறிந்த கொம்பையுடைய ஆண்மானையும் தலைவன் காண்கின்ற கார்காலம், என கார்காலத்தினை விளக்க, **“காயா, மயில், கொன்றை, பிணை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“சென்ற நாட்ட கொன்றை அம் பசுவீ; இரலை மானையும் காண்பர் கொல் நமரே?; புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை; மென்மயில் எருத்தின் தோன்றும்”** (குறுந்; பா-183; வரி-1,4-6) விளக்கி நிற்கின்றன.

முல்லையின் மென்கொடிகள் முன்கைகளைப் போல் அரும்பின என கார்காலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என கார்காலத்தினை விளக்குகின்ற வரியாவது, **“எயிறு என முகையும் நாடற்குத்”** என்பதாகும்.

முல்லைக் கொடிகளில் தோற்றிய அரும்புகளும் முதிர்ச்சி அடைந்தன. தண்ணிய கார்காலத்தை ஏற்ற அகற்சி கொண்ட முல்லைப் பகுதிகள் முல்லை மலர்களோடு கூடியவாய் அழகு பெற்றன எனக் கார் காலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“முகைமுற் றினவே முல்லை; முல்லையொடு”** (குறுந்; பா-188; வ-1) என்பதாகும்.

இடி முழக்கத்திற்கு எதிராகக் காட்டுமயில்கள் ஆரவாரிக்கின்றன எனக் கார்ப்பருவ வருகையினை விளக்க, **“மயில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“கான மஞ்ஞை கடிய ஏங்கும்”** (குறுந்; பா-194; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

இதனை, ***“பருவச் சூழல் மாறினாலும் கார் காலத் தொடக்கத்தில் தலைவன் வருவதாகவே வாக்களித்திருந்தாலும் வினை முடிந்தால் மட்டுமே மீண்டு வருவான். இதுவே முல்லைத் திணையின் ஒழுக்கமாகும்”*** (பானூநூர்மைதீன்; பழந்தமிழ் அகப்பாடல்களில் நிலமும் பொழுதும்; ப-188) என்ற கருத்தால் அறியமுடிகிறது.

முல்லைக் கொடிகளிலே கூர்மையான முனையை உடைய அரும்புகள் தோன்றவும் தோன்றா மரத்தின் அரும்புகளுடன் கொன்றை மரத்தின் அரும்புகள் கட்டவிழ்ந்து விரியும். பெரிய கொம்பையுடைய ஆண் மான்கள் பள்ளங்களில் எல்லாம் துள்ளிக் குதிக்கும் கார்காலம், என கார்காலத்தினை விளக்க, **“முல்லை, தோன்றா, கொன்றை, இரலை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“முல்லை வைந்துனை தோன்ற, இல்லமொடு; பைங்காற் கொன்றை மென்பிணி அவிழ; பரல் அவல் அடைய, இரலை தெறிப்ப”** (அகம்; பா-4; வரி-1-2,4) என்பவையாகும்.

வரகின் கிளையான கதிர்களின் கரிய புறத்தைப் பற்றி உண்டன மயில்கள் அழகிய தோகையைப் பரப்பி இன்பம் ஏற்படக் கொல்லையை உழும் உழவர் உணவு உண்பதற்கு நிழலாக விட்டு வைத்த குருந்த மரத்தின் கிளையிலிருந்து கிளிகளை ஓட்டும் மகளிரைப் போன்று ஒலியுண்டாக அகவும் கார்காலம், எனக் கார்காலத்தினை விளக்க, **“வரகு, மயில், குருந்தமரம், கிளி”** போன்ற கருப் பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“குடுமி நெற்றி, நெடுமாத் தோகை; வல் இலைக் குருந்தின் வாங்குசினை இருந்து; கிளிகடி மகளிரின் விளிபடப் பயிரும்”** (அகம்; பா-194; வரி-11,14-15) என்பனவாகும்.

நறுமணம் கமழும் முல்லை மலரில் மாலைக் காலத்தில் ஆரவாரம் செய்யும், கார்காலம் என கார்காலத்தினை விளக்க **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“மணம் கமழ் முல்லை மாலை ஆர்ப்ப”** (அகம்; பா-204; வ-7) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

கொடியின் மீது அரும்புகள் மலர்ந்த ஒளி பொருந்திய முல்லை மலர்ந்து வண்டின் கூட்டத்தைப் பிற இடங்களுக்குச் செல்ல ஓட்டாமல் தடுக்கும் கார்காலம் எனக் கார் காலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“முகைவாய் நிறந்த நகைவாய் முல்லை”** (அகம்; பா-244; வ-4) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

இளைய பெண்மான் வலமாகத் திரிந்த கொம்பையுடைய தலைமைக் கலைமானுடன் குருந்த மரத்து நிழலில் தங்கியிருக்கும். வண்டு ஒலித்து ஊதப் பிடவினது அரும்புகள் மலரும், அரிய புள்ளிகளையுடைய மயில் ஆடும். காயாம் பூவின் உலர்ந்த பூவும் ஈரம்பட்ட நிலத்தில் பரவி அழகு செய்யும் கார்காலம் எனக் கார்காலத்தினை விளக்க, **“பிணை, இரலை, குருந்து, பிடவம், மஞ்ஞை, காயா”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை; வலம் திரிமருப்பின் அண்ணல் இரலையொடு; அலங்கு சினைக் குருந்தின் அல்கு நிழல் வதிய; சுரும்பு இமிர்பு ஊத, பிடவுத் தளை அவிழ; அரும் பொறி மஞ்ஞை ஆல வரி மணல், காயாஞ் செம்மல் தாஅய், பலஉடன்”** (அகம்; பா-304; வரி-8-12,14) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

குட்டியையுடைய இளைய பெண்மானைத் தழுவிக் கொண்டு காட்டில் முறுக்கிய கொம்பையுடைய கலைமான் பசும்பயிரில் துள்ளித் திரியும் கார்ப்பருவம் எனக் கார்ப்பருவத்தினை விளக்க, **“பிணை, இரலை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **“மறியுடை மடப்பிணை தழீஇ புறவின் திரிமருப்பு இரலை பைம்பயிர் உகள”** (அகம்; பா-314; வரி-5-6) என்ற பாடல் வரிகள் விளக்கிநிற்கின்றன.

மயில் கூட்டம் ஆடும் கார்காலம், எனக் கார்காலத்தினை விளக்க, **“மயில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“இனமயில் அகவும் கார் கொள் வியன்புனத்து”** (அகம்; பா-334; வ-13) என்பதாகும்.

நீண்ட பூங்கொத்துகளைக் கொண்ட கொன்றையும், தோன்றிச் செடி விளக்கைப் போன்ற பூக்களும், முல்லை மலர்களும், தேற்றாவின் மலர்களும் மலர்ந்து விளங்கும் கார் காலம், எனக் கார்காலத்தினை விளக்க, **“கொன்றை, தோன்றி, முல்லை, தேற்றா”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“நீடு இணர்க் கொன்றை கவின் பெற, காடுஉடன்; சுடர் புரை தோன்றிப் புதல் தலைக் கொளாஅ; முல்லை இல்லமொடு மலர, கல்ல”** (அகம்; பா-364; வரி-5-7) என்பதாகும்.

பவழம் போன்ற காயாஞ் செடியின் வாடிய மலர்கள் மறையும் கார்ப்பருவம் எனக் கார்ப் பருவத்தினை விளக்க **“காயா”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“மணி மண்டு பவளம் போல காயா”** (அகம்; பா-374; வ-13) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

மழையானது மிகுதியாகப் பெய்ததாகக் கார்காலம் முல்லை நிலப் பகுதியில் தொடங்கிவிட்டது எனக் கார்காலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள்

பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"கார்தொடங் கின்றாற் காமர் புறவே"** (ஐ.நூறு; பா-411; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

செம்முல்லையினது சிவந்த அரும்புகளை அசைகின்ற சிறகுகளையுடைய வண்டுகள் மொய்த்துப் பிணியவிழ்ந்து மலரச் செய்யும் கார்காலம் எனக் கார்கால வருகையினை விளக்க, **"முல்லை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"பணிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை"** (ஐ.நூறு; பா-447; வ-2) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

முல்லையின் பூக்களைக் கொள்ளும் படியாக மேகங்கள் பெரும் பெயலைச் செய்யத் தொடங்கிய கார்காலம், எனக் கார்காலத்தினை விளக்க, **"முல்லை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **"மெல்லவன் மருங்கின் முல்லை பூப்ப"** (ஐ.நூறு; பா-448; வ-3) என்பதாகும்.

செம்முல்லையின் பசுமையான கொடியைத் தழுவியபடியே முல்லையும் தோன்றி மலர்ந்திருக்கும் கார்காலம். எனக் கார் காலத்தினை விளக்க, **"முல்லை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"தளவின் பைங்கொடி தழீஇப் பையென; கார்நயத் நெய்றும், முல்லை; அவர்"** (ஐ.நூறு; பா-454; வரி-1,3) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

சிவதைக் கொடியின் பெரிய மலர்கள் வெண்கொடிகளையுடைய ஈங்கையது பசுமையான புதலிடத்தே அழகியதாக மலர்வதாகிய கார்ப்பருவம் என கார்ப்பருவத்தினை விளக்க, **"பகன்றை, ஈங்கை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனைப், **"பகன்மதி யுருவிற் பகன்றை மாமலர்; வெண்கொடி ஈங்கைப் பைம்புதல் அணியும்"** (ஐ.நூறு; பா-456; வரி-2-3) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

மேகம் சிதறின நீர்த்தொகுதியாலே பிடவங்கள் அரும்பினைத் தோற்றுவித்தன எனக் கார்ப்பருவத்தினை விளக்க, **"பிடவம்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **"வான்பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகையக்"** (ஐ.நூறு; பா-461; வ-1) என்பதாகும்.

பசுமையான கொடியைக் கொண்ட முல்லையும் பூவரும்புகளைத் தோற்றுவித்த கார்ப்பருவம் எனக் கார்ப்பருவத்தினை விளக்க, **"முல்லை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"பருவஞ் செய்தன பைங்கொடி முல்லை"** (ஐ.நூறு; பா-476; வ-3) என்ற வரி புலப்படுத்தி நிற்கின்றது.

மானின் பிணையானது தன் கன்றோடும் பிணைந்து திரியும் கார்ப்பருவம் எனக் கார்ப்பருவத்தினை விளக்க, **“மான்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“மாதர் மான்பிணை மறியொடு மறுகக்”** (ஐ.நூறு; பா-493; வ-2) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

குளிர்ந்த மண்ணின் மணம் கமழும் காட்டிலே முல்லைகள் மலர்களோடும் கூடி விளங்கும் கார்காலம் எனக் கார்காலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியானது, **“தண்கமழ் புரவின் முல்லை மலர”** (ஐ.நூறு; பா-494; வ-2) என்பதாகும்.

இவ்வாறு அந்நிலங்களில் காணப்படும் மலர்களேயும் பெயர் பெற்றிருக்கின்றது என்பதற்கு, ***“பல்வேறு மலர்கள் ஒரு நிலத்திற் காணப்படுமாயின் அந்நிலத்தில் சிறப்பாக மிகுதியாகக் காணப்படுவது எப்பூவோ அப்பூவாலேதான் பெயர் பெற்றுள்ளது. எனவே ஒழுக்கங்களும், நிலங்களும் பூக்களாற்றான் பெயர் பெற்றன என்பது ஒருதலை”*** (தி.முத்து கண்ணப்பன்; சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம்; பக்-19-20) என்ற வரிகள் சான்றாக அமைகின்றன.

கோதை போன்ற மலர்களைக் கொண்டதான கொன்றைகளும் பூத்துள்ளன என கார்ப்பருவத்தினை விளக்க, **“கொன்றை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“குறும்பல் கோதை கொன்றை மலர”** (ஐ.நூறு; பா-497; வ-1) விளக்கும் பாடல் வரிகளாகும்.

பிடவ மலர்களும், செம்முல்லை அரும்புகளும் தோற்றுவிக்கும் கார்ப்பருவம் எனக் கார்ப்பருவத்தினை விளக்க, **“பிடவம், தளவம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பிடவம் மலரத், தளவம் நனையக்”** (ஐ.நூறு; பா-499; வ-1) என்ற பாடல் வரி விளக்கிநிற்கின்றது.

பிடவம், கொன்றை, காந்தள் ஆகிய மூன்றும் மலர்ந்து விளங்கும் கார்காலம் எனக் கார்காலத்தினை விளக்க, **“பிடவம், கொன்றை, கோடல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பிடவமும், கொன்றையும், கோடலும்”** (நல்; பா-99; வ-9) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

மயில் அடிபோன்ற இலையை உடைய நொச்சி வேலிமீது படர்ந்த மனையின் நடுவிலுள்ள முல்லைக் கொடியின் அரும்பின் நொச்சியின் அரும்பும் மலர, கடல்நீரை உண்டு மேகம் காலை நேரத்தில் பெய்யும் கார்ப்பருவம் எனக் கார்காலத்தினை விளக்க,

**“மயில், நொச்சி, முல்லை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“மயில் அடி இலைய மாக் குரல் நொச்சி; மனை நடு மௌவலொடு ஊழ்முகை அவிழ”** (நல்; பா-115; வரி-5-6) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

சிவந்த பூவையுடைய முல்லைப்பூ தேன் மணம் கமழும் நல்ல யானையின் புள்ளிகளையும் வரிகளையுமுடைய புகரமைந்த முகம் போன்ற குளிர்ந்த புதர்களில் முல்லையின் பசிய மலர்கள் அழகு பெற மலர்ந்திருக்கும் கார்காலம், எனக் கார்காலத்தினை விளக்க, **“முல்லை, யானை”** போன்ற கருப்பொருட்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகளானவை, **“சிறுவீ முல்லைத் தேம் கமழ் பசு வீ; பொறி வரி நல்மான் புகர் முகம் கடுப்ப”** (நல்; பா-248; வரி-1-2) என்பனவாகும்.

**தலைவியின் அழகு நலம்**

காந்தள் மலரைப் போன்ற தன் மெல்லிய விரல்களை உடையவள், குவளை மலரைப் போன்று விளங்கும் மையுண்ட கண்களை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“காந்தள், குவளை”** போன்ற கருப்பொருட்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்; குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்”** (குறுந்; பா-167; வரி-1,3) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

முல்லை மொட்டுக்களின் நறுமணத்தை வீசுகின்றன தலைவியின் தோள்கள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“இன்றும் முல்லை முகைநாறும்மே”** (குறுந்; பா-193; வ-6) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

கொல்லைக் கண் பூத்த முல்லையின் பசிய அரும்பினது தாதைப் போன்று மணம் வீசும் நெற்றியை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“பெய்த புலத்துப் பூத்த முல்லைப்”** (குறுந்; பா-323; வ-4) என்பதாகும்.

நெருங்கிய காந்தளின் போது விரிந்த மலரென மணக்கும் அழகை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“காந்தள்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“நெடும் பெருங்குன்றத்து அமன்ற காந்தள்”** (அகம்; பா-4; வ-15) என்ற பாடல் வரி விளக்கி வருகின்றது.

குளிர்ந்த கண்களையும் மூங்கில் போன்ற பருத்த தோள்களையும் உடையவள், எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அரி மதர் மழைக்கண், அமைபுரை பணைத்தோள்”** (அகம்; பா-114; வ-14) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

மூங்கில் போன்ற தோளினை உடையவள் தலைவி எனத் தலைவியின் தோளினை விளக்க, **“பணை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“தடமென் பணைத்தோள் மடமொழி அரிவை”** (அகம்; பா-324; வ-2) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

மான்பிணை நோக்குப் போன்ற கண்களையுடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மான்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வெரு உப்பிணை மான்நோக்கின் நல்லாள் பெறூஉம், இக்”** (கலி; பா-4; வ-22) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

முல்லை மணம் வீசுகின்ற கூந்தலை உடையவள் தலைவி எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“சிறுமுல்லை நாறிய தற்குக் குறுமறுகி”** (கலி; பா-5; வ-54) என்ற வரி விளக்கி நிற்கின்றது.

முல்லைமொட்டும், மயிலிறகுக் குருத்தும் வரிசையாக வைத்தது போன்ற பல்லினை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“முல்லை, மயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் வரி, **“முல்லை முகையும் முருந்தும் நிரைத்தன்ன”** (கலி; பா-8; வ-15) என்பதாகும்.

முல்லை மலர் செறிந்த காணச் சிற்றாற்றின் அயலேயுள்ள இடத்திலே மாவடுவைப் பிளந்தது போன்ற கண்ணினை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“தளவம், மா”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“தளவமலர் ததைந்ததோர் கானச்சிற் றாற்றயல்; இளமாங்காய் போழ்ந்தன்ன கண்ணினால் என் நெஞ்சம்”** (கலி; பா-8; வ-27-28) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

மயிற்கழுத்துப் போன்ற நிறத்தினை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மயில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“மயில் எருத்து வண்ணத்து மாயோய்! மற்று இன்ன”** (கலி; பா-8; வ-38) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

கோங்கினது முதிராத இளமொட்டுப் போன்று புடைத்த மார்பகங்களை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“கோங்கு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“பேணித் துடைத் தன்ன மேனியாய்! கோங்கின்”** (கலி; பா-17; வ-2) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பெரியவாய் அமர்ந்த குவளை மலரினைப் போல விளங்கும் கண்களை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“மேரமர் மலர்க்கண் மடந்தை! நீயே”** (ஐ.நூறு; பா-427; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

முல்லை மணம் நாறுகின்ற கூந்தலினை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற பாடல் வரியாவது, **“முல்லை நாறுங்கூந்தல் கமழ்கொள”** (ஐ.நூறு; பா-446; வ-1) என்பதாகும்.

‘முல்லை’ மலரின் அழகிய வண்ணத்தைப் பற்றி விளக்கும் சான்றாக, ***“முல்லைப் பூ காடும் காடு சார்ந்த இடத்திலும் மிகுதியாகப் பூத்தன. குறிஞ்சிப்பூ காதலுக்கும் கடலுக்கும் காட்சிப் பொருளாய் அமைந்தது, முல்லைப்பூ கற்பின் திண்மைக்கு நிலைக்களனாய் அமைந்தது, முல்லை வெண்மையானது, தூய்மையானது”*** (டாக்டர் ச.வே.சுப்பிரமணியன்; தமிழர் வாழ்வியல் தாவரம்; ப.83) என்பதை இணைத்துக் காணலாம்.

கொத்தான காய்களைக் கொண்ட கொன்றையைக் குழலாகப் பயன்படுத்தியவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“கொன்றை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“துணர்க்காய்க் கொன்றை குழற்பழம் ஊழ்ந்தன”** (ஐ.நூறு; பா-458; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

நறிய முல்லை மலர்களைக் கொய்து அழகுபெறத் தொகுத்து வைத்த வனப்பு மிக்க கூந்தல் எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது **“புதன் மிசை நறுமலர் கவின் பெறத் தொடரி, நின்”** (ஐ.நூறு; பா-463; வ-1) என்பதாகும்.

மாந்தளிரைப் போன்ற மேனியை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மா”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“மறக்க விடுமோ? நின் மாமைக் கவினே”** (ஐ.நூறு; பா-470; வ-6) என்பதாகும்.

தலைவியைப் போல சாயலுடையன மயில்கள். தலைவியின் நுதலைப் போல் மணக்கும் முல்லை மலர்கள். மான்கள் தலைவியைப் போல மருட்சியுடன் பார்த்தன, இவ்வாறு தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மயில், முல்லை, மான்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“நின்னே போலும் மஞ்ஞையால, நின்; நன்னுதல் நாறும் முல்லை மலர; நின்னே போல மாமருண்டு நோக்க”** (ஐ.நூறு; பா-492; வரி-1-3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மூங்கில் போன்ற தோள்களை உடையவள் தலைவி, எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“மெல் இறைப் பணைத்தோள் துயில் அமர்வோயோ”** (ஐ.நூறு; பா-121; வ-12) என்பதாகும். இப்பாடல்களில் வழி தலைவியின் அழகு நலமானது புலப்படுத்தப்பட்டுள்ளது.

**காட்டுப்பகுதி**

அரும்பு சிதறிய வேங்கை மரமுள்ள அகன்ற நெடிய காட்டுப்பகுதி, எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“வீ கதர் வேங்கைய வியல் நெடும் புறவின்”** (நல்; பா-161; வ-3) என்பதாகும்.

**மாலைப்பொழுது**

பழைய மழையில் தழைத்த வரகுப்பயிரினிடத்தில் கதிர்களை ஆண்மான் மேய்ந்ததால் கதிரற்ற வரகுத்தாளின் பக்கத்தில் முல்லைக் கொடியானது பூத்துள்ளது காட்டுப் பூனையின் சிரித்த தோற்றத்தைப் போன்ற முல்லை அரும்புகள் மலர்ந்துள்ள மாலைக் காலம் என மாலைக்கால வருணனையை விளக்க, **“வரகு, மான், முல்லை, வெருகு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“பழமழைக் கலித்த புதுப்புன வரகின்; இல்லை மேய்ந்த குறைத்தலைப் பாவை; இருவி சேர் மருங்கில் பூத்த முல்லை; வெருகுசிரித் தன்ன, பசுவீமென்பிணி”** (குறுந்; பா-200; வரி-1-4) என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

முல்லைப்பூ மலர்கின்ற மாலைக்காலம், என மாலைக் காலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“எல்லறு பொழுதின் முல்லை மலரும்”** (குறுந்; பா-234; வ-2) என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது.

மானேறுகள் தம் பிணையைத் தழுவிய புதர்களிடத்தே மறைந்து ஒடுங்கும், களிறுகள் பிடிகளோடு சேர்ந்து கார்மேகம் அழகுற்று விளங்கும் மலைகளைச் சென்றடையும் மாலைக்காலம் என மாலைக் காலத்தினை விளக்க, **"மான், பிணை, பிடி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"மான் ஏறு மடப்பிணை தழீஇ மருள் கூர்ந்து; கையுடை நல்மாப் பிடியொடு பொருந்தி"** (குறுந்; பா-319; வரி-1,3) என்ற வரிகளானவை விளக்கி நிற்கின்றன.

மேய்புலத்துப் பயிரை அருந்திய தலைமையுடைய எருதோடு நிலத்தளவும் தொங்குகின்ற தாடிபோலப் பால் நிரம்புதலாற் பருத்த முலைக்காம்புகள் தொங்கும் மடியையுடைய பசுக்கள், பாலை ஒழுகவிட்ட படி தம் கன்றை நினைத்து வருந்தும் மாலைக்காலம் என மாலைக் காலத்தினை விளக்க, **"பசு, எருது"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"புலம்பயிர் அருந்த அண்ணல் ஏற்றொடு; நிலம் தூங்கு அணல் வீங்கு முலைச் செருத்தல்"** (குறுந்; பா-344; வரி-3-4) என்ற பாடல் வரிகள் விளக்கிநிற்கின்றன.

முல்லையினது மெல்லரும்புகள் தலைவனைப் பிரித்த தனிமைத்துயரை உடையோர் வருந்துதற்குக் காரணமாகிய குளிர்ச்சிமிக்க மாலைக் காலத்தில் பல பசுக்களையுடைய இடையர்களது மாலையிடத்து இருந்து பருவம் வந்ததென சொல்லுவனவற்றைப் போன்றன என்பதனை விளக்க, **"முல்லை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"சொல்லுப அன்ன, முல்லை வெண் முகையே"** (குறுந்; பா-358; வ-7) என்ற வரியானது விளக்குகின்றது.

முல்லை மலரத் தொடங்கிய மாலைக் காலம், என மாலைக் காலத்தினை விளக்க, **"முல்லை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"எல்லை கழிய முல்லை மலரக்"** (குறுந்; பா-387; வ-1) என்ற வரி விளக்கி நிற்கின்றது.

புள்ளிமான்கள் வெம்மையால் வருத்தமுற்று வாடிக்கிடந்த மழை நீங்கிய முல்லைநிலப் பகுதிகளிலே, பெய்த மழையினாலே உழவை வெறுத்த எருதுகளும் தாம் உழா வாய்ச் சோம்பிக் கிடப்பவனாயின என மாலைக் காலத்தினை விளக்க, **"ஒருத்தல், எருது"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"உவரி ஒருத்தல் உழா அது மடியப்; புகரி புழுங்கிய புயல் நீங்கு புறவில்"** (குறுந்; பா-391; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

கொன்றைப் பழத்தால் ஆன அழகிய குழலை ஊதியவாறு தம் பின்னால் மெல்ல வர வீடுதோறும் புகுகின்றன. முல்லையின் அரும்புகள் புலரும் மாலைக்காலம் என

மாலைக் காலத்தினை விளக்க, **“கொன்றை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“கொன்றை அம் குழலர் பின்றைத் தூங்க”** (அகம்; பா-54; வ-1) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

வளம் மிக்க மழையினால் மலர்ந்த பசுமையான முல்லைக் கொடியின் மலர் மணம் வீசும் மாலைக் காலம் என மாலைக் காலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வண்பெயற்கு அவிழ்ந்த பைங்கொடி முல்லை”** (அகம்; பா-124; வ-11) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

யாழில் செவ்வழிப் பண்ணை ஆயர்கள் பாட அரிய உயிர்களை வருத்தும் மாலைக்காலம் என மாலைக் காலத்தினை விளக்க, **“செவ்வழிப் பண்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப”** (அகம்; பா-214; வ-13) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

பெண்மான் ஆண்மானுடன் கூடிய மகிழ்ச்சியை உடையதாய் இடையூறு இல்லாமல் துள்ளித்திரியும். வண்டின் மெல்லிய பறக்கும் கூட்டம் முல்லைமலரில் உள்ள பூந் தாதினை விரும்பி ஊறும் மாலைக் காலம் என மாலைக்காலத்தினை விளக்க, **“பிணை, முல்லை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“தகர் தழை முனைஇய தெறிநடை மடப்பிணை; முல்லை நறுமலர்த் தாது நயந்து ஊத”** (அகம்; பா-234; வரி-10,13) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நல்ல யாழில் வருத்தத்தைத் தரும் செவ்வழிப் பண் தோன்றும் மாலைப் பொழுது என மாலைப் பொழுதினை விளக்க, **“செவ்வழிப் பண்”** பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை **“வையுள் நல் யாழ் செவ்வழி பிறப்ப”** (அகம்; பா-314; வ-12) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

முல்லை மலரும் மாலை நேரம், என மாலைப் பொழுதினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“முல்லை மாலை நகர் புகல் ஆய்ந்தே”** (அகம்; பா-324; வ-15) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

செவ்வழிப் பண் இசைக்கப்பட்ட செய்தியினை, ***“தொண்டகப் பறை, துடி, பேரிசை, முரசு, யாழ், முழவு போன்ற இசைக்கருவிகள் குறிஞ்சிப்பண் மற்றும் செவ்வழி பண்ணில் இசைக்கப் பெற்றுள்ளன”*** (ஆ.சிவலிங்கனார்; தொல்காப்பிய உரைவளம் - அகத்திணையியல்; ப-145) என்ற கருத்தின் வழி செவ்வழிப் பண்ணானது விளக்கப்பட்டுள்ளதை எண்ணிப் பார்க்கத்தக்கது.

காட்டினுள் கொய்த சிறுமுல்லைப் பூக்கள் முல்லையாய் இருக்கின்ற மாலைக்காலம் என மாலைக் காலத்தினை விளக்க, **“முல்லை”** போன்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“காட்டுச் சார்கொய்த சிறுமுல்லை மற்று இவை; முல்லை இவை ஆயின் முற்றிய கூழையாய்”** (கலி; பா-17; வரி-11-12) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

பாணர்கள் முல்லைப் பண்ணை யாழிசைத்துப் பாடினர். ஒளிபொருந்திய நெற்றியினளுமான தலைவி முல்லை மலரைச் சூடி தலைவனின் அருகே அமர்ந்து இன்புற்றிருந்த மாலைக் காலம் என மாலைக் காலச் சூழ்நிலையினை விளக்க, **“முல்லைப் பண், முல்லை”** போன்ற கருப்பொருள்கள் விளக்கி நிற்கின்றன. இதனை உணர்த்தும் பாடல் வரிகள், **“பாணர் முல்லை பாடச், சுடரிழை; வாணுதல் அரிவை முல்லை மலைய”** (ஐ.நூறு; பா-408; வரி-1-2) என்பவையாகும்.

பாணனது யாழிலேயிருந்தும் எழுகின்ற முல்லைப் பண்ணின் இன்னிசைக்கு ஒத்ததான மென்பிணிப்பான இன்பக்கிளர்ச்சியைத் தருகின்ற மாலைக்காலம் என மாலைக்காலத்தினை விளக்க, **“முல்லைப்பண்”** விளக்குகின்றது. இதனை விளக்குகின்ற பாடல் வரியாவது, **“மென்பிணித் தம்ம பாணன தியாழே”** (ஐ.நூறு; பா-445; வ-3) பயன்படுத்தப்பட்டுள்ளது.

முல்லைமுகைகள் மாலைக் காலத்திலே இதழவிழ்ந்து மலர்ந்திருக்கும் என மாலைக் காலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“மென்புல முல்லை மலரும் மாலை”** (ஐ.நூறு; பா-489; வ-2) என்ற வரி விளக்குகின்றது.

கள்ளி மேலே படர்ந்த முல்லையின் நறிய மலரை ஆடும் தலையையுடைய செம்மறியாட்டின் தொகுதியை மேய்க்கச் செல்லும் இடையன், வெண்மையான பனங்குருத்துத் துண்டங்களுடனே சேர்த்துக் கட்டிய மாலையணிந்து வரும் மாலை நேரம், என மாலை நேரத்தினை விளக்க, **“கள்ளி, முல்லை, ஆடு, பனை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“பரற் தலை போகிய சிரற் தலைக் கள்ளி; மீமிசைக் கலித்த வீ நறு முல்லை; ஆடு தலைத் துருவின் தோடுதலைப் பெயர்க்கும்”** (நல்; பா-169; வ-4-6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஒழுக்கச்செயல்**

சேவல் வேறு குருவிப் பெடையோடு கூடியிருந்து சிறிது பொழுது தங்கியிருந்து திரும்பி வந்த அதன் குறியை நோக்கி பேடை தடுத்தது. நெறிப்பு விளங்கிய ஈங்கையின் பூப்போன்ற சிறிய பல பிள்ளைகளோடு தாயும் சேர்ந்து குடம்பையினுள்ளே வர விடாமல்

தடுத்தன. அதனால் குருவிச் சேவல் நனைந்தது. அதனைப் பார்த்த பேடை தன்னிடம் வரும்படி அழைத்தது. குருவிச் சேவல் செயலற்று உள்ளே வந்தது. மாலைப் பொழுதும் வந்தது எனப் பறவைகளின் ஒழுக்கத்தினை விளக்க, **"குருவி, பேடை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"வந்ததன் செவ்வி நோக்கி, பேடை; நெறி கிளர் ஈங்கைப் பூவின் அன்ன"** (நல்; பா-181; வரி-3-4) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**மழைப்பொலிவு**

குளிர்ந்த மழையால் அரும்பிய பசுமையான முல்லையின் வெண்மையான அரும்புகள் மலர்ந்தன என மழைக்காலத்தினை விளக்க, **"முல்லை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"தண் கார்க்கு ஈன்ற பைங்கொடி முல்லை"** (அகம்; பா-144; வ-8) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

கரிய பெண்யானையின் கூட்டம் போன்று சேர்ந்துகூடி, பெரிய ஆண்யானையின் கைபோல் கால் இறக்கி மழையானது பொழிந்தது என மழைப் பொழிவினை விளக்க, **"களிறு, பிடி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"பெருங்களிற்றுத் தடக்கை புரையக் கால் வீழ்த்து; இரும் பிடித் தொழுதியின் ஈண்டுவன குழீஇ"** (அகம்; பா-334; வரி-5-6) என்ற வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இலை உதிர்ந்த பிடவம் ஈரமான மலரை அரும்பிற்று. புதரில் படரும் முல்லைக் கொடி பூக்களை அவிழ்த்தது. கொன்றையின் மலர்கள் மலர்ந்தன. காயாவின் குறுகிய கிளைகளில் பல மலர்கள் நீலமணி போல விளங்கும் மழைக் காலம் என மழைக்காலத்தினை விளக்க, **"பிடவம், முல்லை, கொன்றை, காயா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகளாவன, **"இலைஇல பிடவம் ஈர் மலர் அரும்ப; புதல் இவர் தளவம் பூங்கொடி அவிழ; பொன் எனக் கொன்றை மலர, மணி எனப்; பல் மலர் காயாங் குறுஞ்சினை கஞல"** (நல்; பா-242; வரி-1-4) என்பதாகும்.

காயா மரமுள்ள மலையிலே சரக்கொன்றை மலர்ந்தாற் போன்ற மேகம் மழையைப் பொலிந்தது, என மழைப் பொலிவினை விளக்க, **"காயா, கொன்றை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரி, **"காயாங் குன்றத்துக் கொன்றை போல"** என்பதாகும்.

**உவமை**

உயரமாக வளர்ந்த கடம்பின் கொம்பினைத் தொட்டவாறு பெருகிச் சென்ற பெருவெள்ளம் சிறுத்துப் போவது போல, காம நோயும் வற்றிப் போனது என

காமநோய்க்கான உவமையை விளக்க, **“கடம்பு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டள்ளது. இதனை, **“நீடிய மரா அத்த கோடு தோய் மலிர் நிறை”** (குறுந்; பா-99; வ-4) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

இதனை, ***“வேலியில் செழித்து வளர்ந்த நொச்சியின் இலையைக் கண்டார் புலவர். அந்த இலையில் வடிவம் அவருடைய உள்ளத்திற்கு வேறு ஒன்றை நினைவூட்டியது. நினைவிற்கு வந்த பொருள் மயிலின் அடி மயில் அங்கே அப்போது இல்லை. ஆயினும் அவருடைய மனக் கண்ணின் முன் மயில் அடிவந்து நின்றது. நொச்சி இலையின் அமைப்பும் மயில் அடியின் வடிவமும் ஒத்திருத்தலைக் கண்ட அவருடைய மனம் உவமைப் படுத்தியது. “மயில் அடி இலைய மாக்குரல் நொச்சி” (குறுந்; பா-138)”*** (மு.வரதராசன்; இலக்கியத் திறன்; ப-193) என்ற கருத்தோடு இணைத்தேகாணலாம்..

தேரைகள் கிளிகடியும் தட்டைப் பறையினின்று எழுகின்ற ஒலியைப் போல ஒலித்துக் கொண்டிருக்கும் நாட்டினன் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“கிளி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“தட்டைப் பறையின் கறங்கும் நாடன்”** (குறுந்; பா-193; வ-3) என்பதாகும்.

கவலைக் கிழங்கைத் தோண்டிய குழிகளில் கொன்றை மலர் நிரம்பப் பெற்றிருப்பது செல்வந்தர் பொன்னை வைக்கும் பேழையின் மூடியைத் திறந்து வைத்திருப்பது போன்று இருக்கும் என்ற உவமையினை விளக்க, **“கொன்றை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற பாடல் வரி, **“கொன்றை ஒள்வீ தாஅய்ச் செல்வர்”** (குறுந்; பா-233; வ-2) என்பதாகும்.

குவளையது குறிய காம்பையுடைய அன்றலர்ந்த மலரைப் போல மணக்கின்ற நறிய மெல்லிய கூந்தலை உடையவள் எனத் தலைவியின் கூந்தலுக்கு உவமையாக, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“இவளின் மேவினம் ஆகிக் குவளைக்”** (குறுந்; பா-270; வ-6) என்பதாகும்.

பரந்த குவிந்த இலைகளையுடைய முசுண்டையின் வெண்மையான மலர்கள் வானில் மீன் பூத்தாற்போல் குழைந்திடப் பூத்து விளங்கும் நடுஇரவு என நடு இரவிற்கான உவமையினை விளக்க, **“முசுண்டை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“குவை இலை முசுண்டை வெண்பூக்குழைய”** (அகம்; பா-94; வ-2) என்பதாகும்.

வேங்கை மரத்தின் மலர்ந்த மலரை ஒப்ப மேனியை உடையவள் தலைவி எனத் தலைவியின் உவமையினை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்

பட்டுள்ளது. இதனை, **“யாங்கு ஆகுவள்கொல் தானே வேங்கை”** (அகம்; பா-174; வ-1) என்ற வரி விளக்கிநிற்கின்றது.

வெருவுதற்குக் காரணமான புகையைக் கையிலே எடுத்து வரக்கண்ட கொல்களிறு அதன் வாடைக்குட் படாமல் வெகுண்டு திரிவதைப் போல, ஏறுதழுவுதலுக்குட் பட்ட காளை சுற்றித் திரிகின்றது எனக் காளையின் உவமையினை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற வரியாவது, **“திரிதரும் கொள்களிறும் போன்ம்”** (கலி; பா-4; வ-44) என்பதாகும்.

கோவலர்களின் உடலை உழலை மரத்தைப்போல மாஏறுகள் தொளைத்தன என ஏறுதழுவலின் போது ஏற்பட்ட புண்ணினை விளக்க, **“உழலை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அழல்வாய் மருப்பினால் குத்தி உழலை”** (கலி; பா-6; வ-3) என்ற வரி விளக்கிநிற்கின்றது.

காட்டினிடத்தே நின்னையே போலச் சாயலினான மயில்கள் ஆடின என உவமையினை விளக்க, **“மயில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“நின்னே போல மஞ்ஞை யாலக்”** (ஐ.நூறு; பா-413; வ-2) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

கருப்பொருளினை உவமமாக நின்று விளக்குவதை, ***“கருப்பொருள்கள் உவமமாக நின்று குறிப்புப் பொருளுணர்த்துவது, திணை உணர்த்துவது, சூழலைக் காட்டுவது ஆகிய முச்செயல் புரியும்”*** (மொ.இளம்பரிதி; குறியியல் ஒரு சங்கம் பார்வை; ப-25) என்ற கருத்தின் வழி அறியமுடிகின்றது.

இதுபோல மயிலை விளக்குகின்ற பல்வேறு பெயர்கள் கீழே விளக்கப்படுகின்றன. அதாவது, ***“நகரவிரம், சந்திரகி, மேகாநந்தி, மயுகம், பிரபாதிகம், சிகி, காந்தபட்சி”*** போன்ற பெயர்கள் வழங்கப்படுகின்றன (சா.அனந்தகுமார்; தாவரங்கள், விலங்குகள், பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்; ப-54).

தெளிந்த நீரிடத்தே இதழவிழ்ந்து மலர்ந்திருக்கும் தாமரை மலரைப் போன்றவன் தலைவியின் புதல்வன் எனத் தலைவியின் புதல்வனை விளக்க, **“தாமரை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“போதவிழ் தாமரை யன்ன நின்”** (ஐ.நூறு; பா-424; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

கொடிகளையுடைய காவற் கோட்டைகளையும் மேற்சென்று அழித்த கொடுந் தொழிலேயன்றி வேறொன்றையுமே பயின்றறியாத யானை போல் வானனானவன் தலைவன்,

எனத் தலைவனைப் பற்றி விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் உவமையாக்கப் பட்டுள்ளது. இதனை, **“கல்லா யானை வேந்து பகை வெலற்கே”** (ஐ.நூறு; பா-429; வ-4) என்ற வரியானது விளக்குகின்றது.

நெடிய பாசறையின் கண்ணே நெடிதாகத் தங்கியிருந்த புலியனைய தலைவன் எனத் தலைவனைப் பற்றிய உவமையினை விளக்க, **“புலி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வயமான் தோன்றல்! நீ வந்த மாறே”** (ஐ.நூறு; பா-500; வ-5) என்ற வரி விளக்குகின்றது.

பட்டுப்போன கானகத்திலே சிறிய பூ அணிந்த கூந்தலை யுடைய மகளிர் கூட்டம் போல வண்டுகள் கிளறுவதால் பிடவம் மலர்ந்தன. எனக் கார்காலம் வந்துற்றதை விளக்க, **“பிடவ”** மலர் எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வண்டு வாய் திறப்ப விண்ட மடவம்”** (நல்; பா-238; வ-3) என்ற வரியானது விளக்குகின்றது.

மேகம் பொய்யாக இடிப்பதைக் கண்டு உண்மையென்று மயங்கி அறிவில்லாத மயிற் கூட்டம் கூவும், அது போல மேகத்தைக் கண்டு தலைவியும் மயக்கம் கொள்வாள் என உவமையினை விளக்க, **“மயில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“இன மயில் மடக்கணம் போல”** (நல்; பா-248; வ-7) என்ற வரி விளக்குகின்றது.

காற்றால் அலையும் மராமரத்தின் அழகிய தளிர்போல் நடுங்குதல் நீங்காத நெஞ்சத்தோடு தலைவியானவள் வருத்தமுற்றாள் எனத் தலைவியின் துயரத்தை, **“மராஅம்”** எனும் கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வேர்கிளர் மராஅத்து அம் தளிர் போல”** (நல்; பா-381; வ-4) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

**தலைவியின் ஊர்**

முல்லை நிலத்திலுள்ள பசுமையான இலைகளையுடைய முல்லையினது குற்றமில்லாத மலர்களும் பூத்து விளங்கின எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“பாசிலை முல்லை ஆசுஇல் வான்பூச்”** (குறுந்; பா-108; வ-3) என்ற வரியானது பயன்படுத்தப் பட்டுள்ளது.

கானங்கோழிச் சேவலினது கழுத்தில் நீர்த்துளிக்கும் படி புதரின் கண்ணிலிருந்து நீர் ஒழுகுகின்ற முல்லை நிலம், எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“கானங்கோழி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“கானங்கோழிக் கவர்குரற் சேவல்”** (குறுந்; பா-242; வ-1) என்பதாகும்.

சிறிய கண்ணை உடைய பன்றியின் பெருங்கூட்டத்தை ஓட்டுவதற்கு தினைப்புனத்தைக் காப்பவர் ஊதும், பெரிய கொம்பின் ஓசையுடன் ஒரு சேர ஒலிக்கும், தலைவியின் ஊர் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **"பன்றி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"சிறுகட் பன்றிப் பெருநிரை கடிய"** (அகம்; பா-94; வ-9) என்ற வரியானது விளக்குகின்றது.

மறவர்கள் கயிற்றைப் பூட்டிய வில்லினராய் வேட்டையாடி முல்லை நிலத்தில் மானை அறுத்து உண்பர். அத்தகைய காட்டுப்பகுதி தலைவியின் ஊர் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **"மான்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"முல்லைப் படப்பைப் புல்வாய் கொண்டும்"** (அகம்; பா-284; வ-10) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

முயற்குட்டிகள் தாவிக் குதிக்கும் முல்லையான அழகிய காட்டில் கவர்த்த கதிரையுடைய வரகு பொருந்திய ஊரினை உடையது தலைவியின் ஊர் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **"முல்லை, வரகு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"முயல் பறழ் உகளும் முல்லை அம் புறவில்; கவைக் கதிர் வரகின் சீறூர் ஆங்கண்"** (அகம்; பா-384; வ-5-6) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

அடிமரத்தையுடைய கொன்றை மரமானது பொன்தகடு என்று சொல்லுமாறு விளங்கும் பூக்களை உதிர்க்கும் காட்டினை உடைய தலைவனின் மகள் தலைவி எனத் தலைவியின் ஊரினை விளக்க, **"கொன்றை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை விளக்க, **"நெடும் பொறை மிசைய குறுங்காற் கொன்றை"** (ஐ.நூறு; பா-430; வ-1) என்ற வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**வரலாற்றுச் செய்திகள்**

மூதூரைப் போன்ற ஒழியாத புது வருவாயையும் பலவகைப்பட்ட குடிகளையுடைய நிலப் பரப்பையும் கொண்ட யானைகள் நீராடும் பெரிய குளங்களையும் பசிய காவற் காட்டையும் உடைய 'குடவாயில்' என்னும் ஊர் எனக் குடவாயில் என்னும் ஊரினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு மூதூர் என்னும் ஊரினை விளக்க, **"பொங்கடி படிகயம் மண்டிய பசுமிளை"** (அகம்; பா-44; வ-17) என்னும் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பகைவர் அணிகளைக் கொண்டு வந்து அவற்றை ஆண் யானையுடன் திறையாகக் கொடுப்பர் எனத் திறையினை விளக்க, **"களிறு"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"நன்கலம் களிற்றொடு நண்ணார் ஏந்தி"** (அகம்; பா-124; வ-1) என்ற வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

வானத்தில் இடி எழுந்து ஒலித்தாலும் அதற்கு எதிராகத் தானும் முழங்கும் மதம் பொருந்திய யானைகள் சுழலும் பாசறை எனப் பாசறையின் இயல்பினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"கடாஅ யானை கொட்கும் பாசறை"** (அகம்; பா-144; வ-13) எனும் வரியானது விளக்கி நிற்கின்றது.

பகை மன்னரின் மதிலை மோதியதால் முறிந்த கொம்புகளையுடைய யானைப் படைகளை உடையவன் மன்னன் என மன்னனின் சிறப்பினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு மன்னர்களின் சிறப்பினை விளக்க, **"கந்துகால் ஒசிக்கும் யானை"** (அகம்; பா-164; வ-13) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

யானைகள் இரவுப் பொழுதில் சூழ்ந்து பகைவர்க்கு அச்சத்தை உண்டாக்கத் தங்கிய படையுடைய மன்னனின் பாசறை, எனப் பாசறையினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"காய்சின யானை கங்குல் சூழ"** (அகம்; பா-264; வ-13) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

நிமிர்ந்த கொம்பையுடைய யானையையுடைய மன்னனின் பாசறை எனப் பாசறையினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **"ஏந்து கோட்டு யானை வேந்தன் பாசறை"** (அகம்; பா-304; வ-17) என்பதாகும்.

குருந்தம் பூக்களின் கண்ணியைச் சூடி மகிழ்ந்திருப்பவர்கள் கோவலர்கள் எனக் கோவலரினை விளக்க, **"குருந்தம்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"குருந்தங் கண்ணிக் கோவலர்"** (ஐ.நூறு; பா-439; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

குருந்த மரம் மலர்கின்ற காட்டில் நெருங்கிவந்த பெரிய ஒலியையுடைய மூதூர் என மூதூரினை விளக்க, **"குருந்து"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"குருந்து அவிழ் குறும் பொறை பயிற்ற"** (நல்; பா-321; வ-9) என்ற வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

இவ்வாறு முல்லைத் திணைப் பாடல்கள் வழி கருப்பொருள்களின் பின்புலங்கள் விளக்கப்படுகின்றன.

## தொகுப்புரை

கார்கால மாலையில் மலரும் முல்லை மலரின் மணத்தினை ஒழுக்கமாகக் கொண்ட முல்லைத் திணையின் தெய்வம் மாயோன் ஆவார். பிரிந்து போன காதலன் வருகையினை எதிர்பார்த்துக் காத்திருக்கும் இருத்தல் ஒழுக்கமே முல்லையின் ஒழுக்கமாகும். அத்தகைய முல்லைத் திணைப் பாடல்களின் கருப்பொருள்களை அடிப்படையாகக் கொண்டு தலைவன் கூற்று, முல்லை நிலப்பகுதி, பூவிற்பவள், கார்கால வருகை, தலைவியின் அழகு நலம் போன்ற செய்திகள் விளக்கப்படுகின்றன.

மேலும், காட்டுப்பகுதி, மாலைப் பொழுது, ஒழுக்கச்செயல், உவமைகள், மழைப்பொலிவு, தலைவியின் ஊர், வரலாற்றுச் செய்திகள் போன்ற செய்திகள் இதன் மூலம் விளக்கப்படுகின்றன.

## இயல் 3

## மருதத்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத் திறன்

### மருதநிலம்

ஆறும் ஆறு சார்ந்த பகுதியில் மருதநில வாழ்க்கை என்பது சிற்றரசுகள் தோன்றி பேரரசுகளாக வளர்ந்த காலத்திலிருந்து இன்று வரை பல மாறுதல்களுடன் நீடிக்கும் வாழ்க்கை. இந்த நில வாழ்க்கையில் அடிமைச் சமுதாய முறை முதிர்ந்து மாறி நிலப்பிரபுத்துவ சமுதாயமுறை தோன்றி வளர்ந்தது.

குறிஞ்சி நிலத்தில் ஏற்பட்ட மோதலைப் போலவே இங்கும் மோதல் ஏற்பட முல்லை நிலத்திலிருந்து பயிர்த்தொழில் செய்த மக்கள் சிறிது நகர்ந்து காட்டுப் பகுதிகளைத் திருத்தி விளை நிலங்களாக மாற்றியுள்ளனர்.

மருதநிலத்தில் வாழ்ந்தவர்கள் பயிர் நடுதல், களைகட்டல், அரிதல் முதலிய தொழில்களைச் செய்கிறார்கள். இங்கு வேளாண்மைச் செயல் தொடங்கியிருக்கிறது. நடுதலும், களைகட்டலும் வளர்ந்த பின்னர் அதனை அரிதலும் நடைபெறுகிறது. இங்கு திட்டமிட்ட உணவு உற்பத்தி நடைபெறுகிறது. இவர்கள் உண்ணுகின்ற உணவு செந்நெல்லும், வெண்நெல்லும் ஆகும்.

***“சங்க காலம் மருதவாழ்வின் மேன்மை உணரப்பட்ட காலமாய் அதன் அடிப்படையில் நிலவுடைமைத் தலைவர்கள் தோன்றும் காலமாய் இருத்தலாலும், மருதஞ்சார்ந்த முதுகுடி மன்னர்களின் வரையறுத்த மணஉறவை அறிந்திருந்த போதிலும் வேந்தர் மகட்கொடை வேண்டிப் போர் மேற்சென்றுள்ளமையாலும் இவர்களின் தலைமை நோக்கும் மருதநிலமே அன்றி மகட்கொடை அன்றென்பது புலனாகின்றது.”*** (முனைவர் பெ.மாதையன்; பெண்டிர்காதல்கற்பு; வ-67) என்பார்கள்.

மருதநிலத்திலே நடைபெறும் ஒழுக்கம் மருதத்திணை ஆகும். நீர்வளமும், செல்வங் கொழிக்கும் நிலவளமும் அமைந்த நிலப் பகுதிகளும் ஊர்களும் மருதநிலமாகும். மருதநிலத்தின் தெய்வம் வேந்தன் என்றதனால், நல்ல அரசும், நாகரிகமும் அமைந்த இடமே மருதநிலம் என்பதைக் காணமுடிகின்றது. பிற்காலத்தவர் வேந்தனை இந்திரன் என்றனர்.

இவ்வாறு சங்க இலக்கியங்களில் உள்ள கருப்பொருள்கள் கொண்டு மருதத்திணையில் நடைபெறும் பின்புலச் செயல்பாடுகள் விளக்கப்படுகின்றன.

### தலைவனின் ஊர்

வளைவான முட்களையுடைய முள்ளிச் செடி குவிந்த குலையினின்றும் தாமே உதிர்ந்த மீனின் முள்ளைப் போன்ற வெண்மையான காம்புகளை உடைய கருமையான

மலர்களை விளையாடும் இளம்பெண்கள் திருவிழாவை அழகு செய்வதற்காகச் சேர்ப்பர். அத்தகைய அழகிய வயல்களை உடைய தலைவனின் ஊரானது, **“முள்ளி, மீன், ஊரன்”** எனும் கருப்பொருள்கள் கொண்டு விளக்கப்படுகின்றது. இதனை, **“முள்ளிக் குவிகுலைக் கழன்ற; மீன் முள் அன்ன வெண்கால் மா மலர்; அவ் வயல் நண்ணிய வளம் கேழ் ஊரனை”** (அகம்; பா,26 வரி. 1-2,4) ஆகிய பாடலடிகள் விளக்குகின்றன.

மேலே கூறப்பட்ட பாடலில் முள்ளி எனும் செடியானது கருப்பொருளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. கருப்பொருளாகச் செடி பயன்படுத்துவதற்கான சான்றாவது, பின்வருமாறு;

புல்லொடு வருபவையாகச் சிலவற்றைத் தொல்காப்பியரும் கூறுகின்றார். அந்நூற்பா வருமாறு,

**“தோடே மடலே ஓலை என்றா**
**ஏடே இதழே பாளை என்றா**
**ஈர்க்கே குலையே நேர்ந்தன பிறவும்**
**புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர்”** (தொல்; மரபு; நூற்-88)

என்ற தொல்காப்பியர் வழியில் தோடு முதலியவற்றை நோக்க வாழை மரமும்,ஈந்து என்ற தூறும், தாமரைக்கொடியும், கழுநீர்ச்செடியும் புல்லினுள் அடங்குமென்பது பெறப்படுகின்றது இளம்பூரணரும் இவ்வாறே பொருள் கொண்டுள்ளார்” (தொல்; மரபு; இளம்; ப.57) என்பதை அறிய முடிகின்றது.

பிளந்த வாயையும் பலவரிகளையும் கொண்ட பெரிய ஆண் வரால் மீன் வளைவான தூண்டிலில் தனக்கு எமனான இரையை விழுங்கி ஆம்பல் கொடியின் மெல்லிய இலை கிழிய மேலெழும்; குவளையின் அரும்பு மலர்ந்த பல மலர்களும் சிதையுமாறு பக்கத்தே பாயும்; பின்னர் மாறுபட்டுப் பின்னிக் கிடக்கும் வள்ளைக் கொடிகளைக் குலைத்து விடும். அத்தூண்டிலை இட்ட மீன்பிடிப்பவன் இழுக்கவும் இழுபடாது; மூக்கில் கயிறு கட்டி இழுக்கப்படும், சினம் கொண்ட எருதினைப் போன்று செருக்கு மிகுந்து தெளிந்த நீரினைக் கலக்கும். இத்தகைய நிகழ்வுக்கு இடமான மலர்கள் பொருந்திய தலைவனின் ஊரினை விளக்க, **“வராஅல், ஆம்பல், குவளை, வள்ளை, சே, ஊரன்”** போன்ற கருப்பொருள்களைப் பயன்படுத்தியுள்ளனர்.இதனை, **“பகுவாய், வராஅற் பல்வரி இரும் போத்துக்; ஆம்பல் மெல் அடை கிழிய குவளைக்; அரில் படு வள்ளை ஆய்கொடி மயக்கி; கயிறு இடு கதச் சேப்போல மதம் மிக்கு; நாள் கயம் உழக்கும் பூக் கேழ் ஊர”** (அகம்; பா-36; வரி.1,3,5,7-8) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மரத்தோடு வருபவையாகத் தொல்காப்பியர் இவ்வாறு கூறுகின்றார்.

**"இலையே முறியே தளிரே தோடே**

**சினையே குழையே பூவே அரும்பே**

**நனையே உள்ளுறுத் தனையவே யெல்லாம்**

**மரனொடு வரூஉங் கிளவி என்ப"** (தொல்.மரபு.நூற்.89)

புல்வகையிலும் செடி, கொடி முதலிய உண்டாகலின் இவை இரண்டையும் ஒன்றாக்கி, **'மரம்'** என்ற கருப்பொருளால் தொல்காப்பியர் அழைத்தார் என்பது பொருந்தும்.

சேற்றில் நிற்கும் நிலையை வெறுத்த சிவந்த கண்களை உடைய எருமை ஊரவர் எல்லாம் உறங்கும் நள்ளிரவில் வலிய கயிற்றை அறுத்துக்கொண்டு புறப்பட்டுப் போய்க் கூர்மையான முள்ளையுடைய வேலியைத் தன் கொம்பால் அகற்றிவிட்டு நீர் மிகுந்த வயலில் மீன்கள் எல்லாம் ஓட இறங்கி அங்குள்ள வள்ளைக் கொடிகளை நிலைகுலையச் செய்து வண்டுகள் உள்ளிருந்து ஊதும் தாமரையின் குளிர்ந்த மலரைத் தின்னும் ஊரை உடையவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"செங்கட்காரான், மீன், வள்ளை, தாமரை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை **"சேற்று நிலை முனைஇய செங்கட் காரான்; நீர் முதிர் பழனத்து மீன் உடன் இரிய; அம் தூம்பு வள்ளை மயக்கி தாமரை; வண்டு ஊது பனி மலர் ஆகும் ஊர"** (அகம்; பா-46; வரி-1,4-6) ஆகிய வரிகள் விளக்குகின்றன.

கள்ளை உண்ட கலம் கழுவப்படுதலால் அந்த நீரையுண்ட இறால் மீன் செருக்குக் கொண்டு நாண் அறுபட்ட வில் தெறிப்பதைப் போல் நெற் கூடுகளின் அடியில் துள்ளி விழும். அத்தகைய இடத்தையுடைய மருத நிலத்து நீர்நிலையில் கரையில் உள்ள பிரம்பின் அரத்தின் வாய்போன்ற முட்களைக் கொண்ட நீண்ட கொடி அருவியாக வந்து விழும் நீரின் மீது படர்ந்த ஆம்பலின் இலையைச் சுற்றுகிறது. இத்தகைய வயல்களையும் தோட்டங்களையும் உடைய காஞ்சி மரங்கள் மிகுந்துள்ள தலைவனின் ஊரினை விளக்க **"இறால்மீன், பிரம்பு, அருவி, ஆம்பல், காஞ்சி, ஊரன்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"நறவு உண் மண்டை நுடக்கலின் இறவுக் கலித்து; பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்; அருவி ஆம்பல் அகல் அடை துடக்கி; கழனிஅம் படப்பைக் காஞ்சி ஊர"** (அகம்; பா.96; வரி.1,3,5,8) ஆகிய வரிகள் வழி அறியமுடிகின்றன.

நீரும் கருப்பொருளாகக் கருதப்படுவதை உணர்த்தும் சான்று பின்வருமாறு, ***"உணவைக் கூறியதனால் அவ்வுணவின் ஒரு கூறாகிய நீரினைத் தொல்காப்பியர் தனியாகக் கூறவில்லை. ஆனால் நீர் என்பதனை நறுஞ்சுவை, கூவல், கான்யாறு, யாறு, மனைக்கிணறு, இலஞ்சி(வாவி), அருவி, சினை, உவர்க்குழி, அறுநீர்க்கூவல் என்று பல மேற்கோள்களுடன் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டிருக்கின்றார்"*** (தொல்; அகத்; ப-46) என்பதாகும்.

தீயானது கொழுந்து விட்டாற்போன்ற இதழ் திறந்து மலர்கின்ற தாமரை மலர்களையுடைய வயல்களில் சிறிய மீன்கள் உள்ளன. அவற்றை உண்ணும் பொருட்டுப் பறப்பதைக் கைவிட்ட சிச்சிலிப்பறவை மெல்ல மெல்ல அசைந்து வந்திருக்கும் ஊரை உடையவன் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"தாமரை, மீன், ஊரன்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"எரி அகைந்தன்ன தாமரைப் பழனத்து; பொரி அகைத்தன்ன பொங்கு பல் சிறு மீன்; துறைகேழ் ஊரன்"** (அகம்; பா.106; வரி. 1-2,5) ஆகிய வரிகள் விளக்குகின்றன.

கடலைக் கண்டாற் போன்ற நீர்ப்பரப்பு. அதில் நிலம் பிளக்கும் படி இறங்கிய வேரில் முதிர்ந்த கிழங்கு மூங்கிலைப் போன்ற துளையுடைய திரண்ட தண்டு. ஆண் யானையின் காதினைப் போன்ற இலைகள் மலர்கள் விளங்கும் தாமரையினிடையே பறவைகள் ஒலிக்கும். வயலில் வேப்ப மரத்தின் அரும்பைப் போன்ற கண்ணையுடைய நண்டு வெண் நாரையைக் கண்டு அஞ்சி பகன்றைக் கொடி படர்ந்த கரிய சேற்றுப் படிவில் தேமல் போல் வரியுண்டாக ஓடிப்போய் மறையும். இத்தகைய இயல்பு வாய்ந்த ஊரை உடைய தலைவனின் ஊரினை விளக்க, **"கழை, களிறு, தாமரை, வேம்பு, வெண்குருகு, பகன்றை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கழை கண்டன்ன தூம்புடைத் திரள்கால்; களிற்றுச் செவி அன்ன பாசடை மருங்கில்; பூத்த தாமரைப் புள் இமிழ் பழனத்து; வேப்புநனை அன்ன நெடுங்கண் ஈர்ஞெண்டு; இரைதேர் வெண்குருகு அஞ்சி அயலது; ஒலித்த பகன்றை இருஞ்சேற்று அள்ளல்"** (அகம்; பா-176; வரி.3-4,7-10) ஆகிய பாடலடிகள் வழி அறிய முடிகின்றன.

மீன் பிடிப்பவர் மீனைத் தூண்டிலால் பற்றி இழுக்கும் நீர்நிலை. அதில் தழைத்த நீர்மீது உயர்ந்த நீண்ட காம்பை உடைய அகலமான இலையையுடைய தாமரை நிறைந்த பெரிய குளம்; ஆண் யானையின் காது போல் அசையும். இத்தகைய இயல்புடைய ஊரன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"மீன், தாமரை, பெருங்களிறு"** போன்ற கருப் பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை **"மீன் முதிர் இலஞ்சிக் கலித்த தாமரை; பெருங் களிற்றுச் செவியன் அலைக்கும் ஊரனொடு" (**அகம்; பா.126; வரி-3,6) ஆகிய பாடலடிகள் உறுதிப்படுத்துகின்றன.

நீண்ட கொடிகள் அசையும் கள் மிக்க பாக்கம். அதில் விடியற் காலை வேட்டையில் அகப்பட்ட பெரிய வயிற்றை உடைய வரால் மீனின் துடியினது கண் போன்ற வலிய துண்டத்தை அறுத்து விற்றுக் கள்ளுண்டு ஆடி, மீண்டும் வேட்டையாடச் செல்வதை மறந்து உறங்கிக் கிடப்பர் கணவன்மார். அவர்களுக்கு அவர்களின் மனைவியரான பாண் மகளிர் ஆம்பலின் அகலமான இலையில் விரும்பித் தக்க சோற்றைப் பிரம்பினது இனிய பழத்தால் ஆன புளிக்கறியைப் பெய்து இடுவர். இத்தகைய இயல்பு வாய்ந்த ஊரனே எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"நறவு, வராஅல், ஆம்பல், பிரம்பு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதற்குச் சான்றாக, **"நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து; நாள் துறைப்பட்ட மோட்டு இரு வராஅல்; ஆம்பல் அகல் இலை அமலை வெஞ்சோறு; தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து"** (அகம்; பா-196; வரி.1-2, 5-6) ஆகிய பாடல் வரிகள் அமைகின்றன.

வெண்மையான நெல்லை அறுப்பவர் நீர் முள்ளிச் செடியை நெற்கட்டுகள் நிறைந்த கழனியின் வரம்பின் மாமரத்தின் கொம்புகளில் மலர்ந்த புதிய பூக்கள் மழைத் துளியைப் போல் பரவிக் கிடக்கும் தலைவனின் ஊரினை விளக்க, **"பெருமீன், வெண்ணெல், முள்ளிச்செடி, மா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"துணிநீர் இலஞ்சிக் கொண்ட பெருமீன்; வெண்ணெல் அரிநர் பெயர்நிலைப் பின்றை; கருங்கோட்டு மாஅத்து அலங்குசினைப் புதுப்பூ"** (அகம்; பா-236; வரி.2,4,7) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

ஒன்றுடன் ஒன்று பின்னிய காதுகளையுடைய வள்ளைக் கொடியின் நீண்ட இலைச் செறிவு. அதில் மடிந்து கிடக்கும் உறக்கத்தை வெறுத்த வன்மையான நகத்தையுடைய யாமை. பின் அதன் பக்கத்தில் உள்ள ஆம்பலின் மென்மையான இலைக்குள் ஒடுங்கிக் கிடக்கும். இத்தகைய நாட்டையுடைய தலைவனின் ஊரினை விளக்க, **"வள்ளை, யாமை, ஆம்பல், ஊரன்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. சான்றாக, **"பிணங்கு அரில் வள்ளை நீடு இலைப் பொதும்பில்; மடிதுயில் முனைஇய வள் உகிர் யாமை; ஆம்பல் மெல் அடை ஒடுங்கும் ஊர"** (அகம்; பா.256; வரி.1-2,7) என்ற பாடல் அமைகின்றது.

ஊரில் உள்ள பேதைப் பருவ மங்கையின் மென்மையான கரும்பை வெண்மையான உலக்கையாகக் கொண்டு மணலைக் குவித்துக் கொண்டு காஞ்சி மரத்தின் நிழலில் தம் சுற்றத்தாரின் செல்வப் பெருக்கினைப் புகழ்ந்து பாடிக் கொண்டு விளையாடுவர். அப்போது இறால் மீனைத்தின்ற மீன்கொத்திப் பறவை மருதமரத்தின் தாழ்ந்த கிளைகளில் உறங்கும். இத்தகைய குளிர்ந்த நீர்த் துறையை உடைய தலைவனின் ஊர்ச் சிறப்பை விளக்க,

**“மென்கரும்பு, மீன், காஞ்சி, இறாஅல், மருது”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வெள்ளி விழுத்தொடி மென்கரும்பு உலக்கை; வள்ளி நுண் இடை வயின்வயின் நுடங்க; மீன்சினை அன்ன வெண்மணல் குவைஇ; காஞ்சி நீழல் தமர்வளம் பாடி; இறாஅல் அருந்திய சிறு சிரல் மருதின்; தாழ்சினை உறங்கும் தண் துறைஊர”** (அகம்; பா.286; வரி.1-4,6-7) என்ற பாடல் விளக்குகின்றது.

பரந்த நீர் நிலையில் உள்ள பிரம்போடு கூடி நீண்டு வளர்ந்திருக்கும் முள்ளையுடைய ஈங்கையின் பஞ்சு போன்ற துய்யினை உடைய புதிய பூவும் மாமரத்தின் தளிரும் தன்னைத் தடவுதலால் மீனையுண்ட நாரை உறங்கும். இத்தகு நீர்வளம் கொண்ட வயலில் உள்ள கழனிக் கரும்பின் சாய்ந்த பக்கத்தில் ஊர்ந்து சென்று வயலில் வாழும் யாமை இளவெயிலில் காய்கின்ற நெற் கூடுகளையுடைய தெருக்கள் அமைந்த வளமுடைய தலைவனின் ஊரினை விளக்க, **“ஈங்கை, மா, குருகு, கரும்பு, யாமை, நெல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“முட்கொம்பு ஈங்கைத் துய்த் தலைப் புதுவீ; ஈன்ற மாந்தின் இளந் தளிர் வருட; ஊர் குருகு உறங்கும் நீர் சூழ் வள வயல்; கழனிக் கரும்பின் சாய்ப்புறம் ஊர்ந்து; பழன யாமை பசு வெயில் கொள்ளும்; நெல்லுடை மருகின் நன்னர் ஊர”** (அகம்; பா.306; வரி.3-8) என்ற பாடல் விளக்குகின்றது.

துறையில் மீன்கள் இயங்கும் பெரிய நீர் மிக்க பொய்கையில் உள்ள ஆம்பல் மலரை மேய்ந்த வளைந்த கொம்பையும் குளிர்ந்த முதுகையும் உடைய முதிய எருமைக்கடா மிக்க சேற்றுக் குழம்பில் கிடந்து இரவெல்லாம் துயிலும். பின் கதிரவன் உதித்த காலையில் பசுமையான நிணத்தைத் தின்ற வரால் மீன்கள் காலில் மிதிபட்டு அழிய வெளிப்படும் வெண்மையான பூக்களையுடைய பகன்றைக் கொடியைச் சூடிக் கொள்ளும். பின் பழைமையுடைய ஊரில் போரில் வெற்றி கொண்டு வருவது போன்று புகும் தன்மையுடைய தலைவனின் ஊரினை விளக்க, **“மீன், ஆம்பல், எருமை, வராஅல், பகன்றை, ஊரன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“துறை மீன் வழங்கும் பெரு நீர்ப் பொய்கை; அரி மலர் ஆம்பல் மேய்ந்த நெறி மருப்பு; ஈர்த் தண் எருமைச் சுவல் படு முது போத்து; பைந்நிண வராஅல் குறையப் பெயர் தந்து; குரூஉக் கொடிப் பகன்றை சூடி மூதூர்ப்; போர் செறி மள்ளரின் புகுதரும் ஊரன்”** (அகம்; பா.316; வரி.1-3,5-7) என்ற பாடல் உறுதிப்படுத்துகின்றது.

இதில் **“பகன்றை”** பற்றிய குறிப்பு பின்வருமாறு, **“பகன்றையைச் சிவதைக் கொடி என்றும் வழங்குவர்”** (இல. தாணம்மாள்; சங்க இலக்கியத்தில் மலர்கள்; ப-19) என்ற கருத்து இவ்விடத்தில் எண்ணிப்பார்க்கத்தக்கது.

துளை பொருந்திய தண்டையுடைய சேம்பின் மடலில் உள்ள அகன்ற இலையுடன் கூடிய நீர்ப்பரப்பில் ஆண் நீர்நாய் வாளை மீனைப் பற்றி அதனுடனே போரிட்டதால் நீர் கலங்கும். நீர் கொள்ள வந்த மகளிர் தம் கணவரின் பரத்தமை ஒழுக்கத்தைப் பாடிக் காஞ்சிமரத்தின் நிழலில் குரவையாடுவர். இனிய பெரிய பொய்கையின் துறை பொருந்திய தலைவனின் ஊர்ச் சிறப்பை விளக்க, **“சேம்பு, நீர்நாய், வாளை, மகிழ்நன், காஞ்சி, ஊரன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“குழற்கால் சேம்பின் கொழு மடல் அகல் இலை; நாள் இரை தரீஇய எழுந்த நீர்நாய்; வாளையொடு உழப்ப துறை கலுழ்ந்தமையின் தெண்கட் தேறல் மாந்தி மகளிர்; மகிழ்நன் பரத்தமை பாடி அவிழ் இணர்; காஞ்சி நீழல் குரவை அயிரும்; தீம் பெரும் பொய்கைத் துறை கேழ் ஊரன்”** (அகம்; பா.336; வரி- 1,4-6,8-10) என்ற பாடல் விளக்குகின்றது.

ஆண்கொக்கு கயல்மீனைக் குத்தக் கருதியது, காஞ்சி மரத்தின் குறிய துண்டுகள் நட்டு கரும்பின் பல துண்டுகள் குறுக்காக அடைந்து நெற்பயிரையுடைய வயலில் நீரைத் தேக்கும் ஊரையுடையவன் தலைவன். அத்தகைய தலைவனின் ஊரினை விளக்க, **“ஆண்கொக்கு, கயல்மீன், காஞ்சி, கரும்பு, நெல்”** போன்ற கருப்பொருள்கள் கொண்டு புலப்படுத்துகின்றார். இதனை, **“உரல் கொக்கின் குறும்பறைச் சேவல்; கள் ஆர் உவகைக் கலி மகிழ் உழவர்; காஞ்சி அம் குறுந்தறி குத்தி தீம் சுவை; மென் கழைக் கரும்பின் தன் பல மிடைத்து; பெருஞ் செய் நெல்லின் பாசவல் பொத்தி”** (அகம்; பா.346; வரி-3,5-8) என்ற பாடல் உறுதி செய்கின்றது.

அகன்ற நீர் நிலையில் அரும்புகள் பொருந்திய தாமரையை உடைய ஊரன் என்பதனை, **“மலர்ந்த பொய்கை முகைந்த தாமரை”** (ஐ.நூறு; பா-6; வ-4) என்ற பாடல் விளக்குகின்றது.

மருதமரத்தில் குருகுப் பறவைகள் தம் சுற்றம் சூழ இருக்கும் குளிர்ந்த துறையையுடைய தலைவனின் ஊரினை விளக்க, **“மருதம், குருகு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“உளைப்பூ மருதத்துக் கிளைக் குருகு இருக்கும்”** (ஐ.நூறு; பா-7; வ-4) என்ற பாடலைச் சான்றாகக் காட்டலாம்.

வயலைக் கொடியை வேழம் சுற்றிக் கொண்டு வளரும் துறை பொருந்திய ஊரன், என்பதனை, **“கரைசேர்வேழம் கரும்பில் பூக்கும்”** (ஐ.நூறு; பா-12; வ-1) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

வேழம் தீண்டுதலால் வடுநிறைந்த மாமரங்களின் தளிர்கள் அசையும் நீர்த்துறையை உடைய தலைவனின் ஊரினை விளக்க, **“வேழம், மா”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **“கொடிப்பூ வேழம் தீண்டி அயல, வடிகொள் மாஅத்து வண்டளிர் நுடங்கும்”** (ஐ.நூறு; பா.14; வரி.1-2) என்ற பாடல் உறுதிப்படுத்துகின்றது.

தாமரை மலரில் ஈன்றிருக்கும் சினைகளை அழிக்கும் மூங்கில் போன்று உள்ளே துளையையுடைய வேழம் செறிந்த துறையை உடைய தலைவனின் ஊரினை விளக்க, **"தாமரை, வேழம், மூங்கில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"நூற்றிதழ்த் தாமரைப் பூச்சினை சீக்கும்; காம்பு கண்டன்ன தூம்புடை வேழத்துத்"** (ஐ.நூறு; பா-20; வரி.2-3) என்ற பாடல் விளக்குகின்றது.

முள்ளிச் செடிகள் வளர்ந்திருக்கும் நீர்த்துறையில் ஆம்பல் தண்டை நண்டு அறுக்கும் குளிர்ந்த துறையை உடைய தலைவனின் ஊரினை விளக்க, **"முள்ளி, ஆம்பல்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதற்கு, **"முள்ளி நீடிய முதுநீரடை கரைப்; புள்ளிக் கள்வன் ஆம்பல் அறுக்கும்"** (ஐ.நூறு; பா.21; வரி.1-2) என்ற பாடல் சான்றாக அமைகின்றது.

முதிர்நத மருத மரங்கள் நிறைந்திருக்கின்ற துறையை உடையவன் தலைவன். இதனை, **"முடமுதிர் மருதத்துப் பெருந்துறை"** (ஐ.நூறு; பா-31; வ-3) என்ற பாடல் வழி உறுதிப்படுத்துகின்றது.

**"மரகதப் பட்டு மருதம் தந்து**

**புரவலர் போலப் புரளும் காவிரி"**

(வ.ஐ.ச.ஜெயபாலன்; சுபமங்களா மாத இதழ்; ப-40)

என்ற கவிதை வரிகள் மருதத்திணையைத் தெளிவாக விளக்குகின்றன.

வஞ்சி மரங்கள் ஓங்கி வளர்ந்துள்ள துறையை உடையவன் எனத் தலைவனின் துறையை விளக்க, **"வஞ்சி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"வஞ்சி ஓங்கிய யாணர் ஊர"** (ஐ.நூறு; பா-50; வ-2) என்ற பாடல் விளக்குகின்றது.

தாமரைப் பொய்கையில் இருந்த வண்டு தேனையுண்ட பின்பு குவளை மலரைச் சென்றடைந்தது. அடுத்து குவளை மலரையடுத்து யானையின் மதநீரைச் சென்றடைந்தது. அதன் பின்னர் முல்லை மலரையடுத்துச் சென்றது. இத்தகைய ஊரினை உடைய தலைவனின் ஊரினை விளக்க, **"தாமரை, நீலமலர், களிறு, முல்லை"**போன்ற கருப்பொருள்கள் மூலம் விளக்கப்படுகின்றன. இதற்குச் சான்றாக, **"வீங்குநீர் அவிழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட; ஞாங்கர் மலர் சூழ்ந்து ஊர்புகுந்த வரிவண்டு; ஓங்குயர் எழில் யானைக் கனைகடாம் கமழ் நாற்றம்; தேங்கமழ் கதுப்பினுள் அரும்பு அவிழ் நறுமுல்லைப்; பூம் பொய்கை மறந்து உள்ளாப் புனல் அணி நல் ஊர"** (கலி; பா-1; வரி-1-3, 6-8) என்ற பாடல் அமைகின்றது.

தாமரையின் முகைகள் புன் சிரிப்புடைய பெண் போல பூத்து நிற்கின்ற ஊரினை உடையவன் தலைவன் என்பதனை, **“பனி ஒரு திறம்வாரப் பாசடைத் தாமரைத்”** (கலி ;பா-6; வரி-7) என்ற பாடல் விளக்குகின்றது.

அல்லியும், தாமரையும் ஒரு சேர மலர்வித்த நின்ற வடு காலத்தையும் வென்று விட்ட தலைவனின் ஊரினை விளக்க, **“தாமரை, அல்லி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதற்குச் சான்றாக, **“மதிநோக்கி அலர்வீத்த ஆம்பல்வான் மலர் நண்ணிக்; கடிகயத் தாமரைக் கமழ் முகை கரைமாவின்”** (கலி; பா-7; வரி-5-6) என்ற பாடல் அமைகின்றது.

தாமரை மொட்டு பகன்றையொடு உராய்ந்த காட்சியினை உடையது தலைவனின் ஊர் என்பதனை, **“பகன்றை, தாமரை”** எனும் கருப்பொருள்கள் மூலம் விளக்கப்படுகின்றன. இதற்கு **“பகன்றைப்பூ உறநீண்ட பாசடைத் தாமரை”** (கலி; பா-8; வ-2) என்ற பாடல் சான்றாகின்றது.

நெய்தல் மலரிலே சென்று தாது அமர்ந்து களித்தது. அதன் பின்னர் வயல்களிலே மலர்ந்துள்ள தாமரை மலரிலே வந்து தங்கியிருக்கும். இத்தகைய காஞ்சிமரத் துறையை உடையவன் தலைவன். இதனை விளக்க, **“நெய்தல், தாமரை, காஞ்சி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நெய்தல் தாது அமர்ந்து ஆடிப் பாசடைச் சேப்பினுள்;செய்து இயற்றியதுபோல வயல்பூத்த தாமரை; கொய்குழை அகைகாஞ்சித் துறை அணி நல் ஊர”** (கலி; பா-9; வரி.2-4) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

வயல் வரப்பிலேயுள்ள மாமரத்தில் விளைந்த பின் தானே வீழ்கின்ற இனிய பழத்தைப் பக்கத்து நீர்நிலைச் செறுவிலேயுள்ள வாளைமீனானது பற்றி உண்ணுவதற்கு இடமாகிய ஊருக்குரிய தலைவனின் ஊரினை விளக்க, **“மா, வாளைமீன்**” ஆகிய கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“கழனி மா அத்து விளைந்து உகு தீம்பழம்; பழனிவாளை கதூஉம் ஊரன்”** (குறுந்; பா-8; வரி-1-2) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

பயற்றங்காய் போன்ற பூங்கொத்துக்களிலுள்ள பசிய பூந்தாது தங்களின் மேலே படும்படியாக உழுபவர் வளைந்த மணக்கின்ற மலர்களையுடைய மெல்லிய கொம்புகளைக்கொண்ட காஞ்சி மரத்தை உடைய ஊரன் என்று தலைவனின் ஊரினை விளக்க **“பயறு, உழவர், காஞ்சி”** ஆகிய கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“பயறுபோல் இணர பைந்தாது படீஇயர்; உழவர் வாங்கிய கமழ்பூ மென்சினைக்;**

**காஞ்சி ஊரன் கொடுமை”** (குறுந்; பா-10; வரி.2-4) என்ற பாடல் வழி உணர்த்தப்படுகின்றது.

தூய அணிகளைப் புனைந்தவறான பரத்தையரைத் தழுவப் போனவன் வளமுடைய ஊரினை உடைய தலைவனின் ஊரினை விளக்க, **“ஊரன்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை, **“மல்லன் ஊரன்; எல்லினள் பெரிது என”** (குறுந்; பா-45; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

நாரையாற் பற்றிக் கொள்ளப்பட்டு அதன் வாயினின்றும் தப்பி, நீருள் குதித்து மறைந்து கெண்டை மீனானது அதன்பின்னர்த் தான் மேலெழுந்த போது, நிறம் பொருந்திய தாமரையின் வெள்ளரும்பைக் கண்டதும் அச்சங் கொள்ளும். அப்படிப்பட்ட வயற்பக்கங்களைக் கொண்ட காஞ்சி மரங்களை உடைய தலைவனின் ஊரினை விளக்க, **“குருகு, கெண்டை, தாமரை, காஞ்சி”** போன்ற கருப்பொருள்கள் பயன் படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“குருகுகொளக் குளித்த கெண்டை அயலது; உருகெழு தாமரை வான்முகை வெரூஉம்; கழனிஅம் படப்பைக் காஞ்சி ஊர”** (குறுந்; பா-127; வரி.1-3) ஆகிய பாடல் அடிகள் விளக்குகின்றன.

நீர்நாய் பிணக்கத்தையுடைய பிரப்பங்கொடியினைப் போன்ற கோடுகள் பொருந்திய முதுகுப் புறத்தையுடையது. அது தன் நாட்காலை உணவாக வாளைமீனைப் பெறுகின்ற வளமான தலைவனின் ஊரினை விளக்க, **“நீர்நாய், பிரப்பங்கொடி, வாளை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“அரில்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்; வாளை நாள் இரை பெறூஉம் ஊரன்”** (குறுந்; பா-364; வரி.1-2) ஆகிய பாடல் வரிகள் அறியப்பெறுகின்றன.

பொய்கையிடத்துள்ள ஆம்பலினது அழகான நிறத்தைக் கொண்ட பூக்களை உடைய தலைவனின் ஊரினை விளக்க, **“ஆம்பல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது இதனை, **“பொய்கை ஆம்பல் அணிநிறக் கொழு முகை”** (குறுந்; பா-370; வ-1) என்ற பாடலடி விளக்குகின்றது.

ஆம்பல் மலரும் தண்ணிய துறையை உடைய தலைவனின் ஊரினை விளக்க, **“ஆம்பல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதற்கு, **“குண்டு நீர் ஆம்பல் தண் துறை ஊரன்”** (நற்; பா-100; வ-3) என்ற பாடல் சான்றாக அமைகின்றது.

பிடியானையின் காதுகள் போலப் பசிய இலைகள், கொக்குகள், கூம்பிய மொட்டுக்கள், ஆம்பல் வெள்ளி போல மலரும் கயல்மீன் கூட்டம் மிக்க

பொய்கையையுடைய தலைவனின் ஊரினை விளக்க, **“பிடி, கொக்கு, ஆம்பல், கயல்மீன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“முயப் பிடிச் செவியின் அன்ன பாசடை; கயக் கணக் கொக்கின் அன்ன கூம்பு முகை; கணைக்கால் ஆம்பல் அமிழ்து நாறு தண் போது; கயற்கணம் கலித்த பொய்கை ஊர”** (நற்; பா-230; வரி.1-3) என்ற பாடல் விளக்குகின்றது.

கொக்கின் கூம்பிய நிலைபோன்ற அரும்புகளையுடைய ஆம்பல் மலர் நிறைந்திருக்கும். குளத்து ஆழமான நீரில் மாமரத்திலிருந்து உதிர்ந்து ஒழிந்த இனிய மாம்பழம் திடும் என விழும் எனத் தலைவனின் ஊரின் சிறப்பை விளக்க, **“கொக்கு, மா, ஆம்பல், ஊரன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கொக்கினுக்கு ஒழிந்த தீம்பழம் கொக்கின்; கூம்பு நிலை அன்ன முகைய ஆம்பற்; தண்துறை ஊரன் தண்டாப் பரத்தமை”** (நற்; பா-280; வரி.1-2) என்ற பாடல் விளக்குகின்றது

ஆம்பல் குவிந்து தாமரையிடத்திலே வந்து சாய்ந்து வணங்கி நிற்கும் துறைக்குத் தலைவன் என்பதனை, **“உறு கால் ஒற்ற ஒல்கி ஆம்பல்; தாமரைக்கு இறைஞ்சும் தண் துறை ஊரன்”** (நற்; பா-300; வரி.3-4) என்ற பாடல் விளக்குகின்றது.

ஆண்யானையின் செவி போன்ற தாமரை இலையும் விளக்கவுள்ள ஆழமான பொய்கையில் நீருண்ணும் துறையில் பெண்கள் அஞ்சி ஓடும்படி வாளைமீன் துள்ளுகின்ற தலைவனின் ஊரினை விளக்க, **“தாமரை, களிறு, ஊரன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதற்கு, **“விளக்கின் அன்ன சுடர் விடு தாமரை; களிற்றுச் செவி அன்ன பாசடை தயங்க; வாளை பிறழும் ஊரற்கு நாளை”** (நற்; பா-310; வரி.1-2,4) என்ற பாடல் சான்றாகின்றது. இவை போன்றே பல பாடல்களில் தலைவனின் ஊரினை விளக்க மேலே கூறப்பட்டுள்ள கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை அறிய முடிகின்றது.

**தலைவியின் அழகு நலம்**

மானின் மடத்தை உடையதும் செருக்கை உடையதுமான பார்வையை உடைய தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மான்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“ஒய்யென இறைஞ்சியோளே மாவின்”** (அகம்; பா-86; வ-29) என்ற பாடல் உணர்த்துகின்றது.

வயலில் மலர்ந்தள்ள ஆம்பற்பூவால் கட்டப்பட்ட மூட்டுவாய் பொருந்திய அசையும் தழையையும், குவளை மலர் போன்ற மை பூசப்பெற்ற கண்களையும் உடைய தலைவியின்

அழகு நலத்தினை விளக்க, **“ஆம்பல், குவளை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதற்குச் சான்றாக, **“வயல் மலராம்பல் கயலமை நுடங்கு தழை; குவளை உண்கண் ஏஎர் மெல்லியல்”** (ஐ.நூறு; பா-72; வரி-1,3) என்ற பாடல் அமைகின்றது.

கரும்பின் மலரால் தொடுக்கப்பட்ட நீண்ட மாலையை உடைய தலைவியின் மாலையினை விளக்க, **“கரும்பு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதற்கு, **“பழன வெதிரின் கொடிப் பிணையவளே”** (ஐ.நூறு; பா-91; வ-4) என்ற பாடல் சான்றாக அமைகின்றது.

ஆம்பல் மலரின் தாதைப் போன்ற நிறத்தை எய்தியிருந்த தலைவியின் கண்களை விளக்க, **“ஆம்பல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பொய்கைப் பூத்த புழற்கால் ஆம்பல்”** (கலி; பா;34; வ;2) என்ற பாடல் உணர்த்துகின்றது.

மனைக்கண்ணுள்ள மரத்திற் படர்ந்த முல்லை மலரைப் போன்ற மணம்கமழும் கூந்தலை உடைய தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மௌவல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“எல்லறும் மௌவல் நாறும்”** (குறுந்; பா-19; வ-4) என்ற பாடல் விளக்குகின்றது.

மேற்கூறப்பட்டுள்ள கருப்பொருள்களின் வழி தலைவியின் அழகு நலமானது விளக்கப்படுகின்றது என்பதை அறிய முடிகின்றது.

**உவமை**

சங்கப் பாடல்களில் கருப்பொருள்கள் உவமையாகப் பயன்படுத்தப்படுகின்றன என்பதை அறிய முடிகின்றது.

கருப்பொருள்கள் உவமையாகப் பயன்படுகின்றன என்பதை,

***“கருப்பொருள்கள் உவமமாக நின்று குறிப்புப் பொருளுணர்த்துவது, திணை உணர்த்துவது, சூழலைக் காட்டுவது ஆகிய முச்செயல் புரியும்”*** (மொ.இளம்பரிதி; குறியியல் ஒரு சங்கப் பார்வை; பா.25) என்பர்.

தலைவியின் கொங்கைகள் ஆண் யானையின் கொம்புகளைப் போல் விளங்க, இவற்றின் கருமையான கண்கள் யானைக் கொம்பின் இரும்பால் செய்து கட்டப்பட்ட பூண்களைப் போல் அழகுடையனவாய் விளங்குகின்றன எனத் தலைவியின்

கொங்கைகளுக்கு, **“யானை”** உவமைப்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பெருங்கதவு பொருத யானை மருப்பின்”** (அகம்; பா-26; வ-6) என்ற வரி விளக்குகின்றது.

புன்னை மரமான காவல் மரத்தை வெட்ட விரும்பித் திதியன் என்பவனுடன் போரிட்டு இறந்து போனான் அன்னி, அவனைப் போல் நீயும் இறந்து விடுவாய் எனத் தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லும் போது உவமையாக, **“புன்னை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதற்கு, **“பொன் இணர் நறுமலர்ப் புன்னை வெ.்.கி”** (அகம்; பா-126; வ-15) என்ற பாடல் சான்றாகும்.

காவிரியின் கரையுச்சியைத் தோய்ந்து வரும் வெள்ளத்தில் மாலையணிந்த யானையைப் போல விளங்கும் புணையினை விளக்குவதற்கு **“களிறு”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“தார்புண் களிற்றின் தலைப்புண் தழீஇ”** (அகம்; பா-166; வ-12) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

ஆதன் எழினி என்பான் பகைவர் மீது எறியும் போது சிதையாத கரையையுடைய வெண்மையான வேல் மார்பில் பாய்ச்சப் பெற்ற ஆண் யானையின் துன்பத்தைப் போன்று வருத்தம் அடைவர் எனப் பரத்தையானவள் தன்னைப் பழித்த தலைவி துன்பப்படுவதை உணர்த்த **“பெருங்களிறு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“பெருங்களிற்று எவ்வம் போல”** (அகம்; பா-216; வ-15) என்ற பாடல் வரி உணர்த்துகின்றது.

ஆரியர் பழக்கி வைத்துள்ள பெண்யானை கொணரும் ஆண் யானையைப் போல் என் தோள் கட்டுத்தறியாக என் கூந்தலான கயிற்றால் கட்டி என் மார்பான கொட்டிலில் சிறை செய்வேன் எனத் தலைவி தலைவனைத் தன்னிடமிருந்து நீங்காது இருப்பதற்காகச் செய்கின்ற செயலினை விளக்க, **“பிடி, பெருங்களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“பிடி பயின்று தருஉம் பெருங்களிறு போல”** (அகம்; பா-276; வ-10) என்ற பாடல் விளக்குகின்றது.

பாகன் நீண்ட காலம் உயிருடன் வாழ்தல் மிக்க சினத்தை உடைய கொல்லும் ஆண்யானை அவனைக் கொல்லாது விட்டு வைத்தலால் நிகழ்வதாகும். அது போல தலைவி துணங்கைக் கூத்து ஆடும் இடத்திற்குச் செல்லாததால் தலைவன் பரத்தையருடன் கூத்தினை ஆடுகின்றான் எனத் தலைவனின் செயலினை விளக்க **“யானை”** என்ற கருப்பொருளினை உவமையாகக் காட்டுகின்றார். இதற்கு, **“கொல் களிற்று யானை நல்கல் மாறே”** (அகம்; பா-336; வ-14) என்ற பாடல் சான்றாக அமைகின்றது.

ஒளி வீசும் இலையையுடைய நீண்ட வேலும் விரைவான ஓட்டத்தையுடைய குதிரையையும் உடைய கிள்ளியின் பகைவரின் மதிலை அழிக்கும் யானை போல் தன்னெறியில் விரைந்து வந்து கரையை அழிக்கும் புதிய நீரில் தலைவனுடன் ஆடுவோம் எனத் தலைவி கூறினாள். இதில் புனல் வரவினை விளக்க, **"கடுமான், கொல்யானை"** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை, **"கதிரிலை நெடுவேல் கடுமான் கிள்ளி; மதில் கொல்யானையின் கதழ்பு நெறி வந்த"** (ஐ.நூறு; பா-78; வரி-1-2) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

காதல் கொண்ட மருண்ட மான் நோக்கினையுடைய மடந்தை உடன் வருகிறாள். ஓத்தினையுடைய அந்தணன் இருவரையும் எரியை வலம் செய்யுமாறு சொல்லக் காதலனும் தலை கவிழ்ந்த காதலியும் வலம் வருவர். அது போலப் போதவிழும் குளிர்ந்த தாமரைப் பொய்கையிலே பூத்திருந்த புது மலர்களிடையே தனித்திருந்த ஒரு மலரின் பக்கமாக ஓர் அன்னம் தன் அழகு நடைப் பெடையோடு வலம் வந்து கொண்டிருக்கும் எனத் தலைவன் தலைவியின் திருமணத்தினை விளக்க அன்னப் பெடை உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"தாமரை, மான்"** ஆகிய கருப்பொருள்கள் கொண்டு விளக்கப்பட்டுள்ளது. இதற்கு, **"தாதுசூழ் தாமரைத் தனிமலர்ப் புறம்சேர்பு; மாதர் கொள் மான்நோக்கின் மடந்தை தன் துணையாக"** (கலி; பா-4; வரி;2,4) என்ற பாடல் சான்றாக அமைகின்றது.

விளையாட்டுச் சிறுமியர் காலிலே செந்நிறச் சிலம்புகள் ஒலிக்க வயல்களிலே மலர்ந்திருக்கும் தாமரை மலரையும், ஆம்பல் மலரையும் பறிக்கச் செல்லும் போது அவர் வயல்களிடையே செல்லும் ஆரவாரத்தால் ஆரல் மீனைத்தின்று கொண்டிருக்கும் பறவையினங்கள் அஞ்சிப் பறந்து உயர்ந்த மரத்தின் உச்சிக் கொம்புகளிலேயிலிருந்து பலப்பல குரல்களை எழுப்புவது அமர்ந்த கண்களையுடைய மகளிரைத் தனியே தவிக்க விட்டு நோய் செய்த அவர் கணவரின் செயலைச் சுற்றத்தார்க் கெல்லாம் கேட்குமாறு சொல்வன போன்று குரல் எழுப்புகின்றன எனத் தலைவியின் நிலையினை விளக்க உவமையாக, **"நெய்தல், ஆம்பல், ஆரல்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **"நீரார் செறுவில் நெய்தலொடு நீடிய; நேர் இதழ் ஆம்பல் நிரை இதழ் கொண்மார்; ஆரல் ஆர்கை அம்சிறைத் தொழுதி"** (கலி; பா-10; வரி-1-2,5) என்ற பாடல் விளக்குகின்றது.

முருகனைப் போல தலைவியின் மகன் உள்ளான் எனத் தலைவியின் மகனைப் பற்றிக் கூற, **"முருகன்"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **"ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல்"** (கலி; பா-16; வ-9) என்ற பாடல் உறுதிப் படுத்துகின்றது.

கட்டிய இடம்நோக்கி ஆராவிருப்போடு சொல்லும் பசுவினைப் போல தலைவியும் தலைவனிடம் வருவாள் எனத் தலைவன் தலைவியை ஆற்றுவித்தல் பொருட்டாக இத்தகைய கூற்றை நிகழ்த்துகின்றான். இதில் தலைவன் கூற்றிற்கு உவமையாகக் காட்ட, **“ஆ”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“ஆபோல் படர்தக, நாம்”** (கலி; பா-16; வ-37) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

இலைநடுவில் விளங்கும் தாமரைபோல குடை நிழலிலே தெருவில் தோன்றும் தலைவியின் மகனைக் கண்டனர் எனத் தலைவியின் மகனைப் பற்றிக் கூற, **“தாமரை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தியுள்ளமையை, **“நீருள் அடைமறை ஆய் இதழ்ப் போது போல் கொண்ட”** (கலி; பா-19; வ-10) என்ற பாடல் உணர்த்துகின்றது.

உருவாக்க வேலியிடத்தே உள்ள காட்டுப்பூனைக் கூட்டம் வீட்டில் வாழும் குறிய கால்களையுடைய கோழிப் பேடையைத் தமக்குப் பாதுகாப்பிற்காக அழைத்தாற்போன்று தலைவனின் பரத்தை துன்பத்தால் கூவுகின்ற சொற்களுடன் தலைவியின் வீதியில் வாராமல் இருப்பாய் எனக் கூறினாள். பரத்தையர் ஒழுக்கத்தை விளக்க, **“கோழி, பேடை, வெருகு”** போன்ற கருப்பொருள்கள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதற்கு, **“மனையுறை கோழிக் குறுங்காற் பேடை; வேலி வெருகினம் மாலை உற்றென”** (குறுந்; பா-139; வரி.1-2) என்ற பாடல் சான்றாகும்.

சுரநெறியிற் செல்லும் யானையது மலைகளைக் குத்திய கோட்டைப் போல தலைவனுடன் நகையாடி மகிழ்ந்து தூய வெள்ளிய எம் பற்கள் முறிந்து அழியும் எனத் தலைவனின் பரத்தமையால் தலைவியின் அழகு நலம் அழிந்து போவதை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருளை உவமையாகப் பயன்படுத்தியுள்ளமையை, **“சுரம் செல் யானைக் கல்உறு கோட்டின்”** (குறுந்; பா-169; வ-1) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

ஆம்பலைப் பறிப்பவர்கள் உண்ணும் நீரினை விரும்பினாற்போல இத்தலைவியது மார்பகங்களிடையே துயிலுதலுமான இன்பத்தைப் பெற்றிருந்தும் நடுங்குதலை உடையராயினர் எனத் தலைவன் தலைவியின் மீது கொண்ட அன்பின் மிகுதியினை விளக்க, **“ஆம்பல்”** எனும்கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதற்கு, **“ஆம்பல் குறுநர் நீர்வேட்டாங்கு அவள்”** (குறுந்; பா-178; வ-3) என்ற பாடல் வழி சான்றாகின்றது.

குப்பைக் கோழிகளின் தனிமையான போரினைப் போலத் தானும் அழியும் வழி அழிந்து போகின்றதை அல்லாது முயன்று நீக்குவார் எவரும் துணையாவர் இல்லை எனத் தன்னுடைய நிலைமையினை, **“கோழி”** என்ற கருப்பொருள் மூலம் விளக்கப்படுகின்றது. இதற்கு **“குப்பைக் கோழித் தனிப்போர் போல”** (குறுந்; பா-305; வ-6) என்ற பாடல் சான்றாகும்.

தலைவனது ஊரின் நெய்தற் பூக்கள் போன்றவள் தலைவி எனத் தலைவியின் மென்மைத் தன்மையினை விளக்க, **"நெய்தல்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதற்கு, **"நின் ஊர் நெய்தல் அனையேம்- பெரும"** (குறுந்; பா-309; வ-6) என்ற பாடல் சான்றாகின்றது.

போர்க்களத்தில் அழிந்த புன்னை மரம் அன்னி, பெரியன் இருவர் போரையும் ஒழித்தது போல தோழி தான் ஒழிந்தால் இவ்விருவரது இகலும் அழியும் எனக் கூறுகின்றாள். இவ்வாறு தலைவன் தலைவியின் ஊடலை விளக்க, **"புன்னை"** என்ற கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **"புன்னை விழுமம் போல"** (நற்; பா-180; வ-8) என்ற பாடல் உணர்த்துகின்றது.

இவ்ஊடல் மருதத் திணையைத் தெளிவாக விளக்கவல்லது. ஊடல் மூலமே மருதத் திணைக்கு ஆறு பொழுதுகளும் உரித்தாயின என்பதனை விளக்கும் சான்று பின்வருமாறு,

***"மருத நிலத்தின் பெரும்பொழுது பற்றி தொல்காப்பியர் சுட்டிக் கூறவில்லை. எனவே உரையாசிரியர்கள் அறுவகைப் பெரும் பொழுதுகளும் மருதத்திற்கு உரியன என்பர். பெரும்பான்மையோர் இதனை உரிப் பொருளுடன் தொடர்பு கொண்டு ஊடல் எல்லாக் காலத்தும் நிகழ வாய்ப்புள்ளதாகையால் இதற்கேற்ற பெரும்பொழுதினைக் குறிப்பிடவில்லை"*** (தமிழறிஞர் சாமி சிதம்பரனார்;தொல்காப்பியத் தமிழர்; பக்-228) என்பர்.

யானை வீட்டின் ஒரு புறத்தில் ஒதுங்கி நிற்பது போல பனையோலையால் வேயப்பட்ட சமையலறையின் கூரையின் ஓலையைத் தொட்டுக் கொண்டு நிற்கிறான் எனத் தலைவனின் செயலை விளக்குவதற்கு, **"களிறு, பனை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **"பிச்சை சூழ் பெருங்களிறு போல எம்; அட்டில் ஓலை தொட்டினை நின்மே"** (நற்; பா-300; வரி.11-12) என்ற பாடல் விளக்குகின்றது.

வருந்திய பாகர் விரைவாகப் பரிக்கோலால் குத்தியலைத்த போது சினங்கொண்ட யானை கையிடையே வைத்திருந்த கவளத்தை உடம்பில் தடவிக் கொள்ளும், அதுபோலப் பலரும் உன்னைப் பழித்தலால் நீ நாணி மிகப் பெரிதுற்ற உன் துன்பத்தோடு வந்தாய் எனத்தலைவனின் வருத்தத்தினை விளக்க, **"யானை"** என்ற கருப்பொருள்களைக் கொண்டு பயன்படுத்தியுள்ளமையை, **"முனியுடைக் கவளம் போல நனி பெரிது"** (நற்; பா-360; வ-8) என்ற பாடல் வழி அறியமுடிகின்றது.

இவ்வாறு பல்வேறு உவமைகளை விளக்க மேலே கூறப்பட்டுள்ள கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனைச் சங்க இலக்கியப் பாடல்கள் வழி அறிய முடிகின்றன.

**தலைவனின் சிறப்பு**

பலரழைத்து இடுகின்ற விருந்தினோடு களிறும் மாவும் ஊர்ந்து செல்கின்ற தலைமையினை உடையவன் எனத் தலைவனின் சிறப்பினை விளக்க, **“களிறு, மா”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **“விருந்தின் ஊரும் பெருஞ்செம் மலனே”** (குறுந்; பா-33; வ.4) என்ற பாடல் வழி உணரமுடிகின்றது.

**மாலைக்காலம்**

ஆம்பற் பூவினது வாடலையொத்த கூம்பிய சிறகுகளையுடைய மனையிடத்தே தங்கும் குருவிகள் முற்றத்திலே காயப் போட்டிருக்கும் தானியங்களைத் தின்று பொதுவிடத்திலுள்ள தெருவின்கண் விளங்கும் புழுதியிலே குடைந்தாடிக் களித்தபின் மாலையிலே வீட்டினியிறைப்பினிடத்துள்ள தம்முடைய சேக்கையிற் சென்று தம் குஞ்சுகளோடு தங்கி இருக்கும். பிரிந்திருப்பவர் துன்பத்தைத் தரும் மாலைக் காலம், என மாலைக் காலத்தினை விளக்க, **“ஆம்பல், குரீஇ”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **“ஆம்பற் பூவின் சாம்பல் அன்ன; கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ”** (குறுந்; பா-46; வரி-1,3) என்ற பாடல் வழி அறியலாகின்றது.

பகன்றையினது குவிதல் நீங்கி மலர்ந்த வெண்மலர்கள் காணப்படும். இனிமையும் கடுப்புமுடைய கள்ளைப்போல நறுமணமுற்று அம்மலர்கள் நாறுகின்ற துன்பத்தைத் தரும் மாலைக்காலம் என மாலைக் காலத்தினை விளக்க, **“பகன்றை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“பேர் இலைப் பகன்றைப் பொதி அவிழ் வான்பூ”** (குறுந்; பா-330; வ-4) என்ற பாடல் விளக்குகின்றது.

**பரத்தையின் ஊர்**

ஞாழல் மரத்தினது வெண்சிறு கடுகைப் போன்ற சிறு பூக்கள், மருத மரத்தின் செம்மலர்களாகிய பழம்பூவொடு பரந்து, நீர்த்துறையை அழகு செய்திருக்கும் வயணத்தை உடையது. அவர் உறவு கொண்டுள்ள பரத்தையின் ஊர், எனப் பரத்தையின் ஊரினை விளக்க,**“ஞாழல், மருதம்”** போன்ற கருப்பொருள்கள் உதவுகின்றன என்பதனை **“ஐயவி அன்ன சிறுவீ ஞாழல்; செவ்வி மருதின் செம்மலொடு தாஅய்த்”** (குறுந்; பா-50; வரி-1-2) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**தலைவியின் ஊர்**

முடங்கிய கொம்புகளை உடைய எருமையின் கரிய பெரிய மணமுற்ற பூக்கள் நிறைந்த பொய்கையில் உள்ள ஆம்பலைச் சிதைக்கழனிகளை உடைய ஊரனின்

மகளான தலைவியின் ஊரினை விளக்க, **“எருமை, ஆம்பல், ஊரன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நெறி மருப் பெருமை நீல இரும்போத்து; வெறி மலர்ப் பொய்கை, ஆம்பல் மயக்கும்; கழனி ஊரன் மகளிவன்”** (ஐ.நூறு; பா-91; வரி.1-3) என்ற பாடல் உணர்த்துகின்றது.

அழகு பொருந்திய ஒளி வீசும் நெற்றியை உடையவளுக்குத் தந்தையின் கழனியில் தாமரை மலரும் ஊர் வீரர் போன்ற பெருங்கொம்பையுடைய எருமை அவர் தம் மகளிர் போன்ற துணையான பெண்ணெருமையுடன் தங்கும் நிழல் பொருந்திய நீர் நிலைக்கு அருகில் உள்ளது தலைவியின் ஊராகும் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“தாமரை, எருமை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன, இதனை, **“மள்ளரன்ன தடங்கோட் டெருமை; கழனித் தாமரை மலரும்”** (ஐ.நூறு; பா-94; வரி-1,4) என்ற பாடல் வெளிக்காட்டுகின்றது.

அழகிய நடையையுடைய எருமை உழக்கிய சேற்றில் நீல மணியின் நிறத்தையுடைய நெய்தலும், ஆம்பலும் தழைத்து வளர்கின்ற தன்மையுடைய ஊரனுக்கு மகள் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“எருமை, நெய்தல், ஆம்பல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதற்கு, **“அணி நடை எருமை ஆடிய அள்ளல்; மணி நிற நெய்தல் ஆம்பலொடு கலிக்கும்; கழனி ஊரன் மகள் இவள்”** (ஐ.நூறு; பா-96; வரி-1-3) என்ற பாடல் சான்றாகின்றது.

புன்கினது மலர்கள் உதிர்ந்து கிடக்க விளங்கும் வெண்மணற் பரப்பானது வேலனால் செய்யப்பெற்ற வெறியாட்டுக் களந்தோறும் செந்நெல்லினது வெண்பொறி சிதறினாற் போன்ற தோற்றத்தைக் கொடுக்கும் மணல்மேடுகள் உடையது தலைவியினது ஊர் என்பதை விளக்க, **“புன்கு, வேலன், செந்நெல்”** போன்ற கருப்பொருள்கள் புலப்படுத்தி நிற்கின்றன. இதனை, **“சுனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்; வேலன் புனைந்த வெறி அயர் களம் தொறும்; செந்நெல் வான்பொரி சிதறி அன்ன”** (குறுந்; பா-53; வரி-2-4) என்ற பாடல் உணர்த்துகின்றன.

**தலைவன் அணிந்தது**

இதழ் விரிந்த கருநீலமலர், அல்லி, அனிச்சம், மலர்ந்த முல்லை, நறவமலர் முதலியவை எல்லாம் சேர்ந்து நெருங்கக் கட்டிய கண்ணியை அணிந்தவன் எனத் தலைவன் அணிந்த மலர்களை விளக்க, **“நீலம், அல்லி, அனிச்சம், முல்லை, நறவம்”** போன்ற கருப்பொருள்களைப் பயன்படுத்தியுள்ளமை, **“அரிநீர் அவிழ் நீலம், அல்லி, அனிச்சம்; புரிநெகிழ் முல்லை நறவோடு அமைந்த”** (கலி; பா-26; வரி1-2) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

**வரலாற்றுச் செய்திகள்**

**தித்தன் நாடு**

மணிகள் உள்ளே இடப்பட்ட சிலம்பையும் ஆம்பல் மலரால் தொடுக்கப்பட்ட மாலையும் அரத்தால் செய்த அழகிய வளையலுடைய முன் கையையும், பருத்த தோள்களையுமுடைய ஐயை என்பவளின் தந்தை தித்தன். மழை வளத்தால் உண்டான குவியலை நெல்லை உடைய உறையூரின் மன்னன், என தித்தனுடைய நாடானது, **"ஆம்பல், நெல்"** போன்ற கருப்பொருள்களின் மூலம் விளக்கப்படுகின்றன. இதனை, **"அரி பெய் சிலம்பின் ஆம்பல் அம் தொடலை; பிண்ட நெல்லின் உறந்தை ஆங்கான்"** (அகம்; பா-6; வரி-1,5) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**மத்தியின் ஊர் (கழாஅர்)**

தீயைப் போன்ற தாமரைப் பூக்களையுடைய வயலில் அழகிய உள் துளைகளைக் கொண்ட வள்ளையின் மெல்லிய கொடிகளை உழக்கி வாளை மீன்களைத் தின்ற கூரிய பற்களையுடைய நீர்நாய் முட்கள் பொருந்திய நண்டை உடைய பரம்பின் பழைய புதர்களில் தங்கியிருக்கும் இடங்களையுடைய பல வேற்படைகளையுடையது மத்தி என்பவனின், **"கழாஅர்"** என்னும் ஊர். இவ்வாறு மத்தி என்னும் ஊரினை விளக்க, **"தாமரை, வள்ளை, வாளை, நீர்நாய்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளமையை, **"சுடர்ப் பூத் தாமரை நீர் முதிர் பழனத்து; அம் தூம்பு வள்ளை ஆய் கொடி மயக்கி; வாளை மேய்ந்த வள் எயிற்று நீர்நாய்"** (அகம்; பா-6; வரி-16-18) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

பாகனால் பழக்கப்படுத்தாத காவலையுடைய யானை நீரில் விளையாடலைக் கற்றதாக அதனால் மிக்கெழும் நீர் மோதிய மரங்கள் உயர்ந்த தோட்டத்தையும் கதிர்களையுடைய வயல்களையுடைய கழாஅர் என்னும் ஊரினை விளக்க, **"யானை" என்ற** கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **"கல்லா யானை கடி புனல் கற்றென"** (அகம்; பா-376; வ-2) என்ற பாடல் விளக்குகின்றது.

**எழினி**

போரில் வல்ல யானைகளையுடைய பொன்னணி அணிந்த எழினி என்பான் என எழினியின் வரலாற்றினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் மூலம் விளக்குகின்றது. இதற்கு, **"போர் வல் யானைப் பொலம் பூண் எழினி"** (அகம்; பா-36; வ-16) என்ற பாடல் சான்றாகின்றது.

**இருங்கோ வேண்மான்**

தேன் மணம் கமழும் மார்பிடத்தே பூசியுலர்ந்த சந்தனத்தையுடைய இருங்கோ வேண்மான் என்பான், என இருங்கோ வேண்மானின் வரலாற்றினை விளக்க, **"சாந்து"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **"தேம் கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்"** (அகம்; பா-36; வ-18) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

**செழியனின் அள்ளூர்**

பகைவரின் யானைகளைக் கொண்ட அரிய போரினைச் சிதைந்திடக் கொல்லும் ஒளிரும் வாட்படையை உடைய வெற்றி பொருந்திய செழியனின் நெற்குவியலையுடைய அள்ளுர், எனச் செழியனின் அள்ளூரை விளக்க, **"களிறு, நெல்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **"களிறுடை அருஞ் சமம் தகைய துறும்; பிண்ட நெல்லின் அள்ளுர் அன்ன என்"** (அகம்; பா-46; வரி-12,14) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**அ.்.தை வள்ளல் (அகுதை)**

இனிமையையும் கள்ளையும் உண்ட அ.்.தை என்பவனின் யானைகளையும் நல்ல அணிகளையும் பரிசிலர்க்கு வழங்குபவன். அவை வழங்கப்படக் கூடிய இடம் நாலோலக்க மண்டபம் என அ.்.தையைப் பற்றிய கருத்தினை, **"களிறு"** எனும் கருப்பொருள் விளக்கி நிற்கிறது. இதனை, **"இன் கடுங் கள்ளின் அ.்.தை களிற்றொடு"** (அகம்; பா-76; வ-3) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**வேள் எவ்வி**

தன் தமையர் விடியற்காலையில் பிடித்து வந்தது திரண்ட கோடுகளை உடைய வாளைமீன். அவ்வாளை மீனுக்கு விலையாக அழகிய வளைந்த கொப்பூழையும் அழகிய சொற்களையும் உடைய பாண்மகள், நீண்ட கொடிகள் அசையும் கள் மிக்க தெருவில் விற்கச் சென்றாள். அங்கு வாங்குபவர் பழைய செந்நெல்லை முகந்து கொடுப்பதைக் கொள்ளாமல் கழங்கு போன்ற பெரிய முத்துக்களுடன் சிறந்த அணிகளையும் பெறுவாள். இத்தன்மையுடைய வளம் மிக்க ஊர்களையுடையவன் 'எவ்வி' என்பான், என எவ்வியின் நாட்டினை விளக்க, **"வாளை, செந்நெல்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதற்கு, **"காலைத் தந்த கணைக் கோட்டு வாளைக்கு; பழஞ் செந்நெல்லின் முகவை கொள்ளாள்"** (அகம்; பா-126; வரி-8,11) என்ற பாடல் சான்றாக அமைகின்றது.

**கள்ளூர்**

அழகு விளங்கப் பழமையான புகழ் மிக்க பல வகையான மலர்கள் நிறைந்த வயல்களையும் கரும்பு மிக்க தோட்டங்களையும் கொண்ட சிறப்புடைய கள்ளூர் என்ற ஊரினை விளக்க, **“கரும்பு”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“கரும்பு அமல் படப்பை பெரும் பெயர்க் கள்ளூர்த்”** (அகம்; பா-256; வ.15) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

**பாண்டியன் நெடுஞ்செழியன்**

கடல் நீர்ப் பரப்பில் பல மீன்களைப் பிடிப்பவர் அவற்றுடன் கொண்ட சிப்பிகளைப் பன்னாடையால் அரிக்கப் பெறும் மகிழ்ச்சி தரும் கள்ளின் விலையாகத் தருவர். இத்தகைய தன்மையுடைய பெரும்புகழ் பொருந்திய கொற்கைத் துறைக்குத் தலைவனும் கரிய பெரிய யானையும் நெடிய தேரையும் உடைய பாண்டியன் நெடுஞ்செழியனின் சிறப்பினை விளக்க, **“மீன், நறவு, கடும்பகட்டு யானை”** போன்ற கருப்பொருள்கள் புலப்படுத்தி நிற்கின்றன என்பது, **“பல்மீன் கொள்பவர் முகந்த இப்பி; நார்அறி நறவின் மகிழ் தொடைக் கூட்டும்; கடும்பகட்டு யானை நெடுந்தேர்ச் செழியன்”** (அகம்; பா-296; வரி; 8-9,11) என்ற பாடல் வழி உணர்த்தப்படுகின்றது.

**பழையன்**

வெற்றியுடைய வேலையும் அணிகலன் அணிந்த யானையையும் உடைய சோழ மன்னனின் படைத் தலைவன் பழையன். எனப் பழையனின் வரலாற்றினை விளக்க,**“யானை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“இழை அணி யானைச் சோழர் மறவன்”** (அகம்; பா-326; வ-9) என்ற பாடல் உணர்த்துகின்றது.

இப்பழையனைப் பற்றிய செய்தி பின்வருமாறு, ***“பழையன் என்பவன் சோழ மன்னர்களின் ஆளுகைக்குட்பட்டு ஆட்சி செலுத்திய குறுநில மன்னன் சோழ நாட்டின் ‘போஒர்’ என்ற பகுதியைக் காவல் செய்தவன் இவனுடைய வேற்படை சோழர் எப்போதும் வெற்றியைத் தேடித் தரும். ஆதலால் பழையன்,‘சோழன் மறவன்’ என்று பாராட்டப்பட்டான்”*** (ந.மு.வேங்கடசாமி நாட்டார்; (உ.ஆ), அகநானூறு மணிமிடைப் பவளம்; பா.எண்-326; 6) என்பர்.

**வல்லம் என்ற ஊர்**

நல்ல தேரினையும் கடிய களிற்றையும் கொண்ட சோழ மன்னரின் நீண்ட நெற்கதிர்கள் விளைவது வல்லம் என்ற ஊராகும் என வல்லம் என்ற ஊரினை விளக்க, **“களிறு, நெல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“கடும் பகட்டு**

**யானைச் சோழர் மருகன்; நெடுங் கதிர் நெல்லின் வல்லம் கிழவோன்"** (அகம்; பா-356; வரி-12-13) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**மரந்தை**

சேற்றில் உள்ள அழகிய தளையுடைய ஒள்ளிய வள்ளிக் கொடியைப் பின்னுவித்து வளமான நெல்லின் வளைந்த கதிர் விரிய துய்யினைத் தலையில் உடைய வளமான இறாமீன் பாயும் இடமான அழகுடைய வளைந்த பிடரி மயிரையுடைய குதிரையையுடைய குட்டுவனின் 'மரந்தை' என்ற ஊரினை விளக்க **"வள்ளை, நெல், இறாமீன், குதிரை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"அம் தூம்பு வள்ளை அழற்கொடி மயக்கி; வண் தோட்டு நெல்லின் வாங்கு மீள் விரிய; துய்த் தலை முடங்கு இறாத் தெறிக்கும் பொற்புடைக்; குரங்கு உளைப் புரவிக் குட்டுவன்"** (அகம்; பா-376; வரி-14-17) என்ற பாடல் உறுதிப்படுத்துகின்றது.

**தேனூர்**

கரும்பைச் சாறு பிழியும் எந்திரம் ஆண் யானை முழங்கும் முழக்கத்துக்கு மாறாக ஒலிக்கும் தேனூர், எனத் தேனூரினை விளக்க,**"கரும்பு, களிறு"** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **"கரும்பின் எந்திரம் களிற்று எதிர் பிளிற்றும்"** (ஐ.நூறு; பா-55; வ-1) என்ற பாடல் உணர்த்துகின்றது.

பகற்பொழுதை உண்டாக்கும் கதிரவனைப் போன்று தோன்றும் பல கதிர்களையுடைய வேள்வித் தீயையும் ஆம்பல் நிறைந்த வயல்களையும் உடையது தேனூர், என **"ஆம்பல்"** என்ற கருப்பொருள் விளக்கப்படுகின்றதை, **"ஆம்பல் அம் செறுவின் தேனூரன்ன"** (ஐ.நூறு; பா-57; வ-2) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**அஞ்சியின் வரலாறு**

வேகத்தைக் கொண்டதான யானைப் படையையும், நெடிய தேர்ப்படையினையும் உடையவன் அதியமான் அஞ்சி என அஞ்சியின் வரலாற்றினை விளக்க, **"யானை"**என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளமை, **"கடும்பகட்டு யானை நெடுந்தேர் அஞ்சி"** (குறுந்; பா-91; வ-6) என்ற பாடல் வழி அறியலாகின்றது.

**தொண்டிப்பட்டனம்**

பசிய அவலை இடித்த கரிய வயிரம் பொருந்திய உலக்கையினை அழகிய கதிர்களையுடைய நெல் வயல்களின் வரப்பாகிய அணையிலே படுக்க வைத்து ஒள்ளிய

தொடியணிந்த பெண்கள் வண்டல் விளையாட்டை விளையாடும் சிறப்பையுடையது தொண்டிப்பட்டினம். இதனை விளக்க, **“நெல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதற்கு, **“ஆய்கதிர் நெல்லின் வரம்பு அணைத்துயிற்றி”** (குறுந்; பா-238; வ-2) என்ற பாடல் சான்றாகின்றது.

தொண்டி என்னும் ஊரினை விளக்கும் செய்தி பின்வருமாறு, **“தொண்டி என்னும் நகர் என்றென்றும் வளமும் சிறப்பும்மிக்கது”** (டாக்டர் அ.சுவாமிநாதன்; தமிழக வரலாறும் பண்பாடும்; ப-88) என்பர்.

**சேந்தன் வரலாறு**

காவிரியாற்றினது பலரும் நீராடுகின்ற பெரிய நீர்த்துறையினிடத்தே நிற்கும் மருதமரத்தோடு கட்டிவைத்த மேலுயர்ந்த கொம்புகளைக் கொண்ட யானைகளையுடையவன் சேந்தன் என்பவன். இவ்வாறு சேந்தன் வரலாற்றினை விளக்க, **“மருது, யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமை, **“பலர் ஆடு பெருந்துறை மருதொடு பிணித்த; ஏந்துகோட்டு யானைச் சேந்தன் தந்தை”** (குறுந்; பா-258; வரி-3-4) என்ற பாடல் வழியறியலாகின்றது.

**ஆதி அருமனின் ஊர்**

கள்ளைக் குடிக்கும் விருப்பத்தை உடையவரது பயணமானது ஊரகத்தேயுள்ள பாளையால் தரப்பட்ட நாரையுடைய குறுங்காய்களை உடையதான உயர்ந்த கரிய பனையின் நுங்கினையும் கைக்கொண்டு பெயர்வதாயிருக்கும் ஆதி அருமனின் பழைய ஊர் என ஆதி அருமனின் ஊர் வரலாற்றினை விளக்க, **“கள், நாரை, பனை, நுங்கு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கள்ளில் கேளிர் ஆத்திரை உள்ளூர்ப்; பாளை தந்த பஞ்சிஅம் குறுங்காய்; ஓங்கு இரும் பெண்ணை நுங்கொடு பெயரும்”** (குறுந்; பா-293; வரி-1-3) என்ற பாடல் விளக்குகின்றது.

**அதிகன் வரலாறு**

கோட்டானாகிய கோழியையுடைய வாகைப் பறந்தலை என்னும் இடத்தே உள்ள போர்க்களத்தில் பசிய பூணணிந்த பாண்டியனது ஏவலிலே வல்லவனான அதிகன் என்பவன் தன் போர்க்களிற்றோடு, பட்ட காலத்திலே விளங்குகின்ற வாட்படையினை உடையவரான கொங்கர்களுடைய வெற்றி ஆரவாரத்தினுங் காட்டில் மிகுதியாயிருந்தது என அதிகன் வரலாற்றினை விளக்க, **“கோழி, களிறு,”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதற்கு, **“கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்; களிறொடு பட்ட ஞான்றை”** (குறுந்; பா-393; வரி-3,5) என்ற பாடல் சான்றாகும்.

**திருமுடிக்காரி**

பல நெடிய ஆண் நிரைகளை வில்லின் திறமையாலே கைப்பற்றி அவற்றை ஓட்டிக் கொண்டு வந்து இரவலர்க்குக் கொடையாக அளிக்கும் மலையமான் திருமுடிக்காரி எனத் திருமுடிக்காரியின் வள்ளல் தன்மையினை விளக்க, **“ஆ”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“பல் ஆ நெடு நிரை வில்லின் ஓய்யும்”** (நற்; பா-100; வ-8) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**வழுதி**

காவல் காக்கும் அரணின் வலிமை சிதையும்படி பல யானைகளைப் பரப்பி அழித்து அரண் பலவற்றை வென்ற வலிமை மிக்க சேனையையுடைவன் வழுதி என வழுதியின் நாட்டினை விளக்க, **“களிறு”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“மிளை வலி சிதையக் களிறு பல பரப்பி”** (நற்; பா-150; வ-2) என்ற பாடல் வழி அறியலாம்.

**குன்றூர்**

பழைய வேளிர்களுடைய குன்றூர் வயல்யாமையின் பசிய இலை போலக் காணப்படும் முதுகில் தாம் சுடுகின்ற நத்தையை உடைத்து உண்பர், எனக் குன்றூரினை விளக்க. **“ஆமை, நத்தை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை **“பழனி யாமைப் பாசடைப் புறத்து”** (நற்; பா-280; வ-6) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**ஊணூர்**

ஊணூரினை யானை வாழும் மலை சூழ்ந்துள்ளது என ஊணூரினை விளக்க, **“யானை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“பிச்சை சூழ் பெருங் களிறு போல எம்”** (நற்; பா-300; வ-11) என்ற பாடல் மூலம் விளக்கப்படுகின்றது.

**செழியன்**

பாகன் குறிப்பது தவிரப் பிற கல்லாத யானைகளையும் விரைவாகச் செல்லும் தேரையுமுடையவன் செழியன் எனச் செழியனைப் பற்றி விளக்க, **“யானை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்”** (நற்; பா-340; வ-2) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**இருப்பையூர்**

நெற்கதிரை அறுப்பவர் தண்ணுமை என்னும் வாச்சியத்தை முழக்குவர் அதுகேட்டு வயலிலுள்ள பறவைகள் எல்லாம் அஞ்சி மருதமரக் கிளைகளில் போய் உட்காரும்,

வயலை நோக்கித் தாழ்ந்து வளைந்த கிளைகளையுடைய அம்மரத்தின் தொங்கும் பூங்கொத்துக்கள் உதிரும். அப்படி வளப்பமுள்ளது இருப்பையூர். இவ்வாறு இருப்பையூரினை விளக்க, **“வெண்ணெல், மருதம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **“வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரிஇ; வாங்கு சினை மருதத் தூங்கு துணர் உதிரும்”** (நற்; பா-350; வரி-1,3) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**வெண்ணி ஊர்**

பொய்கையில் வாளைமீன் வாள் போல் பிறழும் அப் பொய்கையிலுள்ள நீர்நாய் நாளும் இடையிறாத துயிலை ஏற்கும் அவ்வாறாய பொய்கைகள் உள்ள ஊர் கோயில் வெண்ணி என வெண்ணி என்னும் ஊரினை விளக்க, **“வாளை, நீர்நாய்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **“வாளை வாயின் பிறழ நாளும், பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்”** (நற்; பா-390; வரி-1-2) என்ற பாடல் வலியுறுத்துகின்றது.

**முடியனின் மலை**

மலை போன்ற யானைகளையுடையவனும் வாய்மொழி தவறாதவன் முடியன் என்பான் என முடியனின் மலையினை விளக்க, **“யானை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“வரை போல் யானை வாய்மொழி முடியன்”** (நற்; பா-390; வ-9) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**தலைவியின் அன்பு**

குவிந்த கொத்துக்களையுடைய தோன்றியினது ஒள்ளிய பூப்போன்ற தொக்கச் சிவந்த நெற்றியையும் உடையவள். பெடைகள் கூட்டமுங் கொண்ட சேவலே செறிந்த இருளையுடைய இரவின் நடுயாமத்தே வீட்டெலிகளை உணவுக்காகத் தேடிப்பார்க்கும் காட்டுப் பூனையின் குட்டிக்குச் சிலநாள் இட்டு வைத்து உண்பதற்குரிய இரையாகி நீயும் மிகுதியான துன்பத்தை அடைவாய் எனத் தலைவி தன்னுடைய தலைவன் மீது கொண்ட அன்பின் காரணமாக சேவலைத் திட்டுகிறாள். இதனை விளக்க, **“தோன்றி, சேவல், வெருகு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை, **“குவி இணர்த் தோன்றி ஒண்பூ அன்ன; தொகுசெந் நெற்றிக் கணம் கொள் சேவல்; பிள்ளை வெருகிற்கு அல்கு இரை ஆகிக்”** (குறுந்; பா-107; வரி-1-2,4) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**பகற்குறியிடம்**

ஊருக்கு அருகாமையிலேயே பொய்கை உள்ளது. சிறிதான காட்டாறும் பொய்கைக்குத் தொலைவிடத்தது அன்று இரைதேடும் வெண்குருகை அல்லாது வேறு எவ்வுயிரும் அடைதலைக் கைவிட்டதாயிருப்பது. அதனையடுத்திருக்கும் பொழிலுக்கு

தலைவி வருவாள் எனத் தோழி கூறுகின்றாள். இவ்வாறு பகற் குறியிடத்தை உரைப்பதற்கு, **"வெண்குருகு"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **"இரைதேர் வெண்குருகு அல்லது யாவதும்"** (குறுந்; பா-113; வ-3) என்ற பாடல் வழி அறியலாம்.

**வைகறை**

கோழி குக்கூ எனக் குரலெடுத்துக் கூவியது எனக் **"கோழி"** என்ற கருப்பொருள் மூலம் விடியற் பொழுதானது விளக்கப்படுகின்றதை, **"குக்கூ என்றது கோழி; அதன் எதிர்"** (குறுந்; பா-157; வ-1) என்ற பாடல் மூலம் அறியலாம்.

தொழுவத்திலுள்ள அகன்ற தலையையுடைய எருமைக்காரனின் மிகவும் இனிமையுள்ள பாலை நிரம்பப் பெறும் பொருட்டுக் கன்றுகளைத் தொழுவத்தில் கட்டிவிட்டு எருமைகளை மட்டும் ஓட்டிக்கொண்டு மேய்க்கும் ஊரிலுள்ள இளம் சிறுவர்கள் அந்த எருமைகளின் மேலே ஏறிக்கொண்டு வீட்டைவிட்டுப் புறப்படும் நன்றாகப் புலர்ந்த விடியற்காலம் என விடியற்காலத்தினை விளக்க, **"எருமை"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **"மன்ற எருமை மலர்தலைக் காரான்; இன்தீம் பாற்பயம் கொண்மார் கன்று விட்டு"** (நற்; பா-80; வரி-1-2) என்ற பாடல் உணர்த்துகின்றது.

வைகறை மருத நிலத்தின் சிறுபொழுதாகும். வைகறை ஊடல் நிகழ்வதற்கான காலம் என்பதனை விளக்கும் சான்று பின்வருமாறு, ***"வைகறையில் மருத நிலத்தில் ஊடல் ஒழுக்கம் நிகழும் வெள்ளியை உருக்கி வார்த்தாற் போன்ற பளபளப்பான நீர்வள மிக்க வயல் நிலமானது தனது வளஞ்சேர்ந்த வெண்ணிறத்தால், வளப்பெருக்கால், தன்னிடம் வருவோருள்ளத்தில் பல அரிய தொழில் முயற்சிகளுக்கிடந் தந்து அறிவுணர்வை உண்டாக்குகிறது. மாடமாளிகைகளும் பல்வகைச் செல்வங்களும் ஊடலை உண்டாக்கும். பரத்தையரிடத்திலிருந்து தலைவன் வருங்காலம் வைகறையேயாதலின் அது தலைவி ஊடுதலுக்குரிய காலமாகும்"*** (புலவர் குழந்தை; தொல்காப்பியர் காலத்தமிழர்; பக்.107-110) என்பர்.

**பரத்தையின் அழகு நலம்**

மாரிக் காலத்து ஈங்கைச் செடியில் தோன்றும் சிறந்த தளிர் போன்ற அழகான மாந்தளிர் போன்ற நிறத்தையுடைய மேனியையும் ஆராய்ந்தெடுத்த அணியையும் உடையவள் பரத்தை, எனப் பரத்தையின் அழகு நலத்தினை விளக்க, **"ஈங்கை, மா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **"மாரிஈங்கை மாந்தளிர் அன்ன"** (அகம்; பா-206; வ-7) என்ற பாடல் உணர்த்துகின்றது.

மாலையைப் போன்ற பூங்கொத்துக்களையுடைய சிறிய அடியையுடைய காஞ்சி மரத்தின் மலரின் பூந்துகளை அணிந்த கூந்தலை உடையவள் பரத்தை எனப் பரத்தையின் அழகு நலத்தினை விளக்க, **“காஞ்சி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“கோதை இணர குறுங்கால் காஞ்சிப்”** (அகம்; பா-296; வ-1) என்ற பாடல் வழி அறியலாம்.

சோலையிலே மலர் சூடிவரும் மான் பிணை போன்ற பரத்தையர்கள் எனப் பரத்தையின் அழகு நலத்தினை விளக்க, **“மான்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“சோலை மலர் வேய்ந்த மான்பிணை யன்னார் பலர் நீ”** (கலி; பா-28; வ-8) என்ற பாடல் உணர்த்துகின்றது.

நறுமணமிக்க சாந்தமும் புழுகும் மணக்கும் அடர்ந்த பகுதியை உடையதாகிய கூந்தலை உடையவள் எனப் பரத்தையின் கூந்தலினை விளக்க, **“சாந்து”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“நறும்தண் தகரமும் நானமும் நாறும்”** (கலி; பா-28; வ-26) என்ற பாடல் உணர்த்துகின்றது நீரில் வளர்ந்த வெள்ளாம்பலது அழகிய மாறுபட்ட முழு நெறிப்பைக்கொண்ட தழையுடையானது தேமலையுடைய தொடையிடத்தே முறையாக மாறி மாறிப் பட்டதாய் வருத்தஞ் செய்ய செம்பொன் அணிகளையுடையவள் பரத்தை. இவ்வாறு பரத்தையின் அணியினை விளக்க, **“ஆம்பல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“அயவெள்ளாம்பல் அம்பகை நெறித்தழை”** (குறுந்; பா-293; வ-5) என்ற பாடல் வெளிக் காட்டுகின்றது.

ஆம்பலைப் பற்றிய கருத்தாவது பின்வருமாறு; ***“ஆம்பல் வகையில் தமிழ்நாட்டில் வெண்ணிற மலரையுடைய வெள்ளாம்பலும், நீல நிறமலரையுடைய நீல ஆம்பலும், செந்நிற மலரையுடைய அரக்காம்பலும் உள்ளன. பொதுவாக ஆம்பல் என்புழி சங்க இலக்கியங்கள் வெள்ளாம்பலைக் குறிக்கின்ற***

***ன”*** (கு.சீநீவாசன்; சங்க இலக்கியத் தாவரங்கள்; ப-13) என்பர்.

மராமரத்தின் அவிழ்ந்த பூங்கொத்துக்கள் மணக்கும் கூந்தல் அசையும் இயல்போடு அசைந்து வருகின்றாள் பரத்தை எனப் பரத்தையின் அழகு நலத்தினை விளக்க, **“மராஅம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“தேம்பாய் மராஅம் கமழும் கூந்தல்”** (நற்; பா-20; வ-3) என்ற பாடல் வெளிக்காட்டுகின்றது.

வெண்ணி என்னும் ஊரில் சுற்றியுள்ள வயலில் வெண்மையான ஆம்பல் மலர் நிறைந்திருக்கும். அம்மலரின் அழகிய நெளிவையுடைய தழையுடைய மெல்லியதாய்

அணிந்து கொண்டு விழாவுக்குச் செல்கின்றாள் பரத்தை எனப் பரத்தை சூடியதனை விளக்க, **“ஆம்பல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“வயல் வெள் ஆம்பல் உருவ நெறித் தழை”** (நற்; பா-390; வ-4) என்ற பாடல் நினைவூட்டுகின்றது.

**தலைவன் செயல்**

பள்ளி கொள்ளும் யானையைப் போல பெருமூச்சு விட்டவனாக வெற்றியுடைய தலைவன் தன் புதல்வனைத் தழுவிக் கொண்டான் எனத் தலைவனின் செயலை விளக்க, **“யானை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“புள்ளி யானையின் உயிர்த்தனன் நசைஇப்”** (குறுந்; பா-359; வ-4) என்ற பாடல் விளக்குகின்றது.

**மகனின் அழகு நலம் மற்றும் செயல்**

நீர்நாய்கள் பொருந்திய பழைய நீரில் தழைத்த தாமரை மலரின் பொகுட்டைச் சூழ்ந்துள்ள உள்ளிதழ்களை அடுத்துள்ள மெல்லிய இதழைப் போன்ற குற்றமில்லாத உள்ளங்கையினை உடையவன் மகன், என மகனின் அழகு நலத்தினை விளக்க, **“நீர்நாய், தாமரை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **“நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்; தாதின் அல்லி அவிர் இதழ் புரையும்”** (அகம்; பா-16; வரி-1-2) என்ற பாடல் உணர்த்துகின்றது.

இளங்களிற்றின் மத்தகத்திலே கிடந்து தொங்கும் மலர்வடம் போல நின் மென்மையான தலையிலே மூவடக் கோவை கிடந்து தொங்குகின்றது. இரண்டு யானைகள் போரிடுவது போலப் பவள உருளைமேல் அமைத்த விளையாட்டு யானையை இழுத்து விளையாடுகின்றான். போர் யானை போன்ற மாவீரன் எனத் தலைவியின் மகனின் செயலையும், அழகையும் விளக்க, **“களிறு, வேழம்,யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமை, **“மைபடு சென்னி மழகளிற்று ஓடைபோல்; கடிஅரணம் பாயாநின் கைபுனை வேழம்; போர் யானை வந்தீக ஈங்கு”** (கலி; பா-21; வரி-1,7,10) என்ற பாடல் உணர்த்துகின்றது.

மலையடிவாரத்தை நோக்கிச் சிங்கக் குட்டி பாய்ந்தது போலத் தன் தந்தையின் அகன்ற மார்பை நோக்கிப் பாய்ந்துவிட்டான் என மகனின் செயலினை விளக்க, **“கோண்மா”** என்ற கருப்பொருள் கொண்டு விளக்கியுள்ளனர்.

தேன் போன்ற இனிய மொழிகளைப் பேசுகின்ற புதல்வனைத் தலைவன் தூக்கித் தன் மார்போடு அணைத்தான். அப்பொழுது பூ மணம் கமழும் அவனது சிவந்த வாய் நீராலே தலைவனின் மார்புச்சந்தனம் சிதைந்தது எனப் புதல்வனின் செயலினை விளக்க, **“தேன், சாந்து”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை,**“தேர் நடை பயிற்றும் தேமொழிப் புதல்வன்; பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு”** (நற்; பா-250; வரி-3-4) என்ற பாடல் வெளிக்காட்டுகின்றது.

**தலைவன் தலைவியின் கூடல்**

தலைவியின் கொங்கைகள் தலைவனின் நறிய சந்தனம் அணியப்பெற்ற நல்ல நிறம் விளங்கும் மார்பில் அழுந்திப்புடை படுக்குமாறு தழுவுதலை விரும்புகின்றனர் எனத் தலைவன் தலைவியின் கூடலை விளக்க, **"நறுஞ் சாந்து"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **"நறுஞ் சாந்து அணிந்த கேழ் கிளர் அகலம்"** (அகம்; பா-26; வ-14) என்ற இப்பாடல் வழி அறியலாம்.

**சோலை**

அழகிய மருதமரம் ஓங்கிய விரிந்த மலர்களையுடைய சோலை, எனச் சோலையின் அழகானது **"மருது"**என்ற கருப்பொருள் மூலம் புலப்படுத்தப்படுகின்றதை, **"திரு மருது ஓங்கிய விரி மலர்க் காவில்"** (அகம்; பா-36; வ-10) என்ற பாடல் வழி அறியலாம்.

**பாணனின் செயல்**

பாணனைத் தெருவில் நின்ற ஈன்றணிமையை உடைய பசுவானது சினந்து பாய்ந்தது. அப்போது அவன் மனம் கலங்கித் தன் கையில் இருந்த யாழை நிலத்தில் எறிந்து விட்டு அஞ்சி ஓடிவந்து தலைவியின் இல்லத்துள் புகுந்தான். இவ்வாறு பாணனின் செயலை விளக்க **"பசு"** என்ற கருப்பொருள் கொண்டு விளக்குகின்றனர் என்பதை, **"புனிற்றாப் பாய்ந்தெனக் கலங்கி யாழ் இட்டு"** (அகம்; பா-56; வ-11) என்ற பாடல் வழி அறியலாம்.

பரத்தையரின் தாய்மாரிடம் சார்பு எய்தி யானைகளைப் பரிசிலாகப் பெற்று உணவைப் பெறும் பாணன் எனப் பாணனின் செயலினை விளக்க, **"களிறு"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **"களிறு பெறு வல்சிப் பாணன் கையதை"** (நற்; பா-310; வ-9) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

பாணன் ஊடல் தீர்க்கும் வாயிலாகச் செயல்படுபவர் என்னும் கருத்தை விளக்கும் சான்றுகள் பின்வருமாறு, ***"காதலன் காதலிகளிடையே தோன்றும் ஊடல், ஊடல் உண்டாவதற்கான காரணங்கள் பாணன், கூத்தன், பாங்கன், தோழி, விறலி, பார்ப்பான் முதலியோர் தூதர்களாயிருந்து இவர்கள் ஊடலை நீக்கிக் கூடி வாழும் செய்யும் நிகழ்ச்சிகள் ஆகிய இவைகளைப் பற்றியெல்லாம் எடுத்துக் கூறுவது மருதத்திணை. மருதத் திணையின் ஒழுக்கம் ஊடல் ஆகும்."*** (தமிழறிஞர் சாமி சிதம்பரனார்; தொல்காப்பியத் தமிழர்; பக்.36-37) என்பர்.

**திருமணம்**

உழுந்தம் பருப்பு இட்டுச் சமைத்த பொங்கலுடன் மிக்க சோற்றை உறவினரும் மற்றவரும் உண்ணுகையினால் ஏற்படும் ஆரவாரம் இடையறாது கேட்கும் எனத் திருமண நிகழ்வில் ஏற்பட்ட ஆரவாரத்தினை விளக்க, **"உழுந்து"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **"உழுந்து தலைப் பெய்த கொழுங்களி மிதவை"** (அகம்; பா-86; வ-1) என்ற பாடல் உணர்த்துகின்றது.

மென்மையான பூவையுடைய வாகையின் புல்லிய புறத்தை உடைய கவர்ந்த இலையைக் கன்றால் கறிக்கப்பட்ட பள்ளமான நிலத்தில் படர்ந்த அருகம்புல்லின் மேகத்தின் முதல் பெயலால் ஈன்ற நீலமணி போன்ற இதழையுடைய பாவை போன்ற கிழங்கில் உள்ள குளிர்ந்த அரும்புடன் சேரக்கட்டிய வெண்மையான காப்பு நூலை அணிந்தனர் எனத் திருமணச் சடங்கில் ஒன்றான காப்பு அணிவித்தலை விளக்க, **"வாகை"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **"மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை"** (அகம்; பா-136; வ-10) என்ற பாடல் வழி உணரமுடிகின்றது.

**அலர்**

பொன்னாலான சிலம்பையும் நெருங்கிய தொடையையும் அழகு மிகும் மாமை நிறத்தையும் உடைய அஃதை என்பவளுக்குத் தந்தையான பெருமையுடைய யானையையும் வெல்லும் போரையும் உடைய சோழன் வெண்ணெல் விளையும் இடங்களையுடைய பருவூர்ப் பாண்டியரான இருபெரு வேந்தர்களும் போரிட்டுக் களத்தே இறந்து பட விளங்கும் வாளால் செய்யும் நல்ல போரை வென்றபோது அப்பகை மன்னர்களின் ஆண் யானைகளைக் கவர்ந்து கொண்ட சமயத்தில் உண்டான ஆரவாரத்தைப் போல் பலர் வாயிலும் அலராகின்றது எனத் தலைவன் வேறு ஒரு பரத்தையரை மணந்து கொண்டான் என்ற செய்தி அலராகப் பரவுதலை விளக்க, **"அண்ணல் யானை, வெண்ணெல், களிறு"** போன்ற கருப்பொருள்கள் கொண்டு விளக்குகின்றனர். இதனை, **"அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்; வெண்ணெல் வைப்பின் பருவூர்ப் பறந்தலை; களிறு கவர் கம்பலை போல"** (அகம்; பா-96; வரி- 13-14,17) என்ற பாடல் வழி உணர முடிகின்றது.

அகன்ற ஊரில் அழகிய பகுப்பையுடைய தழை உடையையும் சிறிய வளையலையும் உடைய மகளிர் நீர் விளையாட்டை வெறுப்பின், நீர் நிலையில் உள்ள கோரைகளைப் பறித்துக் கழனியாகிய கரந்தைக் கொடி படர்ந்த வயல்களிலே இரையைத் தேடும் நாரையை ஓட்டுவர். அத்தகைய இடமான வலிய வில் பொருந்திய வலிய தோள்களையுடைய பரதவரின் தலைவன் மத்தி என்பானின் கழார் என்னும் ஊரில்

அமைந்த துறையில் நீண்ட வெண்மையான மருத மரத்துடன் வஞ்சி மரத்தையும் சாய்த்து விடியற் காலையில் பரத்தையுடன் நேற்று தலைவன் விளையாடியதாக எழுந்தது அலர் எனத் தலைவி தோழிக்கு வாயில் மறுத்தற் பொருட்டு அலரினை விளக்க, **“கரந்தை, வெண்குருகு, மருது, வஞ்சி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **“கரந்தை அம் செறுவின் வெண்குருகு ஓப்பும்; நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய”** (அகம்; பா-226 வரி-6,9) என்று பாடல் வழி அறியலாம்.

நீரினுள் தொலைவு செல்ல இயலாமல் தலைவி ஒடுங்கியதைக் கண்ட ஒருவன் நெடுங் குளத்திலிருந்து தாமரையைப் பறித்துப் புறவிதழ் போக்கித் தந்தான். அதனைக் கண்டவர் உண்மையை உணராமல் அலர் தூற்றுகின்றனர் எனத் தலைவி தன்மேல் ஏற்பட்ட அலரினை விளக்க, **“கயமலர்”** என்ற கருப்பொருள் கொண்டு விளக்குகின்றார் ஆசிரியர். இதனை, **“நெடும் கயமலர் வாங்கி நெறித்துத்துந் தனைத்தற்கோ”** (அகம்; பா-11; வரி-11) என்ற பாடலில் விளக்குகின்றது.

பூக்களையுடைய பழமையான நிலைமையுடைய மருத மரங்கள் செறிந்திருக்கும் பெருந்துறையில் பரத்தையுடன் தலைவன் நீராடுவதைக் கண்டு அலர் தூற்றினர் ஊரார் என்பதனை விளக்க **“மருதம்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“தொன்னிலை மருதத்துப் பெருந்துறை”** (ஐ.நூறு; பா-75; வ-3) என்ற பாடல் வழி அறியலாம்.

**பரத்தையர், தலைவன் தொடர்பு**

பொரிபோல் புன்கம் பூ மலரும் அகன்ற நீர்த்துறை பொலிவுடைய ஒளி பொருந்திய நெற்றியையும் நறுமண மலர்கள் அணியப் பெற்ற காண்பதற்கு இனிய பலவாய கூந்தலையும், மா வடுவைப் போன்ற கண்ணையும், முத்து மாலை அசையும் அழகிய முகையையும் உடைய பரத்தையுடன் தலைவன் நீராடுகின்றான். இவ்வாறு தலைவன் பரத்தையுடன் நீராடுதலை விளக்க, **“புன்கம், மாவடு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை **“புன்கு அவிழ் அகன்துறைப் பொலிய ஒள் நுதல்; மாழை நோக்கின் காழ் இயல் வன முலை”** (அகம்; பா-116; வரி-6,8) என்ற பாடல் வழி அறியலாம்.

நீண்ட தேரையும் அணியை அணிந்த யானையையும் உடையவன் பாண்டியன் பழையன் மாறன் கிள்ளி வளவன் போரில் வென்றான். அவனுடைய விரைந்த செலவையுடைய குதிரைகளுடன் ஆண் யானைகள் பலவற்றையும் பற்றிக் கொண்டு வெற்றி பெற்றான். அதனைக் கண்டு கோதை மார்பன் என்ற சேரமன்னன் மகிழ்ச்சி அடைந்தான்.

அவன் மகிழ்ச்சியைவிடத் தலைவனின் பரத்தையானவள் மகிழ்ந்தாள். எனப் பரத்தையின் மகிழ்ச்சியினை விளக்க, **“யானை, புரவி, களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **“இழை அணி யானைப் பழையன் மாறன்; கடும் பரிப் புரவியொடு களிறு பல வவ்வி”** (அகம்; பா-346; வரி-19,23) என்ற பாடல் உணர்த்துகின்றது.

பரத்தமை ஒழுக்கம் மருத நிலத்தில் ஏற்படக் காரணம் அதன் நிலப்பாங்கே என்பதை உணர்த்துகின்ற சான்று பின்வருமாறு, ***“மருத நிலத்தின் மண்பாங்கே செல்வச் செழிப்பிற்கும் தலைமகனின் பரத்தமை யொழுக்கத்திற்கும் காரணமாக விளங்கியது. நாகரிகம் வளர்ச்சியுறும் போது மக்களிடம் நெகிழ்ச்சியான போக்கு தோன்றுகிறது”*** (அ. தட்சிணாமூர்த்தி; சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்; ப.111) என்று குறிப்பிடுகிறது.

தாழ்வான கிளைகளையுடைய மருதமரம் சிறக்க அழகு பெற்றிருக்கும் நீர் சூழ்ந்த களம்பொலிவு பெற உழவர் வைக்கோற் போரைப் பிரித்துக் கடாவிட்டனர். அப்பொழுது பறந்த துரும்புகள் பெரிய கடற்பரப்பில் உள்ள உப்பில் விழுந்ததால் உப்பு கெட்டது. ஆதலால் நுளையர்களும், உழவர்களும் சண்டையிட்டுக் கொண்டனர். அவர்களின் சண்டையை நரைத்த முதியவர் அவர்களது கைப் பிணிப்பை விலக்கிடும் இடத்தில் மூங்கில் போன்ற தோளுடைய பரத்தையுடன் சோலையில் தங்கி இருந்தான் எனத் தலைவன் பரத்தையுடன் தங்கியிருந்த இடத்தினை விளக்க. **“மருதம், பரதவர், உப்பு, உழவர், பணை”** போன்ற கருப்பொருள்கள் கொண்டு விளக்குகின்றனர். இதனை, **“தாழ் சினை மருதம் தகை பெறக் கவினிய; இருநீர்ப் பரப்பின் பனித் துறைப் பரதவர்; தீம்பொழி வெள் உப்புச் சிதைதலின் சினைஇ; கழனி உழவரொடுமாறு எதிர்ந்து மயங்கி; நலம் பெறு பணைத்தோள் நல் நுதல் அரிவையொடு”** (அகம்; பா-366; வரி-1,6-8,13) என்ற பாடல் வழி அறியலாம்.

பூங்கொடி போன்ற பரத்தையரின் முகைகளிடையிலே கிடந்து கலைந்த சாந்தத்துடன் பண்பின்றி வருவான் எனத் தலைவன் பரத்தையரிடம் கொண்ட உறவினை விளக்க, **“சாந்து”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. **“பாடு அழி சாந்தினன் பண்பின்றி வரின் - எல்லா,**” (கலி; பா-23; வ-11) என்ற பாடல் வழி அறியலாம்.

தலைவனின் அழகிய மார்பிலே பாடழிந்து தோன்றும் சந்தனம் தலைவனைக் காட்டிக் கொடுத்து விடுகிறது எனத் தலைவனின் பரத்தையர் உறவை விளக்க, **“சாந்தம்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது, **“மலர்மார்பின் மறுப்பட்ட சாந்தம் வந்து உரையாக்கால்”** (கலி; பா-8; வ-13) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

கலைந்து போயிருக்கும் மார்புச் சந்தனம் பூசிய தலைவன் பரத்தையரிடம் கொண்ட உறவினை விளக்க, **“சாந்து”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“தாரும் ததர்த்தப்பட்ட சாந்தமும் சேரி”** (கலி; பா-26; வ-12) என்ற பாடல் சான்று வழி உணரலாம்.

இருவகையான அழகுக்கும் ஏற்றவாறு விளங்கிய சூரபன்மனைக் கொன்ற செவ்வேலனைப் பாடிப் பலநாளும் திருப்பரங்குன்றத்தில் தலைவனோடு பரத்தையானவள் இருந்தாள் என்பதனை விளக்க, **“செவ்வேலன்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளதை, **“சூர் கொண்ட செவ்வேலன் பாடிப் பல நாளும்”** (கலி; பா-28;வ-26) என்ற பாடல் வழி உணரலாம்.

தலைவன் பரத்தையரின் திரண்ட கொங்கைகளால் சாடப்பட்ட சந்தனத்தை உடையவனாக இருக்கின்றாய் எனத் தலைவன் பரத்தையுடன் கொண்ட தொடர்பினை விளக்க, **“சாந்து”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது, **“சாடிய சாந்தினை, வாடிய கோதையை”** (நற்; பா-350; வ-8) என்ற பாடல் விளக்குகின்றது.

**தழையாடை**

வீட்டில் உள்ள மரத்தின் மீது படரும் வயலைக் கொடியை மலர்களையுடைய ஆம்பற் கொடியுடன் கட்டித் தழையாடையை அணிந்தனர். எனத் தழையாடை அணிவதற்குப் பயன்படுத்தப்பட்டதாக, **“ஆம்பல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளதை. **“அரிமலர் ஆம்பலொடு ஆர்தழை தைஇ”** (அகம்; பா-176;வ-14) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**தலைவியின் வருத்தம்**

உளைபோன்ற தலைமயிரை உடைய மகனைப் பெற்று நெல்லுடைய பெரிய இல்லத்தில் தலைவனைப் பிரிந்து தலைவி வேதனைப்படுகின்றாள் எனத் தலைவியின் நிலை, **“நெல்”** என்ற கருப்பொருள் மூலம் விளக்கப்படுகின்றதை, **“நெல்லுடை நெடுநகர் நின் இன்று உறைய”** (அகம்; பா-176;வ-20) என்ற பாடல் வழி அறியலாம்.

குவளை மலர் போன்ற கண்களையுடைய இவளும் யானும் வயலில் மலர்ந்த இதழ் ஒடியாத ஆம்பல் மலருடன் கூடிய பசிய தழையாகிய ஆடை எம் உடலில் வருத்துமாறு, ஞாயிறு தோறும் விடியற்காலத்தில் விளையாடி மகிழ்வோம். அங்கு உன்னைக் கண்டு நின்னுடன் நகைத்து உரையாடிய பிழை செய்ததால் தலைவிக்கு நோய் ஏற்பட்டது எனத் தலைவியின் நிலையை விளக்க, **“குவளை, ஆம்பல்”** போன்ற கருப்பொருள்கள் மூலம்

விளக்கப்படுகின்றன என்பதை, **“குவளை உண்கண் இவளும் யானும்; கழனி ஆம்பல் முழுநெறிப் பைந்தழை”** (அகம்; பா-156; வரி-8-9) என்ற வரிகள் விளக்குகின்றன.

தலைவனை நினைத்துத் தலைவியின் கண்கள் கலக்கத்தை அடைந்து மழையால் நனைந்த குவளைமலர் போல் நீரைச் சொரிகின்றன எனத் தலைவியின் கண்கள் வருத்தமடைவதை விளக்க, **“குவளை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“மாரி மலரில் கண்பனி உகுமே”** (ஐ.நூறு; பா-19; வ-5) என்ற பாடல் விளக்குகின்றது.

பொய்கையில் மலர்ந்த ஆம்பலின் நார் உரிக்கப்பட்ட மெல்லிய தண்டினும் மிக ஒளிர்தலைச் செய்கின்ற தலைவியின் மாமை நிறம் கெட்டுப் பசலை உண்டாகியது எனத் தலைவியின் உடலில் பசலை ஏற்பட்டு விட்டதனை விளக்க, **“ஆம்பல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“பொய்கை ஆம்பல் நார்உரி மென்கால்”** (ஐ.நூறு; பா-35; வ-2) என்ற பாடல் தெளிவாக்குகின்றது.

ஊரனான காதலன் மறந்து உறைவானானால் கயல் போன்ற மை பூசிய கண்கள் பசலை அடையும் எனத் தலைவியின் கண்கள் வருத்தமடைந்ததை விளக்க **“ஊரன், கயல்”** போன்றவைப் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **“அம்ம வாழி தோழி! ஊரன்; கயலெனக் கருதிய உண்கண்”** (ஐ.நூறு; பா-36; வரி-1,4) என்ற பாடல் வழி உணரலாம்.

புதல்வனின் செம்மணி போன்ற அவன் செவ்வாய் நீர் உன்னுடைய அகன்ற மார்பகத்தை நனைப்பதனால் அதில் கமழும் சாந்தம் கலைதலுங் கூடும். அதனால் கலைந்த உன் சாந்துடைய மணத்தால், உன்னோடு தழுவினாரை யான் அறிவேன் என அடையாளம் வைத்து தலைவனை அனுப்பிவிட்டுப் பின் தலைவி வருத்தம் அடைவாள் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“சாந்து”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“சாந்தினால் குறிகொண்டாள் சாய்குவள் அல்லளோ?”** (கலி; பா-14; வ-10) என்ற பாடல் வழி எடுத்துக்காட்டப்படுகின்றது.

வேய் போன்ற நலம் இழந்து தோள்களின் அழகு கெடுமாறு வருந்துகின்றாள் தலைவி எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“வேய்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“வேய் நலம் இழந்ததோள் கவின் வாட இழப்பாளை”** (கலி; பா-34; வ-16) என்ற பாடல் வழி அறியலாம்.

பலவிதழ்களையுடைய நீலமலர் போன்றது தலைவியின் மையுண்ட கண்கள் நீர் மல்கக் காண்கின்றான் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“நீலமலர்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“பல் இதழ் மலர் உண்கண் பனிமல்கக் காணுங்கால்”** (கலி; பா-35; வ-10) என்ற வரியில் அறிய முடிகின்றது.

மலையிலுள்ள மூங்கில் போன்ற நல்ல தோள்கள் வாடி அழகு தொலைகின்றது எனத் தலைவியின் வாடுதலை விளக்க. **“வேய்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளதை, **“வரை வேய் புரையும் நல் தோள்”** (நற்; பா-390; வ-10) என்ற பாடல் வழி அறியலாம்.

**தலைவனின் சூள்**

ஆரவாரத்தை அஞ்சிப் பறந்து போன மயில் தெய்வத்தையுடைய குன்றில் வந்து தங்கும் இயல்புடைய அழகிய மணிவிளக்கு ஒளிரும் திருச்சீரலை வாயிலில் வீற்றிருக்கின்ற முருகப் பெருமானுடன் ஏற்படுத்திய சூள் தலைவன் செய்த சூளே பெரிதும் துன்பத்தைத் தருகின்றது எனத் தலைவன் சூளுரைப்பதை விளக்க, **“தோகை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“கறங்கு இசை வெரீஇப் பறந்த தோகை”** (அகம்; பா-266;வ-18) என்ற பாடல் வழி உணர்த்தப்படுகின்றது.

மகிழ்நன் வளைந்து முதிர்ந்த மருத மரங்கள் நிறைந்திருக்கின்ற பெருந்துறையில் தன் உடன் ஆடும் ஆயத்தார் அறிய இனிப்புற ஒழுக்கத்தைப் பரத்தமையை விரும்பேன் என சூளுரைத்தான். இவ்வாறு தலைவன் உரைத்த சூளிற்கான இடத்தினை விளக்க. **“மகிழ்நன், மருதம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **“அம்ம வாழி தோழி! மகிழ்நன்; முடமுதிர் மருதத்துப் பெருந்துறை“** (ஐ.நூறு; பா-31; வரி-1,3) என்ற பாடல் எடுத்துக் காட்டுகின்றது.

**நீரின் மாற்றம்**

தலைவி நீரில் புகுந்ததால் அது தேன் பொருந்திய நறுமணம் உடைய குவளையின் மணம் கமழ்ந்து குளிர்ந்ததாக ஆயிற்று என நீரின் மாற்றத்தினை விளக்க. **“குவளை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“கண்ணறுங் குவளை நாறித்”** (ஐ.நூறு; பா-73; வ-3) என்ற பாடலடி உணர்த்துகின்றது.

சங்க காலத்தில் நீரின் முக்கியத்துவம் மேம்பாடுடையதாக இருந்தது. ***“மனிதன் நிலத்தை உழுது தானியங்களை உண்டாக்கவும் ஆறுகளிலிருந்து வயல்களுக்கு நீர்ப்பாய்ச்சவும் பழகிக் கொண்டான். வெள்ளத்தை இவ்வகையாக ஆண்டமையின் இவனுக்கு வேளாளன் என்னும் பெயர் ஏற்பட்டது”*** (ந.சி. கந்தையா பிள்ளை; தமிழர்சரித்திரம்; ப.53) என்பர்.

**விருந்தினர் வருகை**

பரந்த கழுத்து மயிரும் மனச் செருக்கும் உடைய குதிரை பூட்டிய தேரில் விருந்தினர் வந்தனர் என விருந்தினர் வருகையினை விளக்க,**“கலிமான்”**என்ற கருப்பொருள்

பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“விரிஉளைக் கலிமான் தேரொடு வந்த”** (கலி; பா-10; வ-16) என்ற பாடல் வெளிக்காட்டுகின்றது.

**தலைவியின் ஊர்**

முடங்கிய கொம்புகளை உடைய எருமையின் கரிய பெரிய ஆண் மணமுற்ற பூக்கள் நிறைந்த பொய்கையில் உள்ள ஆம்பலைச் சிதைக்கும் கழனிகளை உடைய ஊரனுக்கு மகள் தலைவி எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“எருமை, ஆம்பல், ஊரன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையை, **“நெறிமருப் பெருமை நீல இரும்போத்து; வெறி மலர்ப் பொய்கை ஆம்பல் மயக்கும்; கழனி ஊரன் மகளிவள்”** (ஐ.நூறு; பா-91; வரி-1-3) என்ற பாடல் வழி அறியலாம்.

பெரிய கொம்பையும் சிவந்த கண்ணையும் ஈன்ற அணிமையையும், உடையதாய் எருமை தன் அன்புடைய கன்றுக்குச் சுரக்கும் முலை தந்து பாலூட்டும் ஊர், தலைவியின் தந்தையின் ஊராகும் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“எருமை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்றா”** (ஐ.நூறு; பா-92; வ-1) என்ற பாடல் உணர்த்துகின்றது.

அழகு பொருந்திய ஒளி வீசும் நெற்றியை உடையவளுக்குத் தந்தையின் கழனியில் தாமரை மலரும் ஊர் வீரர் போன்ற பெருங்கொம்பையுடைய எருமை அவர்தம் மகளிர் போன்ற துணையான பெண்ணெருமையுடன் தங்கும் நிழல் பொருந்திய நீர்நிலைக்கு அருகில் உள்ளது தலைவியின் ஊராகும் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“தாமரை, எருமை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை, **“மள்ளரன்ன தடங்கோட் டெருமை; கழனித் தாமரை மலரும்”** (ஐ.நூறு; பா-94; வரி-1,4) என்ற பாடல் உணர்த்துகின்றது.

அழகிய நடையை உடைய எருமை உழக்கிய சேற்றில் நீல மணியின் நிறத்தையுடைய நெய்தலும், ஆம்பலும் தழைத்து வளர்கின்ற தன்மையுடைய ஊரனுக்கு மகள் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“எருமை, நெய்தல், ஆம்பல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“அணி நடை எருமை ஆடிய அள்ளல்; மணி நிற நெய்தல் ஆம்பலொடு கலிக்கும்; கழனி ஊரன் மகள் இவள்”** (ஐ.நூறு; பா-96; வரி-1-3) என்ற பாடல் வழி அறியலாம்.

பகன்றையின் வெண்மையான மலரைப் பொருந்திய கரிய தாள்களையுடைய எருமையின் கொம்பைப் பார்த்து அதன் கன்று அஞ்சும் பொய்கை ஊரன் எனத்

தலைவியின் ஊரினை விளக்க, **“பகன்றை, எருமை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“பகன்றை வான்மலர் மிடைந்த கோட்டைக்; கருந்தாள் எருமைக் கன்று வெரூஉம்”** (ஐ.நூறு; பா-97; வரி-1-2) என்ற பாடல் வழி உணரலாம்.

பழனங்களில் உள்ள பாகல் இலையில் முயிறு என்னும் எரும்புகள் கூடு அமைத்து முட்டையிட்டு நெருங்கி வாழும் அக்கூடுகளைக் கழனிகள் மேயும் எருமைகள் நெற்கதிர்களுடன் சேரன் சிதைக்கும் மலர்கள் நிறைந்த ஊரனுக்கு மகள், எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“எருமை, நெல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளமை, **“பழனப் பாகல் முயிறு மூசு இடம்பை; கழனி எருமை கதிரொடு மயக்கும்”** (ஐ.நூறு; பா-99; வரி-1-2) என்ற பாடல் வழி அறியலாம்.

நீரில் ஆடிய மகளிர் களைந்து வைத்த அணிகள் மணலில் மறைந்தவற்றை அம்மணற் குன்றின் மேல்நின்று எருமைகள் தம் கொம்புகளாலும், குளம்பினாலும் கிளைத்து வெளிப்படுத்தும் புது வருவாயை உடைய ஊரனின் மகள் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“எருமை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“மணலாடு சிமையத்தெருமை கிளைக்கும்”** (ஐ.நூறு; பா-100;வ-2) என்ற பாடல் வழி அறியலாம்.

**உணவு**

நீ இரவில் கண்ணுறங்காது குளிர்ச்சியாய்ப் புலரும் விடியற் காலையிலே எழுந்து கரிய கண்ணையுடைய வரால்மீனின் பெரிய தகையச் சமைத்த குழம்போடு சேர்த்து உணவுக்குரிய அரிசியால் ஆக்கிய பொலிவுள்ள பெரிய சோற்றுத் திரள்களை உண்ணுவான் எனத் தலைவனின் உணவினை விளக்க, **“வராஅல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“கருங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வை யொடு”** (நற்; பா-60; வ-4) என்ற பாடல் வழி அறியமுடிகின்றது.

உணவை விளக்கும் வரிகள், உணவின் முக்கியத்துவத்தை விளக்கும் வரிகள் பின்வருமாறு,***“வாய் வழியாக உட்கொள்ளப்பட்டு உயிர் வாழ்வதற்கும் உடல் நலத்திற்கும் தீங்கு விளைவிக்காத இன்றியமையாத பொருளாக அமைவதே உணவென்று தெரியலாம்”*** (சே. நமச்சிவாயம்; தமிழர் உணவு; ப-1) என்பர்.

**ஊசல்**

கரிய பனை நாரினாலே திரித்த பெரிய கயிற்றால் பிணித்துத் தொங்கவிட்ட ஊசல் என்று ஊசலினை விளக்க, **“பனை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது, **“பெருங்கயிறு நாலும் இரும்பனம் பிணையல்”** (நற்; பா-90; வ-6) என்ற பாடல் வரி உணர்த்துகின்றது.

**குயவன்**

அரும்பு கட்டிய கதிர்போன்ற ஒள்ளிய பூங்கொத்தையுடையது நொச்சி. அந்த நொச்சியால் ஆக்கிய மாலையைத் தரித்துள்ளவன் குயவன் எனக் குயவனைப் பற்றி விளக்க, **“நொச்சி”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“ஒண் குரல் நொச்சித் தெரியல் சூடி”** (நற்; பா-200; வ-2) என்ற பாடல் வழி அறிய முடிகின்றது.

**தோழி கூற்று**

ஆம்பல் நெருங்கிய இனிய பெரிய மருத நிலத்தில் பொய்கையுள்ள ஊர்க்குப் போய் சேர்ந்து அங்குள்ள மகளிரைப் பார்த்துப் பாணனுடைய துன்பங்கள் பெருகின. இவனுடைய பொய்யான கொடிய சொற்களைக் கேளாமல் இருங்கள் எனக் கூறுமாறு குயவனிடம் உரைக்கின்றாள் தோழி. இவ்வாறு தோழி கூற்றினை விளக்க, **“ஆம்பல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளதை, **“ஆம்பல் அமன்ற தீம் பெரும் பழனத்து”** (நற்; பா-200;வ-6) என்ற பாடல் உணர்த்துகின்றது.

**பரண்**

தீப்போன்ற பூவுடைய வேங்கை மரத்தைத் தெய்வம் காக்கு மிடத்தில் பறவை நிறைந்த வயலில் அமைந்துள்ளது பரண் எனப் பரண் அமைந்துள்ள இடத்தினை விளக்க, **“வேங்கை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டள்ளதை, **“ஆம்பல் அமன்ற தீம் பெரும் பழனத்து”** (நற்; பா-216; வ-6) என்ற பாடல் உணர்த்துகின்றது.

## தொகுப்புரை

சங்க அக இலக்கியங்களில் மருதத் திணைப் பாடல்களில் காணப்படும் கருப்பொருள்களைப் பின்புலமாகக் கொண்டு தலைவனின் ஊர், தலைவியின் அழகு நலம், உவமைகள், தலைவனின் சிறப்பு, மாலைக்காலம், பரத்தையின் ஊர், தலைவியின் ஊர், தலைவன் அணிந்தது, வரலாற்றுச் செய்திகள், அஞ்சி, சேந்தன், அதிகன் போன்ற மன்னர்களின் செய்திகளைப் பற்றியும், தொண்டிப்பட்டினம், கள்ளூர் போன்ற நாடுகளின் வரலாற்றினையும் விளக்குகின்ற வகையில் புலப்படுத்தப்பட்டுள்ளன. தலைவியின் அன்பு,பகற்குறியிடம், வைகறை, பரத்தையின் அழகுநலம், தலைவன் செயல், மகனின் அழகுநலம் மற்றும் செயல், தலைவன் தலைவியின் கூடல், சோலையின் அழகு, பாணனின் செயல், திருமணம், அலர், பரத்தையர், தலைவன் தொடர்பு, தழையாடை, தலைவியின் வருத்தம், தலைவனின் சூள், விருந்தினர் வருகை, நீரின் மாற்றம், தலைவியின் ஊர், உணவு, ஊசல்,குயவன், தோழி கூற்று, பரண் போன்ற செய்திகள் சங்க இலக்கியப்பாடல்களின் வழி கருப்பொருள்களைப் பின்புலமாகக் கொண்டு புலப்படுத்தப்படுகின்றன என்பதை அறியமுடிகின்றது.

## இயல் 4

## நெய்தல்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத்திறன்.

### நெய்தல் திணை

நெய்தல் நிலத்திலே நடைபெறும் ஒழுக்கத்தைப் பற்றிக் கூறுவது நெய்தல் திணை. கடற்கரையும் கடற் கரையைச் சேர்ந்த இடங்களும் நெய்தல் நிலம். நெய்தல் நிலத்திற்குத் தெய்வம் வருணன், **'வருணன் மேய பெருமணல் உலகமும்'** என்பது தொல்காப்பியம் ஆகும்.

காதலன் பிரிவை எண்ணிக் காதலி மனம் வருந்துதலும் தன் உள்ளத்துயரத்தை வாய்விட்டு உரைப்பதும் நெய்தல் ஒழுக்கம். இதற்கான காரணங்களைக் கூறுவதும் நெய்தல் திணையே. இரங்கல் என்னும் செய்தியே நெய்தல் ஒழுக்கம். இத்தகைய நெய்தல் திணையில் உள்ள 14 கருப்பொருட்களைக் கொண்டு பல்வேறு செய்திகள் புலப்படுத்தப்படுகின்றன. அவற்றை விளக்கும் நோக்கில் அமைவதே இவ்இயலாகும்.

### தலைவனின் தேர்

நீண்ட கொடிகளையுடைய பசுமையான அடப்பங்கொடி சிதையும்படி நெய்தல் நிலப்பகுதியைச் சிதைத்துக் கொண்டு வருகிறது. இவ்வாறு தலைவனின் தேரினை விளக்க, **“நெய்தல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“நெய்தல் மயக்கி வந்தன்று நின்மகள்”** (ஐ.நூறு; பா- 101; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

பெரிய கழியில் பாய்ந்து போகும் குதிரைகள் பூட்டப்பட்ட நீண்ட தேரையுடைய தலைவன் எனத் தலைவனின் தேரினை விளக்க, **“பாய்பரி”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“காண்மதி பாண! இருங்கழிப் பாய்பரி”** (ஐ.நூறு; பா-134; வ-1) என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது.

தலைவியின் திங்கள் போன்ற ஒளியுடைய முக நலம் பொலிவு பெறுமாறு செய்ய தலைவனது தேர் குதிரையைப் பூணுகின்றது எனத் தலைவனின் தேரினை விளக்க, **“குதிரை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“புது நலம் ஏர்தர, பூண்க நின் தேரே”** (கலி; பா-126; வ-27) என்ற பாடல் வரி பயன்படுத்தப் பட்டுள்ளது.

உயர்ந்தெழும் அலைகளையுடைய கடலின் குளிர்ந்த துறைகளைக் கொண்ட சேர்ப்பனது ஓடும் தேரின் நுண்ணிய நுகத்திற் பூட்டிய குதிரைகள், எனத் தலைவனின் தேரினை விளக்க, **“சேர்ப்பன், குதிரை”** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இதனை, **“நீடு நீர்ப் பனித் துறைச் சேர்ப்பன்; ஓடு தேர் நுண் நுகம் நுழைத்த மாவே”** (நற்; பா-58; வரி-9-10) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

சிறிய நாவுடைய ஒள்ளிய மணியின் தெளிந்த ஓசையைப் போலக் கூட்டமான மீனைத் தின்ன வந்து கூடும் பறவை ஒலிக்கும் குரலைக் கேட்டுத் தலைவன் தேரின் மணியொலி எனக் கருதி இதோ தலைவன் என்று சொல்லுமுன் வலிய குதிரையைக் கொண்ட தேரில் வந்து நின்றான் எனத் தலைவனின் தேரில் வருவதனை விளக்க, **“மீன், குதிரை”** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“இனமீன் ஆர்கை ஈண்டு புள் ஒலிக்குரல், வயமான்; தோன்றல் வந்து நின்றனனே”** (நற்; பா-267; வரி-10-12) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கரிய கிளைகளையுடைய புன்னை மர மலரிலுள்ள தேனை அருந்திக் களிப்புடைய கரிய வண்டுகள் ஒலிக்க, தலைவனின் நெடுந்தேரின் ஒலி கேட்டலோ அரிதாய் உள்ளது எனத் தலைவனின் தேரினை விளக்க, **“புன்னை, தேன்”** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“கருங்கோட்டுப் புன்னை மலர்த்தாது அருந்தி”** (நற்; பா-311; வ-9) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

புலியின் வரிபோன்ற மணல் மேட்டில் இருக்கும் புன்னை மரம் உதிர்ந்த தாது நிரம்பிய பூக்களில் தேன் எடுக்க ஊதும் ஆண், பெண் வண்டுகள் முரலும் இனிய ஓசை மிக்கு ஒலிப்பதால், தலைவனின் தேர் ஓசையைக் கேட்டு அறிய முடியாது எனத் தலைவனின் தேர் ஓசையினை விளக்க, **“புலி, புன்னை, தேன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“புலி வரிபு எக்கர்ப் புன்னை உதிர்ந்த; மலி தாது ஊதும் தேனொடு ஒன்றி”** (நற்; பா-323; வரி-7-8) என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**தலைவனின் ஊர்**

நீண்ட கால்களைக் கொண்ட நாரை செறிந்த மூட்டு வாயையுடைய கொம்பைப் போல் ஒலித்துப் பனைமரத்தின் மடலில் தங்கும் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“நாரை, பனை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை; செறிமடை வயிரின் பிளிற்றி பெண்ணை”** (அகம்; பா-40; வரி-14-15) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

அயிலை மீனைப் பலர்க்கும் பகுத்துக் கொடுத்து மகிழும், கடல் துறையையுடைய தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“அயிலை மீன்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“கொழுங் கண் அயிலை பகுக்கும் துறைவன்”** (அகம்; பா-70; வ-4) என்பதாகும்.

நெய்தல் பூவின் இதழ் நறுமணத்தை அமிழ்தம் என்று விரும்பிச் சென்று மகரந்தத்தை உண்ட வண்டின் கூட்டம் களிப்பு மிகுதியால் பறப்பதற்கு இயலாது தளரும் துறையை உடையவன் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“நெய்தல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தல்”** (அகம்; பா-170; வ-4) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

புன்னையுடன் ஞாழலும் பூக்கின்ற குளிர்ந்த அழகிய துறைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“புன்னை, ஞாழல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“அன்னை வாழி வேண்டன்னை புன்னையொடு; ஞாழல் பூக்கும் தண்ணந் துறைவன்”** (ஐ.நூறு; பா-103; வரி-1-2) என்பவையாகும்.

நீர்க் கழியில் உள்ளனவாகிய முள்ளிகள் மலர்ந்து காணப்படுகின்ற கடல் சேர்ப்பன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“முண்டகம்”** என்ற மலர் கருப்பொருளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“முண்டக மலரும் தண்கடற் சேர்ப்பன்”** (ஐ.நூறு; பா-108; வ-2) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

நெய்தலின் நீர்க்குள் படர்ந்து ஓடிப்பூக்கும் கொடியினுடைய மலர்கள் பொருந்திய துறைவனான தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“நெய்தல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அன்னை வாழி வேண்டன்னை நெய்தல்”** (ஐ.நூறு; பா-109; வ-1) என்ற வரி விளக்குகின்றது.

‘நெய்தல்’ என்ற கருப்பொருள் தலைவனின் நிலமான நெய்தல் நிலத்தை விளக்க அடிப்படையாக அமைகின்றது என்பதை உணர்த்தும் சான்று பின்வருமாறு, ***“கருப்பொருள் என்பது தொல்காப்பியரின் நிலக் கோட்பாட்டையும், சங்க கால மக்களின் நிலம் சார் வாழ்வியலை அடையாளப் படுத்தவும் பேருதவியாக இருக்கும்”*** (சு.அரங்கநாதன்; சங்க கால மக்களின் நிலம் சார் வாழ்வியல் அடையாளங்கள் ஒப்பீடு; ப-28) என்பதாகும்.

புன்னையின் பொன்நிறம் உடைய மலர்கள் எங்கும் பரந்து உதிர்ந்து கிடக்கும் துறையை உடையவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“புன்னை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அன்னை வாழி வேண்டன்னை புன்னை”** (ஐ.நூறு; பா-110; வ-1) என்ற வரி விளக்குகின்றது.

சினையுடன் கூடிய கயல் மீன்களைப் பாணன் தூண்டிற் கயிற்றால் இரை கொள்ளுமாறு செய்து பிடிக்கும் துறைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“கயல்”**

என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“சினைக் கயல் மாய்க்கும் துறைவன் கேண்மை”** (ஐ.நூறு; பா-111; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

பசுமையான இலைகளை உடைய செருந்தி மரத்தின் கிளைகள் பரவிய பெரிய கழியையுடைய சேர்ப்பன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“செருந்தி, சேர்ப்பன்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“செருந்தி தாய இருங்கழிச் சேர்ப்பன்”** (ஐ.நூறு; பா-112; வ-2) என்பதாகும்.

***“நெய்தல் நில மக்களைக் குறிக்கும் பெயர்கள்***

| | | | |
|---|---|---|---|
| ***நெய்தல்*** | ***நுளையர் - நுளைச்சியர்*** | ***கொண்கன்*** | |
| | ***திமிலர் - திமிலியர்*** | ***துறைவன்*** | ***பரத்தி*** |
| | ***பரதவர் - பரத்தியர்*** | ***சேர்ப்பன்*** | |

(புலவர் குழந்தை; தொல்காப்பியர் காலத் தமிழர்; ப-112).

புன்னை மரத்தின் அழகிய மலர்கள் துறைதோறும் படிந்து கோலம் செய்யும் தெளிந்த நீரை உடைய சேர்ப்பன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“புன்னை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“இன்னதாகுதல் கொடிதே; புன்னை”** (ஐ.நூறு; பா-117; வ-2) என்ற வரியானது விளக்குகின்றது.

எக்கரில் நின்ற ஞாழலின் தாழ்ந்த மலர்க் கொத்துக்கள் பொருந்திய சினையில் பறவைகள் வந்து தங்கும் துறையையுடைய தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“ஞாழல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“எக்கர் ஞாழல் இறங்கு இணர்ப் படுசினை”** (ஐ.நூறு; பா-142; வ-1) என்ற வரியானது விளக்குகின்றது.

மணல் மேட்டில் உள்ள ஞாழலின் அரும்பு முற்றி மலர்ந்த மலர்க் கொத்துக்கள் நறுமணம் கமழும் துறைவன், எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“ஞாழல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“எக்கர் ஞாழல் அரும்பு முதிர் அவிழ் இணர்”** (ஐ.நூறு; பா-146; வ-1) என்ற வரி விளக்குகின்றது.

வெள்ளாங்குருகின் குஞ்சினைத் தன் பார்ப்பு என்று எண்ணி அதைப் பார்ப்பதற்குச் சென்ற மடப்பம் பொருந்திய நடையையுடைய நாரை தன் காலால் மிதிப்ப அதன் காரணமாக இதழ் விரியப் பெற்ற கண்ணைப் போலும் நெய்தல் மலர்கள் தேன் மணம் வீசுதல் குறையாத துறைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“குருகு, நாரை, நெய்தல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்குகின்ற

பாடல் வரிகள், **“வெள்ளைக் குருகின் பிள்ளை செத்தெனக்; காணிய சென்ற மடநரை நாரை; மிதிப்ப தக்க கண்போல் நெய்தல்”** (ஐ.நூறு; பா-151; வரி-1-3) என்பதாகும்.

பெரிய கடற்கரையில் உள்ளதான சிறுவெண்காக்கை நீந்தும் அளவு பெருகிய நீரையுடைய பெரிய கரையில் இரையான சிறு மீன்களை நாடியுண்டு மலர்கள் மணம் கமழும் சோலையில் தங்கும் துறைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“சிறுவெண் காக்கை, புன்னை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகளாவன, **“பெருங்கடற்கரையது சிறுவெண் காக்கை; கருங்கோட்டுப் புன்னைத் தங்குந் துறைவற்குப்”** (ஐ.நூறு; பா-161; வரி-1-2) என்பனவாகும்.

பெரிய கடற்கரையில் வாழும் சிறுவெண்காக்கை பொன்போலும் மலர்க் கொத்துக்களை உடைய ஞாழலை வெறுத்தால் அரும்பு அவிழும் புன்னையின் பெரிய கிளையில் தங்கும் துறைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“சிறுவெண்காக்கை, ஞாழல், புன்னை”** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்குகின்ற வரிகள், **“பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை; பொன்னிணர் ஞாழல் முனையின் பொதியவிழ்; புன்னையம் பூஞ்சினைச் சேக்குந் துறைவன்”** (ஐ.நூறு; பா-169; வரி-1-3) என்பவையாகும்.

நெய்தல் மலரைப் போன்ற கண்களை உடைய இள மகளிர் குவிந்த வெண் மணலில் குரவைக் கூத்தாடும் துறை பொருந்திய கொண்கன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“நெய்தல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“நெய்தல் உண்கண் நேர் இறைப் பணைத்தோள்”** (ஐ.நூறு; பா-181; வ-1) என்ற வரி விளக்குகின்றது.

நெய்தல் நிலத்தில் உள்ள பெரிய கழியில் மலர்ந்த நெய்தலை நீக்கி, அதன் அருகில் மேயும் மீனை உண்ணும் குருகுப் பறவை தன் இனத்துடன் கூடிக் கானலில் தங்கும் கடலால் அழகு பெற்று உள்ளது தலைவனின் ஊர் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“நெய்தல், மீன், குருகு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“நெய்தல் இருங்கழி நெய்தல் நீக்கி; மீனுண் குருகு இளங்கானல் அல்கும்”** (ஐ.நூறு; பா-184; வரி-1-2) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நாரையின் நல்ல கூட்டத்தைப் போன்ற மகளிர் நீர் ஒழுகும் கூந்தலை உலர்த்தும் நீர் மிக்குள்ள உப்பங்கழிகளில் நெய்தல்கள் நீர்த்துளிகளைச் சொரியும் துறைவனே எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“நாரை, நெய்தல்”** போன்ற கருப்பொருட்கள்

பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நாரை நல்லினங் கடுப்ப மகளிர்; பொங்குகழி நெய்தல் உறைப்ப இத்துறை”** (ஐ.நூறு; பா-186; வரி-1,3) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

புன்னை மலரின் நுண்மையான துகள் படிந்து கிடக்கும் நெய்தல் மலர் பொன்னிடை வைக்கப்பட்ட நீலமணி போல விளங்கித் தோன்றும் மென்மையான கடற்கரையை உடையவன் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“புன்னை, நெய்தல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“புன்னை நுண்தாது உறைத்தரு நெய்தல்”** (ஐ.நூறு; பா-189; வ-1) என்பதாகும்.

வெண்மையான நெல்லை அரியும் உழவர் நெய்தலின் குறுக்கவிழ்ந்த அழகிய பூவை விலக்கி நெற்பயிரையே அறுக்கும் மென்மையான கடற்கரையை உடையவன் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“நெய்தல், வெண்ணெல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை விளக்கும் பாடல் வரிகள், **“தண்ணறு நெய்தல் தளைய விழ்வான் பூ; வெண்ணெல் அரிநர் மாற்றினர் அறுக்கும்”** (ஐ.நூறு; பா-190; வரி-1-2) என்பதாகும்.

கொத்தையுடைய ஞாழற்பூவும், புன்னைப்பூவும், கட்டவிழ்ந்த தாழம் பூவும் கட்டவிழ்ந்த மலர்களை உடைய செருந்திப்பூவும் வரிகளையுடைய மிஞிறு சிறிதே ஒலித்து மிகவும் ஆரவாரம் செய்யக் கருநிறத் தும்பிகள் தமக்குள் ஒன்று கூடித் தேனை அருந்தச் சூழ்ந்து கிடக்கும் நீர்த்துறையை உடையவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“ஞாழல், புன்னை, தாழம்பூ, செருந்தி, தேன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகளாவன, **“தெரி இணர் ஞாழலும், தேம் கமழ் புன்னையும்; புரி அவிழ் பூவின கைதையும் செருந்தியும்”** (கலி; பா-127; வரி-1-2) என்பனவாகும்.

திரண்ட இடுமணலில் குவளை எனக் கூறுப்படுபவை வருந்த அவற்றைத் தம்மில் பிணங்கி வரும் கடுமையுடைய பெரிய அலைகள் வந்து அம்மணலைக் கரைத்து அருள் செய்கின்ற துறையை உடையவன் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“காவி”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“கணம் கொள் இடு மணல் காவி வருந்த”** (கலி; பா-131; வ-37) என்ற வரியானது விளக்குகின்றது.

கழிமுள்ளியும் தில்லையும் உடைய கடற்கரைச் சோலை. அதில் மணல் மேடு அங்கு தட்சிணாமூர்த்தி ஆலமரத்தின் கீழ் அமரத் தாம் தம் முன்பு வைத்த குண்டிகை போல் தாழையின் பழம் தொங்குகிறது. அத்தாழையின் மலர் மலர்ந்தாற் போல் குருகு இனம் தங்குகின்றது. இத்தகைய துறையை உடையவன் தலைவன் எனத் தலைவனின்

ஊரினை விளக்க, **“கழிமுள்ளி, தில்லை, தட்சிணாமூர்த்தி, ஆலமரம், தாழை, குருகு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகளாவன, **“மா மலர் முண்டகம் தில்லையோடு ஒருங்கு உடன்; நீர் மலி கரகம் போல் பழம் தூங்கு முடத் தாழை”** (கலி; பா-133; வரி-1,4) என்பதாகும்.

வரிசையான திமில்கள் யானைகளாகவும் அலையின் ஒலி முரசமாகவும் இனத்தையும் அழகையும் உடைய கடலைச் சேர்ந்த நிலத்தை உடையவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“களிறு”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“திரை திமில் களிறாக திரை ஒலி பறையாக”** (கலி; பா-149; வ-1) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

குருகுகள் உறங்குவதற்குக் காரணமாகிய இனிய நிழலையுடைய புன்னை மரத்தையும், மெல்லிய கடற்கரையும் உடைய தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“குருகு, புன்னை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“வதி குருகு உறங்கும் இன் நிழற் புன்னை”** (குறுந்; பா-5; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

தாது முதிர்ந்த முள்ளிச் செடியை உடைய கடற்கரையின் தலைவன், எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“முண்டகம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை விளக்க, **“அணிற் பல் அன்ன கொங்கு முதிர் முண்டகத்து”** (குறுந்; பா-49; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மாரிக்காலத்து ஆம்பல் மலரைப் போன்ற தோற்றத்தையுடைய கொக்கினது பார்வையைக் கண்டு அஞ்சிய ஈரமான உடல் உடைய நண்டு தாழை வேரினிடையே உள்ள வளைக்குள் செல்லும் பொருட்டு இடையரால் கட்டப்பெற்ற கயிற்றை அறுத்துச் செல்லும் எருதைப் போல விரைந்து செல்லுதற்கு இடமாகிய கடல்துறையை உடைய தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“ஆம்பல், கொக்கு, நண்டு, தாழை, எருத்து”** போன்ற கருப்பொருள்கள் கொண்டு விளக்கப்படுகின்றன. இதனை விளக்க, **“மாரி ஆம்பல் அன்ன கொக்கின்; பார்வல் அஞ்சிய பருவரல் ஈர் ஞெண்டு; கண்டல் வேர் அளைச் செவீஇயர் அண்டர், கயிறு அரி எருத்தின் கதழும் துறைவன்”** (குறுந்; பா-117; வரி-1-4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

செவ்வியை உடைய தேனை விரும்பிப் பறத்தலைச் சேர்ந்த பல வண்டுக்கூட்டங்கள் அலைகள் மோதிய செறிந்த மணல் கரையிடத்துள்ள அரும்புகள் நிறைந்த புன்னை மரத்தினது பெரிய கிளையினிடத்து வந்து கூடுகின்ற மலர்ந்த மலர்களையும் கரிய

நீரையும் உடைய கடற்கரைத் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“தேன், புன்னை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“பருவத்தேன் நசைஇப் பல்பறைத் தொழுதி; நனைந்த புன்னை மாச்சினை தொகூஉம்”** (குறுந்; பா-175; வரி-1,3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

முட்கள் பொருந்திய இலைகளையும் பருத்த அடிமரத்தையும் கொண்ட தாழை மரங்களை உடைய கடற்கரைத் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“தாழை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“தடவு நிலைத் தாழைச் சேர்ப்பற்கு”** (குறுந்; பா-219; வ-6) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

இரவு தோறும் விளங்கிய அலைகளால் மோதப்பட்ட தாழையின் வெள்ளிய பூவானது நாரையைப் போல் மலரச் செய்வதற்கு இடமாகிய பெரிய துறைகளைக் கொண்ட அகன்ற நீர்ப்பரப்பை உடைய தலைவனாகிய சேர்ப்பன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“தாழை, குருகு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“தயங்கு திரை பொருத தாழை வெண்பூக்; குருகு என் மலரும் பெருந்துறை”** (குறுந்; பா-226; வரி-5-6) என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

குன்றைப் போன்ற குவிதலை உடைய மணல் அடைந்த கரையின் இடத்து வளர்ந்து நின்ற புன்னை மரத்தினது நிலத்தைத் தோய்ந்த தாழ்ந்த கிளையில் புதிய நாரை தங்கும் தண்ணிய கடங்கரையை உடைய தலைவனே எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“புன்னை, நாரை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நின்ற புன்னை நிலம் தோய் படுசினை; வம்ப நாரை சேர்க்கும்”** (குறுந்; பா-236; வரி-4-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மானின் குளம்பைப் போன்ற பிளவுடைய இலைகளை உடைய அடும்பின் கொடியினது குதிரை கழுத்தில் இடும் மாலையின் கண் உள்ள மணியைப் போன்ற ஒள்ளிய பூக்களை வலிய அலர்த்தி ஒள்ளிய வளைகளை உடைய பெண்கள் வண்டலில் விளையாட்டைச் செய்யும் பெரிய கடற்கரைக்குத் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“மான், குதிரை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“மான் அடி அன்ன கவட்டிலை அடும்பின்; தார் மணி அன்ன ஒண் பூக்கொழுது”** (குறுந்; பா-243; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

புன்னையினது அசைந்த கிளையினிடத்து இருந்த அழகிய சிறகை உடைய நாரை மிக்க கழியிடத்துச் சிறுமீன் உணவை வெறுத்ததாயின் வயலில் உள்ள கள் மணக்கின்ற நெய்தற் பூவை நெற்கதிரோடு விரும்புகின்ற தண்ணிய துறைவன் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“புன்னை, நாரை, சிறுமீன், நெய்தல்”** போன்ற

கருப்பொருட்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“அம்ம வாழி தோழி! புன்னை; அலங்கு சினை இருந்த அம் சிறை நாரை; உறுகழிச் சிறுமீன் முனையின் செறுவில்; கள் நாறு நெய்தல் கதிரொடு நயக்கும்”** (குறுந்; பா-296; வரி-1-4) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

கொல்லும் தொழிலில் பொலிவு பெற்ற கூரிய முகத்தை உடைய எறிகின்ற உளியைத் தன்னுடைய முகத்தின்கண் அமையும் படி பொருத்தப் பெற்ற உலர்ந்த மூங்கிலின் வலிய காம்பைத் தாங்குதற்குரிய நீரையுடைய வழியின் கண் எறிந்து கைக்கொள்ளும் வேகத்தையுடைய வளைந்த மீன் படகை உடைய பரதவர் கொம்பை உடைய சுறாமீனை நோக்கி எறி உளியை எறிய அது கண்டு நீண்ட இரையினிடத்தே இருந்த குறிய கால்களை உடைய அன்னப் பறவைகளின் வெண்ணிறக் கூட்டம், அஞ்சி ஓடும் மலர்கள் நெருங்கிய சோலையையும் தாழையும் அழகிய தண்ணிய நீரையும் உடைய கடற்கரைத் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“மூங்கில், மீன், சுறா, அன்னம், தாழை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“முகம்பட மடுத்த மூளிவெதிர் நோன்காழ்; கொடுந்திமில் பரதவர் கோட்டு மீன் எறிய; நெடுங்கரை இருந்த கருங்கால் அன்னத்து; கைதை அம் தண் புனல் சேர்ப்பனோடு”** (குறுந்; பா-304; வரி-2,4-5,6) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

குளிர்ந்த மணம் வீசுகின்ற மலர்கள் நிறைந்த ஞாழல்கள் வளர்ந்த குளிர்ந்த அழகிய துறையை உடைய தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“ஞாழல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“தண்ணிய கமழும் ஞாழல்”** (குறுந்; பா-310; வ-6) என்ற வரி விளக்குகின்றது.

மெலிந்த நண்டினுடைய வருத்தம் மிக்க விரைந்த செலவை உயர்ந்து வருதலுடைய விரிந்த கடல் அலையானது அந்நண்டைக் கொண்டு நீக்குகின்ற துறையை உடைய தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“அலவன்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஆய்ந்த அலவன் துன்புறு துனைபரி”** (குறுந்; பா-316; வ-6) என்ற வரி விளக்கி நிற்கின்றது.

***“தமிழ் இலக்கியத்தில் நண்டுகள் தமக்கென்று ஒரு தனியிடத்தைப் பெற்றுள்ளன. இவை பொதுவாக நண்டு, நெண்டு, அலவன், அண்டசம், களவன், குளிர், குளிரம், நள்ளி, இடுக்கி, சேக்கை, ஆமதி, நாமம், தொள்ளை, கர்க்கடகம் என்று பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுகின்றன”*** (ச.பரிமளா; பழந்தமிழ் நூல்களில் நீர்வாழ் உயிரினங்கள்; ப-100) என்ற கருத்து இவ்விடத்தில் எண்ணிப் பார்க்கத்தக்கது.

அடைந்தாரை எறிகின்ற சுறாமீன்கள் மிக்கு விளங்கும் கடற் பரப்பினிடத்து நறிய ஞாழல் பூவொடு புன்னை மலரும் பரவி வெறியாடும் இடத்தைப் போலத் தோற்றமளிக்கின்ற துறையை உடைய தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"சுறா, ஞாழல், புன்னை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"எறி சுறாக் கலித்த இலங்கு நீர்ப்பரப்பின்; நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்"** (குறுந்; பா-318; வரி-1-2) என்ற வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பெரிய கடலினிடத்தே பரதவர் கொண்ட மீனினது உலர்ந்த வற்றல் நீந்துவதற்கு அரிய கழியினடத்தே அவர் பிடித்து வந்த இறால் மீனின் வாடிய வற்றலோடு நிலவினது நிறத்தை ஒத்த வெள்ளிய மணல் புலால் நாறும்படி பல மணல்மேடு தோறும் தங்கிக் கிடக்கும் துறையை உடைய தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"மீன், இறாமீன்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பெருங்கடற் பரதவர் கொள்மீன் உணங்கவின் இருங்கழிக் கொண்ட இறவின் வாடலொடு"** (குறுந்; பா-320; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

சிறிய மலரை உடைய ஞாழல் மரத்தின் வேரின்கண் அமைக்கப்பட்ட வளையிடத்திலுள்ள நண்டினது சிறிய வீடு அழியும்படி அலைகள் குறுந்தடி வாய்ந்த முரசத்தைப் போல வீசி முழுங்கும் கடற்கரைத் துறையை உடைய தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"ஞாழல், அலவன்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகளாவன, **"சிறுவீ ஞாழல் வேர் அளைப் பள்ளி; அலவன் சிறு மனை சிதையப் பள்ளி"** (குறுந்; பா-328; வரி-1-2) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

அரும்புகள் முதிர்ந்த ஞாழலினது முட்டையைப் போன்ற திரண்ட மலர்களை நெய்தலது கரிய மலரிலே பெய்வது போலக் குளிர்காற்று தூவுகின்ற வன்மையை உடைய கடற்கரைக்குத் தலைவர் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"ஞாழல், நெய்தல்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"நனை முதிர் ஞாழத் தினை மருள் திரள் வீ; நெய்தல் மாமலர்ப் பெய்தல் போல"** (குறுந்; பா 397; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

அரும்பினது அழகிய மலரைக் கலந்து நெய்தலாகிய நெடிய மாலையை அணிந்த நீர் ஒழுகிய கூந்தலை உடைய விளையாட்டு மகளிருக்கு அஞ்சி, ஈரத்தை உடைய நண்டு கடலுக்குள் ஓடும் துறையை உடைய தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"நெய்தல், நண்டு"** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"அடும்பன் ஆய்மலர் விரைஇ நெய்தல்; ஓரை மகளிர் அஞ்சி, ஈர் ஞெண்டு"** (குறுந்; பா-401; வரி-1,3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கடற்கரையிலுள்ள அழகிய சிறுகுடியில் வாழும் பரதவர் கடல்மேற்சென்று மீன்பிடித்து வாழ்க்கை நடத்தும் இயல்பினர் நீல நிறப் புன்னை மரத்தின் கொழுவிய நிழலிலே தங்கியிருப்பர் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"பரதவர், மீன், புன்னை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **"கானல்அம் சிறுகுடிக் கடல்மேம் பரதவர்; நீல் நிறப் புன்னைக் கொழு நிழல் அசைஇ"** (நற்; பா-4; வரி-1-2) என்பதாகும்.

தாழையானது இறாமீனின் முதுகு போன்ற சருச்சரை பொருந்திய பெரிய அடியையுடையது. சுறாமீனின் கொம்பு போன்ற விளிம்பில் முள்ளைக் கொண்ட அரும்புகளையுடையது; அந்த அரும்புகள் முதிர்ந்து நல்ல குதிரையின் பிடரி மயிர் போல வேறுபடத் தோன்றி விழாவின் களம் எங்கும் கமழும். இவ்வளத்தோடு நீர்ப் பெருக்குள்ள சேர்ப்பன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"இறாமீன், சுறாமீன், தாழை, யானை, குதிரை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"இறவுப் புறத்து அன்ன பிணர் படு தடவு முதல்; சுறவுக் கோட்டன்ன முள் இலைத்தாழை; நல் மான் உளையின் வேறுபடத் தோன்றி"** (நற்; பா-19; வரி-1-2,4) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

நெடிய புன்னை மரக்கிளையிலிருக்கும் முதிர்ந்த கருவையுடைய வெள்ளையான குருகு உலவும் அலைவெள்ளத்திற்கு அஞ்சும் படியான வலிய நீர்ப்பரப்பையுடைய சேர்ப்பன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"புன்னை, வெண்குருகு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"நெடுஞ்சினைப் புன்னைக் கடுஞ்சூல் வெண்குருகு"** (நற்; பா-31; வ-10) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பரதவர் முற்றத்திலிருக்கும் பொதுமன்றம் போலமைந்த புன்னை மரத்தின் பெரிய கிளையிலுள்ள நல்ல மலர்கள் அயலிலுள்ள தாழையொடு சேர்ந்து கமழும் தெளிந்த கடல் சேர்ப்பன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"பரதவர், புன்னை, தாழை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"மன்றப் புன்னை மாச்சினை நறுவீ; முன்றிய தாழையொடு கமழும்; தெண்கடற் சேர்ப்பன் வாழ் சிறுநல் ஊர்க்கே"** (நற்; பா-49; வரி-8-10) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

தழையுடுப்பவர் கொய்யும் குழையரும்பிய இளைய ஞாழல் மரத்தையும் தெளிந்த கடலலை தடவிவரும் கரிய புறத்தையுடைய கண்டல் மரத்தையும் வேலியாகவுடைய கடல் துறையை உடையவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"ஞாழல், கண்டல்"** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்; கண்டல் வேலி நும் துறை கிழவோற்கே"** (நற்; பா-54; வரி-9,11) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

சிறிய மலர் கொண்ட ஞாழல் மரங்களையுடைய பெருங்கடல் சேர்ப்பன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“ஞாழல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“சிறுவீ ஞாழற் பெருங் கடற் சேர்ப்பனை”** (நற்; பா-74; வ-5) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

புதிய மணலைக் கொண்ட கானலிலுள்ள புன்னையின் மொட்டு அவிழ்ந்த நுண்ணிய தாது, கொண்டல் என்னும் கீழ்க்காற்று வீசுந்தோறும் குருகின் வெளிய முதுகில் நெடுகத் தூர்க்கும். அவ்வாறாய தெளிந்த கடற்கரையிலுள்ள கண்டல் என்னும் மரம் நிரம்பிய வேலியையுடையது இவ்வூர் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“புன்னை, குருகு, கண்டல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“புது மணற் கானல் புன்னை நுண் தாது; கொண்டல் அசைவளி தூக்குதொறும் குருகின்; கண்டல் வேலிய ஊர் அவன்”** (நற்; பா-74; வரி-7-8,10) என்ற வரிகள் விளக்கி நிற்கின்றன.

குவிந்த கொத்தான மலர்களையுடைய புன்னை மரத்தையும் புலால் நாறும் கடல் துறையை உடையவன் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“புன்னை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வரியாவது, **“புன்னை அரும்பிய புலவு நீர்ச் சேர்ப்பன்”** (நற்; பா-94; வ-6) என்பதாகும்.

உவர் நிலத்தில் விளைந்த உப்பினை உமணர் கூட்டம் கூட்டமாக வண்டியில் ஏற்றிச் சென்று விற்கும் வாழ்வையுடையவர். அவர்கள் முறிந்த இடத்திலே போட்டு விட்டுச் சென்ற இயல்பு அழிந்த பழைய வண்டிப்பாரிடத்திலே வெள்ளை நிறமான நாரை தன்னுடைய முட்டையை இடும். அத்தண்ணம் துறைக்குத் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“குருகு, உப்பு, உமணர்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வரிகள், **“உவர் விளை உப்பின் குன்று போல் குப்பை; பண் அழிபழம் பார் வெண் குருகு ஈறும்”** (நற்; பா-138; வரி-1,4) இக்கருத்தினை விளக்கி நிற்கின்றன.

பெருங்கடல் அருகிலுள்ள நீலநிறப் புன்னையின் பக்கத்தில் தனியான ஒள்ளிய தாழை இருந்தது. அது வானத்தை மூழ்கிய மிக்க ஒளியுள்ள நெடிய ஞாயிற்றின் கதிர்களில் காய்ந்து எழுந்து உள்ளே வெதுப்பாகி ஞாயிறு தங்கிய வனப்புப் போல் தோன்றும் அத்தகைய தாழஞ் சோலை சூழ்ந்த துறைவன், எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“புன்னை, தாழை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நீல நிறப் புன்னைத் தமி ஒண் கைதை”** (நற்; பா-163; வ-8) என்ற வரியானது விளக்குகின்றது.

நெடிய கடலை வருந்தியவர் வளைந்த மீன்பிடி படகையுடைய பரதவர். கொழுவிய மீன் மிகுதியை மிக்க மணலில் குவித்தனர். மீன் நெய் ஊற்றி கிளிஞ்சலில் கொழுத்திய சிறிய எரியும் விளக்கு ஒளியில் உறங்குவர். நறுமண மலரையுடைய புன்னை மரம் அத்துறையில் வளர்ந்திருக்கும் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"பரதவர், மீன், புன்னை"** போன்ற கருப்பொருள்கள் புலப்படுத்துகின்றன. இதனை, **"நெடுங்கடல் அலைத்த கொடுந் திமிற் பரதவர்; கொழுமீன் கொள்ளை அழி மணல் குவைஇ; மீன்நெய் அட்டிக் கிளிஞ்சல் பொத்திய, சிறுதீ விளக்கில் துஞ்சும் நறுமலர்ப்; புன்னை ஓங்கிய துறைவனோடு அன்னை"** (நற்; பா-175; வரி-1-5) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

அசையும் மூங்கிலின் உள்ளேயுள்ள பொருள் மெல்லிதாகப் பிசைந்து வைத்தது போலத் தொகுதியாக அமைந்த இறகுகளையும் வளைந்த கால்களையுமுடைய ஆண் நாரையால் நலன் உண்ணப்பட்டதும் துன்ப முற்றதுமான பெண்நாரை சுழிக்கரையிலே பெயருமிடங்களில் சிறிய மீன்களையும் உண்ணாது தாழையின் அழகிய கிளையில் வருத்தத்தோடு தங்கியிருக்கும். அவ்வாறாய தண்ணிய துறைவன், எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"மூங்கில், நாரை, பேடை, மீன், கைதை"** போன்றக் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"ஆடு அமை ஆக்கம் ஐது பிசைந்தன்ன; தோடு அமை தூவித் தடந்தாள் நாரை; நலன் உணப்பட்ட நல்கூர் பேடை; கழி பெயர் மருங்கில் சிறு மீன் உண்ணாது; கைதை அம் படுசினைப் புலம்பொடு வதியும்"** (நற்; பா-178; வரி-1-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மயங்கின மாலை நேரத்தில் குடியால் மகிழ்ந்த பரதவர் எளிதிற் பெற்ற பெரிய மீன்களை எளிதில் விற்றனர். நண்டு விளையாடிய புலால் மணக்கும் மணல் முன்றிலையுடையது அழகிய சிறுகுடி. அதற்குச் செல்லும் ஒழுங்குபட்ட வழியில் ஆய்ந்த நீலமணியின் மொட்டு அவிழ்ந்தது போல நெய்தலின் புல்லிய இதழ் குவிந்த மலர் கெடும்படியாகப் பரதவர் மிதித்துச் செல்வர். அவ்வாறாய வளப்பமான கரிய கழியுள்ள கடல் நீர்ச் சேர்ப்பன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **"பரதவர், மீன், அலவன், நெய்தல்"** போன்ற கருப்பொருள்கள் கொண்டு விளக்கப்படுகின்றன. இதனை விளக்குகின்ற பாடல் வரிகள், **"மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்; இனிது பெறு பெரு மீன் எளிதினின் மாறி; அலவன் ஆடிய புலவு மணல் முன்றிற்; ஆய் மணி பொதி அவிழ்ந்தாங்கு நெய்தற்"** (நற்; பா-239; வரி-2-4,6) என்பதாகும்.

இரும்பு போன்ற கரிய கிளைகளையுடையது புன்னை மரம். அம்மரத்தின் நறுந்தாதுகளைப் புலியின் புள்ளிகளைக் கொண்ட அழகு விளங்கிய நல்ல நிறமுள்ள மேற்புறத்தையுடைய வண்டுகள் ஊதலால் இது புலியோசையோ வென்று தேரிற் பூட்டிய

குதிரைகள் அச்சமுறும். அவற்றைப் பலமுறை இழுத்து நிறுத்தியும் நில்லாது குதிரைகளின் விளங்கிய கால்கள் பந்து போலத் தாவும். அக் குதிரைகள் பூட்டிய கொண்கண் தேர் வளப்ப மிக்க தலைவனின் சேரியில் கல் என்னும்படி ஒலி தோன்றும் மூதூர் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“புன்னை, புலி, வண்டு, பரி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை; புலிப் பொறிக் கொண்ட பூ நாறு குரூஉச் சுவல்; வரி வண்டு ஊதலின் புலி செத்து வெரீஇ; பரியுடை வயங்கு தாள் பந்தின் தாவத்”** (நற்; பா-249; வரி-1,5-7) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

விளங்கும் பற்களோடு அழகிய இனிய நகையையுடைய பெண்கள் காய வைத்த தினையைக் கை விரல்களால் துழாவுவார். அதுபோல நொச்சியின் கரிய அரும்பு போன்ற கண்களையுடைய கூட்டம் மணம் கமழும் ஞாழலின் உதிர்ந்த மலரைக் காலால் துழாவி விரித்துக் கோலம் செய்யும். அவ்வாறாய துறையையுடையவன் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“நொச்சி, நண்டு, தினை, ஞாழல்”** போன்ற கருப்பொருள்கள் கொண்டு விளக்கப்படுகின்றன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“நொச்சி மா அரும்பு அன்ன கண்ண; எக்கர் ஞெண்டின் இருங்கிளைத் தொழுதி; உணங்கு தினை துழவும் கைபோல் ஞாழல்”** (நற்; பா-267; வரி-1-2,4) என்பனவாகும்.

செந்நெல் அறுக்கும் உழவர் கூரிய அரிவாள் கொண்டு வயலில் இருக்கும் நெற்கதிரோடு நெய்தல் மலரையும், அது அறுபடுமே என்று காணாது சேர்த்து அறுப்பர். பேதை நெய்தல் மலர் அரிவாளோடும் கதிரோடும் கலந்து நெல்லரிப் படுக்கையில் கிடந்து தனக்கு ஏற்பட்ட துன்பத்தை அறியாது மெல்ல மெல்ல ஞாயிற்றின் கதிரைக் கண்ட போது இனிது துயில் விலகி நெல்லரியிலிருந்து தன் பசிய வாயைத் திறக்கும். இவ்வாறாய கடற்கரைத் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“செந்நெல், நெய்தல், சேர்ப்பன்”** என்ற கருப்பொருள்கள் கொண்டு விளக்கப்படுகின்றன. இதனை விளக்க, **“செந்நெல் அரிநர் கூர்வாட் புண்ணுறக்; பேதை நெய்தல் பெரு நீர்ச் சேர்ப்பதற்கு”** (நற்; பா-275; வரி-1,6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வளைந்த கழியின் பசிய இலையையுடைய நெய்தலின் மிக்க நீரையுடைய சேர்ப்பன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“நெய்தல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் வரியாவது, **“பாசடை நெய்தற் பணிநீர்ச் சேர்ப்பன்”** (நற்; பா-287; வ-5) என்பதாகும்.

நறிய வாசனையுடைய நல்ல புகைபோடாமல் சிறிய மலரையுடைய ஞாழல் மரத்தோடு சேர்ந்த புன்னை மரத்தின் அழகிய செழிப்பான நிழலிலே அந்த மரத்தின் குடமுழாப் போன்ற அடிப்பாகத்தில் அம்மியைக் கட்டிப் போடுவர். அவ்வாறாய துறைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“ஞாழல், புன்னை”** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்குகின்ற வரி **“ஞாழலொடு கெழீஇய புன்னை அம் கொழு நிழல்”** (நற்; பா-315; வ-7) என்பதாகும்.

அரும்புகள் மலரும்படியான புன்னை மரங்கள் நிரம்பியிருக்கும், சோலைக்கு உரிமையுடையவரும் குளிர்ந்த நீர்த்துறைத் தலைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“புன்னை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“புன்னை ஓங்கிய கானற்”** (நற்; பா-327; வ-8) என்பதாகும்.

கடற்கரைச் சோலையிலுள்ள கண்டல் மரத்திலிருந்து கழன்று உதிரும் பசிய காய் நீல நிறமான பெரிய கழியின் அடித்தளம் வரை போகும்படி வீழ்ந்தது. வீசும் காற்றுத் தூக்க உயர்ந்த ஆம்பல் அரும்பு சிறிய வெளிய நீர்க்காக்கை கொட்டாவிவிட்டது போல் மலர்ந்தது. அப்படிப்பட்ட தலைவனின் ஊரினை விளக்க, **“கண்டல், ஆம்பல், வெண்காக்கை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“கானற் கண்டல் கழன்று உகு பைங்காய்; நீல் நிற இருங்கழி உட்பட வீழ்ந்தென; உறு கால் தூக்க தூங்கி ஆம்பல்; சிறு வெண்காக்கை ஆவித்தன்ன”** (நற்; பா-345; வரி-1-4) விளக்கி நிற்கின்றன.

கண்டல் மர வேலியுடைய கழிகள் சூழ்ந்த கொல்லைகளையுடைய தெளிந்த கடல் நாட்டுச் செல்வன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“கண்டல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“கண்டல் வேலிக் கழி சூழ் படப்பைத்”** (நற்; பா-368; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

உப்பங்கழி சேர்ந்த சோலையிலுள்ள பனை மரத்தின் தேனுடைய குளிர்ந்த பழம் மூக்கு இற்றுப் பெரிய இதழ் கொண்ட நெய்தல் வருந்த அள்ளல் இருஞ்சேற்றில் விழுந்து ஆழ்ந்து விட்டது. அதனால் குருகுக் கூட்டம் பறக்கும் துறைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“பனை, நெய்தல், குருகு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“கானற் பெண்ணைத் தேனுடை அளி பழம்; வள் இதழ் நெய்தல் வருந்த மூக்கு இறுபு; கிளைக் குருகு இரியும் துறைவன் வளைக் கோட்டு”** (நற்; பா-372; வரி-2-3,5) என்பவையாகும்.

வலிமையான புரிகளால் ஆன கயிற்றின் நுனியிலே கட்டி நீரில் விரைந்து செல்லவல்ல திண்ணிய மீன் படகிலே, எறியும் ஈட்டியாகிய உளியோடு செல்லும் பரதவர் ஒள்ளிய விளக்குகளைக் கொளுத்திக் கொண்டு நடுநாளில் செய்யும் வேட்டைக்குப் போய்ச் சாலையில் கடலில் பிடித்து மீன்களைக் கொண்டு வந்து கடற்கரைச் சோலையில் குவிப்பர். உயர்ந்த கரிய புன்னை மரத்தின் செறியாத நிழலிலிருந்து தேன் மணம் கமழும் தெளிந்த கள்ளைச் சுற்றத்தோடு குடித்துப் பெரிதும் மகிழ்வர். அவ்வாறான துறைவன் எனத் தலைவனின் ஊரினை விளக்க, **“பரதவர், மீன், புன்னை, தேன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் வரிகள், **“திண் திமில் பரதவர் ஒண் சுடர்க் கொளீஇ; கடல் மீன் தந்து கானற் குவைஇ; ஓங்கு இரும் புன்னை வரி நிழல் இருந்து”** (நற்; பா-388; வரி-9,11-12) என்பனவாகும்.

**பசலை நோய்**

கானலில் மணம் கமழும் ஞாழற் பூவின் நிறம் போன்ற தலைவியின் மேனி பசலை கொண்டது எனத் தலைவியின் மேனியில் ஏற்பட்ட பசலையை விளக்க, **“ஞாழல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“கானல் கமழ் ஞாழல்வீ ஏய்ப்ப தோழி உன்”** (கலி; பா-131; வ-19) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

மாமரத்தின் கொழுந்தின் மீது கோங்கம் மலரின் தாது பரந்த ஒளியுடைய தலைவியின் அணிகள் தன் இடத்தினின்றும் நீங்கும் படியாக தன் மேனியை மறைத்த பசலை உடையவள் தலைவி எனத் தலைவியின் பசலையினை விளக்க, **“மா, கோங்கு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“மணி பொரு பசும் பொன்கொல் மா ஈன்ற தளிரின் மேல்; கணிகாரம் கொட்கும் கொல் என்றாங்கு அணி செல”** (கலி; பா-143; வரி-4-5) என்பவையாகும்.

நீரில் மலர்ந்த நீலமலர் என்று தலைவன் புகழும் நாளில் தலைவனுக்கு வருத்தத்தைச் செய்த தலைவியின் கண்கள் பீர்க்கம் பூப் போன்று மிகுதியாகப் பசலை கொண்டன எனத் தலைவிக்கு உண்டான பசலையை விளக்க, **“பீர்க்கம், நீலம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“பீர் அலர் போலப் பெரிய பசந்தன; நீர் அலர் நீலம் என அவர்க்கு அஞ்ஞான்று”** (கலி; பா-143; வரி-49-50) என்ற வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மின்னுகின்ற பூங்கொத்துக்களை உடைய புன்னை மரத்தினது அழகிய புள்ளிகளை உடைய நிழலில் பொன் போன்ற கோடுகளைக் கொண்ட தண்டுகளை அலைத்து விளையாடிய பொழுது தலைவியானவள் தன் பழைய நிலையினின்று நெகிழ்ந்த

வளைகளை உடையவளாகி பசந்து தோன்றினாள் எனத் தலைவிக்குப் பசலை உண்டானதை விளக்க, **“புன்னை, அலவன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை விளக்க, **“இன் இணர்ப் புன்னை அம் புகர் நிழல்; பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே”** (குறுந்; பா-303; வரி-6-7) என்ற வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**மாலைப் பொழுது**

மீனை உண்ணும் மென்மையான இறகையுடைய பறவைக் கூட்டம் திரண்ட பெரிய புன்னை மரத்தில் உள்ள கூடுகளைச் சேரும் என மாலைப் பொழுதினை விளக்க, **“மீன், குருகு, புன்னை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“மீன் ஆர் குருகின் மென் பறைத்தொழுதி; குவை இரும் புன்னைக் குடம்பை சேர”** (அகம்; பா-40; வரி-3-4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மீனை உண்ணும் பசிய கால்களையுடைய கொக்கினம் வரிசையாய்ப் பறந்து மெல்ல மேற்குத் திக்கில் போய் மறையும் என மாலைப் பொழுதினை விளக்க, **“மீன், கொக்கு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“செவ்வாய் வானம் தீண்டி, மீன் அருந்தும்; பைங் காற் கொக்கினம் நிரை பறை உகப்ப”** (அகம்; பா-120; வரி-2-3) என்பதாகும்.

நெய்தல் மலரின் நுட்பமான தாதினை உண்டு வண்டின் கூட்டம் மலரை விட்டுப் போகும் மாலைக் காலம் என மாலைக் காலத்தினை விளக்க, **“நெய்தல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“தண் சேற்று அடைஇய கணைக்கால் நெய்தல்”** (அகம்; பா-360; வ-4) என்பதாகும்.

நீல நிறம் பொருந்திய கழியில் நீல மலர்கள் குவிகின்ற இருள் மாலைப் பொழுது என மாலைப் பொழுதினை விளக்க, **“நீலம்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“நீல இருங்கழி நீலம் கூம்பும்”** (ஐ.நூறு; பா-116; வ-2) என்பதாகும்.

கண்கள் போல் திரண்ட தண்டுகளை உடைய தாமரை முதலியன குவியும், சிறிய மூங்கிலாகிய குழல்போல் வண்டுகள் ஆரவாரத்துடன் பாடும் பறவைகள் தம் குஞ்சுகளை எண்ணித் தம் கூடுகளைச் சேரும்; பசுக்கள் தாம் தங்கும் ஊர்களில் உள்ள கன்றின் மேல் பொருந்திய விருப்பத்துடன் தொழுவம் நிறையப்புகும் என மாலை நேர வருணனையை விளக்க, **“தாமரை, மூங்கில், பசுக்கள்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“கண் பாயல் பெற்ற போல்**

**கணைக் கால மலர் கூம்ப; சிறு வெதிர்ங் குழல் போலச் சுரும்பு இமிர்ந்து இம்மென; பறவை தம் பார்ப்பு உள்ள கறவை தம் பதிவியின்''** (கலி; பா-119; வரி-5,8-9) என்பனவாகும்.

கடற்கரைச் சோலையில் கொல்லும் ஏறான சுறாமீன் கூட்டம் செல்பவரைச் செல்லாது தடுக்கும் மயக்கத்தை உடைய மாலைக்காலம் என மாலை நேர வருணனையை விளக்க, **''சுறா''** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **''கொல் ஏற்றுச் சுறவினம் கடி கொண்ட மருள் மாலை''** (கலி; பா-123;வ-9) என்பதாகும்.

பகையாக வந்த மல்லரை அழித்த மலர்ந்த மாலையை அணிந்த திருமார்பை உடைய திருமால் தன் பகைவர் எல்லாரும் சேர வந்து சினந்து தன்னை எதிர்த்தலால் அவரைச் சினந்து ஓடும் படியாய் அவர் ஏறிவந்த யானையின் நெற்றியில் அழுத்திய சக்கரம் போன்று ஞாயிறு தான் பரப்பிய கதிர்களைத் தன்னிடம் சுருக்கிக் கொண்டு மறைமலையைச் சேர்ந்து மறையும் மாலைப் பொழுது என மாலைப் பொழுதின் வருணனையை விளக்க, **''திருமால், யானை''** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **''மல்லரை மறம் சாய்த்த மலர்த் தண் தார் அகலத்தோன்; கொல் யானை அணி நுதல் அழுத்திய ஆழி போல்''** (கலி; பா-134; வரி-1-3) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

தெய்வக் கோட்பாட்டினை விளக்கும் கருத்து பின்வருமாறு, ***''மக்கள் வாழும் நிலத்தியல்புக்கு ஏற்ப அவர்தம் மனத்தியல்பாகிய தெய்வங் கொள்கையும் வழிபாட்டு முறைகளுந் தோன்றி நிலை பெறுவனவாதலின் தெய்வங் கொள்கையினையும் கருப்பொருள்களுள் ஒன்றாகவே பண்டைத் தமிழாசிரியர் வகுத்துரைப்பாராயினர்''*** (வெள்ளை வாரணன்; தொல்காப்பியம் நுதலிய பொருள் + வரலாறு; ப-2) என்பதாகும்.

கழியில் உள்ள நெய்தல் மலர் இதழ் குவிந்து தோன்றுகின்ற மாலை என மாலைப் பொழுதினை விளக்க, **''நெய்தல்''** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **''இருங்கழி நெய்தல் இதழ் பொதிந்து தோன்ற''** (கலி; பா-145; வ-39) என்பதாகும்.

மயக்கம் மிகுந்த பெண்மானைப் போல தலைவி மயங்கும்படி கொடிய காம நோயை உண்டாக்கும் மாலைக் காலம் என மாலைக் காலத்தினை விளக்க, **''பிணை''** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **''மருள்கூர் பிணை போல் மயங்க வெந்நோய் செய்யும்''** (கலி; பா-146;வ-32) என்பதாகும்.

பசிய கால்களை உடைய கொக்கினது புல்லிய முதுகினைப் போன்ற ஆழமான நீர் நிலையில் வளர்ந்த ஆம்பலின் மலர்களும் குவிந்த மாலைக் காலம் வந்தது என மாலைக் காலம் வந்ததை விளக்க, **"கொக்கு, ஆம்பல்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"பைங்காற் கொக்கின் புன் புறத்தன்ன; குண்டு நீர் ஆம்பலும் கூம்பின் இனியே"** (குறுந்; பா-122; வரி-1-2) என்ற வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பெரிய இதழ்களையுடைய நெய்தல் மலர்கின்ற கூம்பும் மாலைக் காலத்தினை விளக்க, **"நெய்தல்"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"வள் இதழ் நெய்தல் கூம்ப, புள் உடன்"** (நற்; பா-117; வ-3) என்ற வரியானது விளக்குகின்றது.

நெய்தல் மலர் கூம்பியது என்பதன் மூலம் மாலைப் பொழுது வந்துற்றதை அறிய முடிகின்றது என மாலைப் பொழுதின் வருகையினை விளக்க, **"நெய்தல்"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற பாடல் வரி, **"நெய்தல் கூம்ப நிழல் குணக்கு ஒழுக"** (நற்; பா-187; வ-1) என்பனவாகும்.

நிறைந்த சிறகுகளையுடைய நாரைக்கூட்டம் விசும்பிலே நெருங்கிப் பறந்து சென்றன. பகற்பொழுது மெல்ல மெல்லக் கழிந்தது. முல்லை அரும்பு மலர்ந்த மாலைக் காலம் வந்தது என மாலைக் காலம் வந்ததை விளக்க, **"நாரை, முல்லை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **"நிறை பறைக் குருகினம் விசும்பு உளந்து ஒழுக; எல்லை பைபயக் கழிப்பி பெரும் புன்மாலை"** (நற்; பா-369; வரி-2-3) என்பவையாகும்.

நீலநிற நெய்தற்பூவின் நிரையாகிய இதழ்கள் குவிய ஓயாது அலையடிக்கும் கடலில் மீன்களைத் தின்று பறவைக் கூட்டம் ஆணும் பெண்ணுமாகக் கூட்டில் ஒன்றாய்ப் போய்ச் சேருகின்ற மாலைக் காலம், என மாலைக் காலத்தின் வருகையினை விளக்க, **'நெய்தல், மீன்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **"நீலநிற நெய்தல் நிரை இதழ் பொருந்த; ஆனாது அலைக்கும் கடலே மீன் அருந்தி"** (நற்; பா-382; வரி-2-3) என்பவையாகும்.

புலால் நாற்றமுள்ள நீரின் பரந்த கரையிலுள்ள யாமைக் குட்டியோடு நண்டும் தத்தம் வளையாகிய இருப்பிடம் போய்ச் சேருகின்ற மாலைக் காலம் என மாலைக் கால வருகையினை விளக்க, **"ஆமை, அலவன்"** போன்றக் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"புலவு நீர் அடைகரை யாமைப் பார்ப்போடு; அலவனும் அளைவயிற் செறிந்தன கொடுங்கழி"** (நற்; பா-385; வரி-2-3) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**தலைவி நீராடல்**

தலைவி கழி முள்ளி மலரை அணிந்த தன் கூந்தல் நனையும்படி தெளிவான கடலில் நீராடினாள் எனத் தலைவி நீராடலை விளக்க, **“முண்டகம்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“முண்டகக் கோதை நனையத்”** (ஐ.நூறு; பா-121; வ-2) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**தலைவியின் செயல்**

தலைவி தன் பக்கத்தில் மேய்ந்து கொண்டிருந்த வெள்ளாங் குருகினை நோக்கி என் அணியைப் பார்த்தாயா என வினவிக் கொண்டிருந்தாள் எனத் தலைவியின் செயலை விளக்க, **“வெள்ளாங் குருகு”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“வெள்ளாங் குருகை வினவுவோளே”** (ஐ.நூறு; பா-122; வ-3) என்பதாகும்.

அழகிய மருப்பையும் அழகையும் கொண்ட யானை மதத்தால் பாகனுக்குச் செய்யும் தொழில்களைத் தவிர்த்து வேண்டியபடியே நடக்காத படி தன்னை விலக்கும் தோட்டியையும் கை கடந்தது போன்று தலைவி தன் மீது ஏற்பட்ட வேட்கையால் தலைவன் ஏவலைச் செய்தலை விட்டு வேண்டிய வண்ணம் நடக்காத படி தனக்குக் காவலான அறிவும் நம் அறிவாய் ஆராய்ந்த அடக்கமும் இயல்பான நாணத்துடனே பொருந்தி தலைவன் நெஞ்சைக் கைக் கொண்டாள் எனத் தலைவியின் செயலை விளக்க, **“யானை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“எழில் மருப்பு எழில் வேழம் இருதரு கடாத்தால்”** (ஐ.நூறு; பா-138; வ-1) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

கொழுப்புடைய சுறாமீனை அறுத்த துண்டங்களை உலர்த்த வேண்டிக் கூட்டமான பறவைகளை ஓட்டுகின்ற செயலைச் செய்கின்றனர் எனத் தலைவியின் செயலை விளக்க, **“சுறா”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற வரி, **“நிணச் சுறா அறுத்த உணக்கல் வேண்டி”** (நற்; பா-49; வ-3) என்பதாகும்.

**அலர்**

தில்லை மரங்களால் ஆன ஊரில் ‘கல்’ என்னும்படி அலர் பரவியது எனப் பரத்தமை ஒழுக்கமானது அலர் பரவுதலை விளக்க, **“தில்லை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற வரி, **“தில்லை வேலி இவ்வூர்க்”** (ஐ.நூறு; பா-131; வ-2) என்பதாகும்.

***“தில்லை மரம் நெய்தல் நிலத்தில் மட்டுமே வளரக்கூடியது”*** (சங்க இலக்கியத்தில் அறிவியல்; ப-50) என்கிறார் பி.எல்.சாமி.

புன்னையின் அரும்புகள் மிக்குள்ள சோலையையுடைய இவ்வூரில் தலைவனுடைய அருள் செய்கின்ற திறமானது அலராகி நின்றது என ஊரில் ஏற்பட்ட அலரினை விளக்க, **“புன்னை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அம்ம வாழி பாண புன்னை”** (ஐ.நூறு; பா-132; வ-1) என்ற வரி விளக்கி நிற்கின்றது.

வெள்ளிய மணலிடத்துத் தாழ்ந்து வளர்ந்த புன்னை மரத்தினது மகரந்தம் சேர்ந்த ஒளியை உடைய மலர்களைப் பறிக்கும் ஆயமகளிர் கூட்டமெல்லாம் தலைவனைக் கண்டதால் அலர் ஏற்பட்டது எனத் தலைவன் தலைவி உறவினை விளக்க ஏற்பட்ட அலரினைக் கூறுவதற்காக, **“புன்னை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற வரியாவது, **“ஓங்கல் வெண்மணல் தாழ்ந்த புன்னைத்”** (குறுந்; பா-311; வ-5) என்பதாகும்.

பசிய இலைகளிலிருந்து வெளிவந்த திரண்ட தண்டையுடைய நெய்தற் பூவுடைய நெறிக்கும் இலைகளை இடையிடையே வைத்துத் தொடுக்க மாலையைத் தலைவிக்குத் தலைவன் அணிவித்ததைக் கண்ட ஊர் எழுந்த அலரினை விளக்க, **“நெய்தல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“பாசடைக் கலித்த கணைக் கால் நெய்தல்”** (நற்; பா-138; வ-6) என்ற வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

விரைவையுடைய குதிரை பூட்டிய நெடிய தேரின் வரவைக் கண்டு அலராகச் செய்தது என அலரினை விளக்க, **“கதழ்பரி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“கதழ்பரி நெடுந்தேர் வரவு ஆண்டு அழுங்கச்”** (நற்; பா-203; வ-9) என்ற வரியானது விளக்குகின்றது.

**பரத்தை**

மூங்கிலைப் போன்ற தோள்களையும் நெய்தல் மலர் போன்ற கண்களையும் உடையவள். எனப் பரத்தையின் தோற்றத்தினை விளக்க, **“மூங்கில், நெய்தல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பைதலம் அல்லேம், பாண பணைத்தோள்; நெய்தலங் கண்ணியை நேர்தல் நாம் பெறினே”** (ஐ.நூறு; பா-135; வரி-1,3) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**நீர்த்துறை**

நீரினால் அடித்து வரப்பட்ட மணல் பரந்த நிலத்தில் ஞாழலின் மலர் செருந்திப் பூவுடன் மணம் கமழும் குளிர்ந்த நீர்த்துறை எனக் குளிர்ந்த நீர்த்துறையை விளக்க, **“ஞாழல், செருந்தி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்”** (ஐ.நூறு; பா-135; வ-1) என்ற வரியானது விளக்குகின்றது.

**உவமை**

புதிய நாரைக் கூட்டம் ஒலித்தாற் போன்ற அலர் என அலரினை விளக்க உவமையாக, **“நாரை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற வரியாவது, **“வம்ப நாரை இனன் ஒலித்தன்ன”** (அகம்; பா-100; வ-14) என்பதாகும்.

கயல் மீன்கள் இரண்டு பொருவது போன்ற கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **“கயல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“மதர் கயல் மலைப்பின் அன்ன கண் எமக்கு”** (அகம்; பா-143; வ-10) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

எக்கரில் உள்ள ஞாழல் மரத்தின் மலரைப் போல் தேமல் வளர்கின்ற இளங்கோங்கைகளையுடையவள் தலைவி எனத் தலைவியின் கொங்கைகளுக்கு உவமைப் படுத்த, **“ஞாழல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“எக்கர் ஞாழல் பூவின் அன்ன”** (ஐ.நூறு; பா-149; வ-1) என்பதாகும்.

வைகறைப் பொழுதில் மலருகின்ற நெய்தல் மலர் போலத் தலைவியின் கண்கள் அழகு உடையன என்பதனை விளக்க உவமையாக, **“நெய்தல்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வைகறை மலரும் நெய்தல் போலத்”** (ஐ.நூறு; பா-183; வ-3) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

கடற்கரைப் பரப்பிலே நின்ற மலரைப் பொருந்திய தாழை கழி பெயருகின்ற இடத்தில் தளர்ந்து வெள்ளம் பெயரும் பொழுது தானும் பெயர்ந்தது போலக் காமம் மிக்க பொழுது அவர் பாற் படர்ந்தும், மிகாத பொழுது அவருக்கு ஏதம் வரும் என நினைத்து வருந்தியும் கலங்கினாள் எனத் தலைவியின் வருத்த நிலையினை விளக்க, **“கண்டல்”** என்ற கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அழுவம் நின்ற அலர் வேர்க் கண்டல்”** (ஐ.நூறு; பா-340; வ-4) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றது.

வெள்ளத்தில் சிக்கிக் கரையேற மாட்டாத மானின் மார்பைப் பார்த்து அம்பை எய்யும் கொடியவனைப் போல் தலைவி துன்பத்தில் இருக்கும் பொழுது மாலைப் பொழுது மேலும் துன்பத்தை உண்டு செய்கின்றது எனத் தலைவியின் துன்பத்தை விளக்க, **“மான்”** என்ற கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வெள்ள மான் நிறம் நோக்கி கணை தொடுக்கும் கொடியான் போல்”** (கலி; பா-120; வ-11) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

முடமான தாழை முடுக்குக் குள்ளே நீ கூடப் போரிடையிலே சிறிய தாய் இட வேண்டிய அளவில் சிறுதாயம் உண்டாகக் கண்டவனின் மனம் போல் ஆக்கம் பெருகியவள் உறவினர்க்குப் பொருளைத் தந்து மணந்து கொள்ளத் தக்கவன் எனத் தலைவன் தலைவியை மணம் செய்யவேண்டிய நிலையை விளக்க, **"தாழை"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **"முடத் தாழை முடுக்கருள் அளித்தக்கால், வித்தாயம்"** (கலி; பா-136; வ-9) என்பனவாகும்.

திருமாலின் மார்பில் திருமகள் சேர்ந்தது போலத் தலைவன் மார்பில் தலைவி சென்று சேர்ந்தாள். இவ்வாறு தலைவி தலைவனுடன் இணைந்ததை விளக்க, **"திருமால்"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **"மாயவன் மார்பில் திருப்போல் அவள் சேர"** (கலி; பா-145; வ-64) என்பதாகும்.

இவ்உவமையில் 'திருமால்' எனும் கடவுள் நெய்தல் நிலத்துக் கருப்பொருளாக அமைக்கப்பட்டுள்ளது. இவை திணை மயக்கக் கோட்பாட்டில் அமைக்கப்பட்டுள்ளதினை விளக்கும் கூற்றாவது பின்வருமாறு, ***"ஓர் உரிப்பொருள் (அ) வாழ்க்கை ஒழுக்கம் ஒரு குறிப்பிட்ட கருப்பொருள் சூழலை நிகழு)ம் என்றால் ஒரு கற்பனைப் படைப்பாகும். இ்.்து உலகியலில் அடங்கிய ஓர் உண்மை அன்று. ஆகவே வெவ்வேறு திணைக்கூறுகள் கலந்து வரப் பாடுதல். ஆகவே வெவ்வேறு திணைக் கூறுகள் கலந்து வரப்பாடுதல் என்பது அதாவது திணை மயக்கம் என்பது இயற்கை நெறியாய் அமைத்துக் கொண்ட இலக்கிய நெறிக்கு மாறானதாகும். கற்பனைப் பாகுபாடாகிய திணை உணர்ச்சிக்குக் கூறப்படும் புறனடையே திணை மயக்கமாகும்"*** (ந.சுப்புரெட்டியார்; அகத்திணைக் கொள்கைகள்; ப-32).

மடம் பொருந்திய மெல்லிய நடையுடைய அன்னப் பறவை விரைந்து செல்ல அதைச் சேர்ந்த அன்னச் சேவலின் கூட்டம் போல தலைவியின் பின் தலைவன் வந்தான் எனத் தலைவியின் பின் தலைவன் தொடர்தலை விளக்க, **"அன்னம்"** உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"அன்ன வான் சேவல் புணர்ச்சிபோல் ஒண்ணுதல்"** (கலி; பா-147; வ-66) என்ற வரியானது விளக்குகின்றது.

சிவபெருமான் திருமேனி அழகை அடையுமாறு மலர்ந்த பெரிய சண்பக மலர் பருவம் தவறாமல் பூப்பது போல தலைவனும் பருவம் தவறாமல் வருவான் எனத் தலைவன் குறித்த பருவத்தில் வருவான் என்பதை விளக்க, **"சண்பகம்"** எனும் மலர் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"பெருந்தண் சண்பகம் போல ஒருங்கு அவர்"** (கலி; பா-150; வ-21) என்ற வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

சந்தனத்தைப் போல வேனிற் காலத்தில் தலைவி குளிர்ச்சியை உடையவள் எனத் தலைவியின் தன்மைக்கு, **“சந்தனம்”** எனும் கருப்பொருளை உவமைப்படுத்தியுள்ளனர். இதனை, **“சூருடை அடுக்கத்து ஆரம் கடுப்ப”** (குறுந்; பா-376; வ-2) என்ற வரி விளக்குகின்றது.

தாமரை மலரின் உள்ளிடத்தைப் போன்ற சிறிய வெம்மையை உடையவள் எனத் தலைவியின் தன்மைக்கு, **“தாமரை”** எனும் கருப்பொருள் கொண்டு உவமைப்படுத்தி உள்ளார். இதனை, **“அலங்கு வெயில் பொதிந்த தாமரை”** (குறுந்; பா-376; வ-5) என்ற வரியானது விளக்கி நிற்கின்றது.

குத்துக் கோலையுடையோர் பிணித்துச் செல்லும் அடக்குதற்குரிய களிற்றினைப் போலப் பரதவர் தோணியைக் கொண்டு செல்வர் எனப் பரதவர் கொண்டு செல்கின்ற தோணியை விளக்க, **“களிறு”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“சிறை அருங்களிற்றின் பரதவர் ஓய்யும்”** (நற்; பா-74; வ-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மாமரத்தின் உயர்ந்த கிளையில் முள்போன்ற பற்களையுடைய வௌவால் தொங்கித் தூங்கிக் கொண்டிருக்கும் போது வெல்லும் போரையுடைய சோழர்குடியிற் பிறந்த அழிசி என்பானின் அழகிய பெரிய காட்டிலுள்ள நெல்லிக் கனியின் புளிச் சுவையை நினைத்துக் கனவில் சுவைத்து மகிழும் அது போல அவர் நாட்டிலுள்ள பெரிய அடியையுடைய புன்னை மரத்தின் குளிர்ந்த அரும்புகள் மலர்ந்த கடற்கரைத் துறையில் மேய்ந்து திரியும் சிப்பியின் குளிந்த முதுகின் மேல் விழும்படியான காட்சியைக் கண்டு மகிழும் பரதவர் மகிழ்ச்சியையும், கானலையும் நினைத்து தலைவனோடு இருப்பதாகக் கனவில் மகிழ்கின்றாள் தலைவி எனத் தன் கனவுக்கு உவமையாக, **“மா, வாவல், நெல்லி, புன்னை”** போன்ற கருப்பொருள்கள் கொண்டு விளக்கப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“உள் ஊர் மா அத்த முள் எயிற்று வாவல்; நெல்லி அம் புளிச் சுவைக் கனவியா அங்கு; பனி அரும்பு உடைந்த பெருந்தாட் புன்னை”** (நற்; பா-87; வரி-1,4,6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

அன்றிலில் ஒன்று இல்லாத போது மற்றது இறந்து போகும். அது போல தனிமையில் இருக்கும் தலைவியும் ஆற்ற மாட்டாள் எனத் தலைவியின் துயரினை விளக்க, **“அன்றில்”** என்ற கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஒன்று இல் காலை அன்றில் போலப்”** (நற்; பா-124; வ-1) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

மீன் இனத்தைத் தின்ற வெண்மையான குருகு மிதித்த நீரில்லாத நெய்தல் போலத் தலைவியும் வாழாள் எனத் தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலையை விளக்க, **“மீன், குருகு, நெய்தல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“இனமீன் ஆர்ந்த வெண்குருகு மிதித்த; வறுநீர் நெய்தல் போல”** (நற்; பா-183; வரி-9-10) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**தலைவியின் ஊர்**

வளைந்த படகையுடைய பரதவர் கடலில் ஆடிய மீன் வேட்டை நன்றாய் அமைந்திட பெரிய புலால் நாற்றம் கமழும் சிறிய குடிகளையுடையது தலைவியின் ஊர் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“பரதவர், மீன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்குகின்ற பாடல் வரிகள், **“கொடுந் திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென; இரும் புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்து”** (அகம்; பா-70; வரி-1-2) என்பனவாகும்.

விடியற் காலத்தே வெளிச் சென்ற எருமை நெய்தலின் புதிதாய் மலர்ந்த மலரைத் தின்னும் வேலிகளைக் கொண்ட தோட்டங்களையுடையது தலைவியின் ஊர் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“எருமை, நெய்தல், கைதை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“வைகுறு விடியல் போகிய எருமை; நெய்தல் அம் புது மலர் மாத்தும்; கைதை அம் படப்பை எம் அழுங்கல் ஊரே”** (அகம்; பா-100; வரி-16-18) என்பனவாகும்.

பெரிய கடற்கரையில் உள்ள சிறுவெண் காக்கை வரி பொருந்திய வெண்மையான பலகறைகளை வலை என எண்ணி அஞ்சும் மெல்லிய கடற்கரையுடையவள் தலைமகள் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“சிறுவெண் காக்கை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற பாடல் வரி, **“பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை”** (ஐ.நூறு; பா-166; வ-2) என்பதாகும்.

தாழை மரங்கள் பொருந்திய விளங்கிய அலைகளை உடைய வளைந்த கழியானது ‘இழும்’ என்று ஆரவாரம் செய்யும் அவ்விடத்துள்ள பெரிய கடலை வேலியாக உடையது தலைவியின் சிறிய நல்லூர் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“தாழை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற பாடல் வரி, **“தாழை தைஇய தயங்குதிரைக் கொடுங்கழி”** (குறுந்; பா-345; வ-5) என்பதாகும்.

விரிந்த மலர்களை உடைய புன்னை மரங்கள் உயர்ந்து வளர்ந்த புலால் நாற்றத்தை உடைய சேரி தலைவியின் ஊர் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“புன்னை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“புன்னை ஓங்கிய புலால் அம் சேரி”** (குறுந்; பா-351; வ-6) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

பரந்த கடலில் வருந்திய பெரிய வலையையுடைய பரதவர் மிக்க மீன்களை உலர வைத்த புதிய மணற் பரப்பில் கல் என்னும் ஒலியையுடைய சேரியில் புலால் வீசும் இடத்திலுள்ள புன்னை மரம் விழாக்காலத்து மணக்கும் பூங்கொத்துக்கள் அவிழ்ந்து சேர்ந்து கமழும் ஆரவாரமுள்ள ஊர், எனத் தலைவியின் ஊரினை விளக்க, **"பரதவர், மீன், புன்னை"** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரியாவன, **"உரவுக் கடல் உழந்த பெருவலைப் பரதவர்; மிகு மீன் உணக்கிய புது மணல் ஆங்கண்; கல்லென் சேரிப் புலவற் புன்னை"** (நற்; பா-63; வரி-1-3) என்பனவாகும்.

கரிய கால்களையுடைய வெண்குருகுகள் இறாமீன்களைத் தின்று எழுந்தன. வெண்மையான உப்புக் குவட்டின் மேல் அருமையான தம் சிறகைக் கொண்டு பறந்தன. கரையிலிருந்து கரிய கிளைகளையுடைய புன்னை மரங்களில் போய்த் தங்கின திரண்ட தண்டையுடைய சிறந்த நெய்தல் மலர் மறைய நீர் நிறைந்த கழியிலே ஆணும் பெண்ணுமாகச் சுறா மீன்கள் திரிந்தாலும் திரியும். அப்போது இரவில் ஒலிக்கும் குளிர்ந்த கடலில் நிறைந்த விளக்கைக் கைக்கொண்டு சுற்றத்தாரும் மீன் வேட்டைக்குப் புகுந்தனர் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **"இறா, குருகு, புன்னை, நெய்தல், சுறா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்குகின்ற பாடல் வரிகள், **"இறவு அருந்தி எழுந்த கருங்கால் வெண்குருகு; கருங்கோட்டுப் புன்னை இறை கொண்டனவே; கணைக்கால் மாமலர் கரப்ப மல்கு கழீத்; துணைச் சுறா வழங்கலும் வழங்கும் ஆயிடை"** (நற்; பா-67; வரி-3,5-7) என்பனவாகும்.

மெல்லக் காற்றடித்துக் கோலம் செய்த புன்னையின் முன்றிலில் கொழுமீன் உண்ணும் வளமான இல்லம் எனத் தலைவியின் இல்லத்தினை விளக்க, **"புன்னை, மீன்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரி, **"நீல் நிறப் புன்னைத் தமி ஒண் கைதை"** (நற்; பா-163; வ-8) என்பதாகும். இப்பாடல் தலைவியின் இல்லத்தினை விளக்குகின்றது.

நெய்தல் நிலத்தில் வாழும் மக்கள் வேழக்கோலை நிரல்பட வைத்து இடையிடையே வெள்ளிய கொம்புகளைக் கலந்து நிறுத்தி இலைகளைத் தாழை நாரால் கட்டி அதன் மேல் நாணல் புல்லை வேய்ந்து தங்கள் இல்லங்களை அமைத்துக் கொண்டனர். இதனை,

> **"வேழம் நிரைத்து வெண்கோடு விரைஇ**
> **தாழை முடிந்து தருப்பை வேய்ந்த**
> **குழியிறைக் குரம்பபை"** (பெரும்பாணாற்றுப்படை; 263-265)

என நெய்தல் நிலத்தில் அமைக்கப்பட்ட இல்லமானது விளக்கப்படுகின்றது.

**தொகுப்புரை**

கடற்கரையும் கடற்கரையைச் சேர்ந்த இடங்களும் நெய்தல் நிலம். நெய்தல் நிலத்திற்குத் தெய்வம் வருணன் ஆவான். காதலன் பிரிவை எண்ணிக் காதலி மனம் வருந்துதலும் தன் உள்ளத் துயரத்தை வாய்விட்டு உரைப்பதே நெய்தல் ஒழுக்கமாகும். இத்தகைய நெய்தல் திணையின் கண் இடம் பெற்றுள்ள கருப்பொருள்களைக் கொண்டு தலைவனின் தேர், தலைவனின் ஊர், தலைவன் பிரிவால் ஏற்படும் பசலைநோய் போன்றவைகள் விளக்கப்படுகின்றன.

மேலும் மாலைப் பொழுது, தலைவி நீராடல், தலைவியின் செயல்கள், பரத்தை ஒழுக்கம், நீர்த்துறையின் சிறப்பு, உவமைவழி புலப்படும் செய்திகள், தலைவியின் ஊர் போன்ற செய்திகளும் புலப்படுத்தப்படுகின்றன.

# இயல் 5

## பாலைத்திணைப் பாடல்களில் கருப்பொருள் புலப்பாட்டுத்திறன்.

### பாலைத் திணை

பாலை நிலத்திலே நிகழும் ஒழுக்கத்தைப் பற்றி உரைப்பது பாலைத்திணை, நீரற்று வறண்டு போன நிலப்பகுதியே பாலை நிலம். தொல்காப்பியர் பாலைக்குத் தனி நிலம் குறிக்கவில்லை. முல்லையிலும், குறிஞ்சியிலும் பாலை தோன்றலாம். மருதத்திலும் நெய்தலிலும் பாலை தோன்றலாம், வானம் பொய்த்து வறண்டு போன எந்த நிலத்திலும் பாலை தோன்றும். பாலைக்குத் தனித் தெய்வமும் கூறப்படவில்லை. எந்த நிலத்தில் பாலை தோன்றுகிறதோ அந்த நிலத்துத் தெய்வமே பாலைக்கும் தெய்வமாகும்.

காதலன் தன் காதலியை விட்டுப் பிரிந்து செல்லுவதைப் பற்றிச் சொல்வதும், பிரிவிற்கான காரணங்களைச் சொல்வதும் பாலைத்திணையாகும். பாலைத் திணையின் ஒழுக்கம் பிரிவாகும்.

இத்தகைய பாலைத் திணையில் நடைபெறும் செயல்கள் கருப்பொருள்கள் கொண்டு விளக்கப்படுகின்றன. அத்தகைய கருப்பொருள்கள் எந்தப் பின்னணியில் புலப்படுத்தப்படுகின்றன என்பதை விளக்குவதே இவ் இயலாகும்.

### பாலை நிலப் பகுதி

பெரிய உப்பங்கழியில் உள்ள முதலையின் முதுகில் பொருந்திய தோலைப் போன்ற கரிய அடிப்பாகத்தை உடையது ஓமை மரம். அம்மரத்தில் காண்பதற்கு இனிய பெரிய கிளையில் காவலை உடைய இடத்தில் குஞ்சுகளை ஈன்று காவற்பட்ட வளைந்த வாயையுடைய பேடை உள்ளது. அப்பேடைக்கு மிக்க இரையைக் கொணர்ந்து தரும் பொருட்டு மயங்கி இரையை விரும்பி எழுந்த சிவந்த செவியையுடைய ஆண்கழுகு சென்றது. அது வானை அளாவிய உச்சி பொருந்திய சிறந்த மலைச்சாரலில் அசைந்த நடையையுடைய மரையாவை வலப்பக்கமாய் விழும்படி கொன்று வீழ்த்தி அதன் ஒளியுடைய சிவந்த குருதியைக் குடித்துப் புலால் நாற்றம் வாய்ந்த புலி விட்டுச் சென்ற மூட்டுவாய் கழிந்து மிக்க நாற்றம் உடைய புலாலைக் கொள்ளை புரியும் கள்வர் போன்று விடாது கவர்ந்து செல்லும். இத்தகைய இடமான பொலிவில்லாத இலைகளையுடைய மராமரங்கள் பொருந்திய அகன்ற பாலைநிலம் என, **"முதலை, ஓமை, கழுகு, மரை, புலி, மராமரம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"இருங்கழி முதலை மேஎந்தோல் அன்ன; கருங்கால் ஓமைக் காண்பு இன் பெருஞ்சினைக்; கொடு வாய்ப் பேடைக்கு அல்கு இரை தரீஇய; துளங்கு நடை மரையா வலம் படத் தொலைச்சி; புலவுப் புலி துறந்த கலவுக் கழி கடு முடை; புல் இலை மராஅத்த அகன் சேண் அத்தம்"** (அகம்; பா-3; வரி-1-2,4,7,9,11) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

அரிய சுரத்தில் உள்ள இருப்பை மரத்தின் புதிய பூக்களைத் தின்ற வாயை உடையனவாய் நிலத்தில் தூசி பறக்கச் சென்று கொன்றையின் கிளைகளில் உள்ள குழலைப் போன்ற காய்களைக் கோதி வலிய கைகளையுடைய கரடிகளின் கூட்டம் பரந்து செல்லும் இயல்புடையது பாலைநிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **"இருப்பை, கொன்றை, கரடி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"அத்த இருப்பை ஆர் கழல் புதுப்பூக்; கொன்றை அம் சினைக் குழற்பழம் கொழுதி; வன்கை எண்கின் வயதிரை பரக்கும்"** (அகம்; பா-15; வரி-13,15-16) என்ற வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கடும் வெயிலில் முறுகிய மூங்கில்கள் மிகுந்து வளர்ந்துள்ள பக்க மலையிடங்களையுடையது. ஆண்யானைகள் உராய்ந்ததால் சேற்று மண்ணையுடைய அடிப்பகுதியைக் கொண்ட யாமரங்களையுடையது. அரிய பாலை அதன் பிளவுபட்ட வழிகளில் பொருந்திய பக்கங்களில் நீண்ட அடியைக் கொண்ட இலவ மரத்தின் முதிர்ந்த பல மலர்கள் கொண்ட பாலை நிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **"மூங்கில், யானை, யா, இலவம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை, **"கடுங்கதிர் திருகிய வேய் பயில் பிறங்கல்; பெருங்களிறு உரிஞ்சிய மண் அரை யாஅத்து; நீள் அரை இலவத்து ஊழ் கவி பல் மலர்"** (அகம்; பா-17; வரி-15-16,18) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பருந்துகள் முட்டையிட்டு அடைகாப்பதற்கு இடமான வற்றிச் சிதறிய நுனிகளையுடைய ஓமை மரங்களையுடைய மலையின் குகையுள் குட்டிகளை ஈன்று அவற்றைக் காக்கின்ற ஈன்றணிமையுடைய பெண்நாய் பசியோடியிருக்கும் என எண்ணி இரங்கிப் பசுமையான கண்ணையுடைய செந்நாயான ஆண்நாய் தன் பெட்டைக்கு இரை தருதற்காக ஆண் பன்றியைத் தாக்கி வீழ்த்தும். அதனால் அச்சத்தால் கெட்டு ஓடும் பெண் பன்றி உராய்தலால் அறுபட்டுச் செங்காய்கள் உதிர்ந்த பசிய குலைகளை யுடைய ஈந்தின் முதிராத விதைகள் பரவிய மண்ணையுடைய வன்நிலம் பெரிய ஆண் யானைகளும் அவற்றின் பெண் யானைகளும் குன்றும் ஆகிய கூட்டம் தம் வெண்மையான கொம்புகளைக் கொள்ள எண்ணிய அன்பில்லாத கொடியவர்களான வேடர்கள் தமக்குத் துன்பம் வரும் என எண்ணாமல் தம் மனம் போனபடி திரியும் காடு எனக் காட்டுப்பகுதியினை விளக்க, **"பருந்து, ஓமை, பெண்நாய், ஆண்நாய், ஆண்பன்றி, பெண்பன்றி, ஈந்து, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பருந்து இளைப்படூஉம் பாறு தலை ஓமை; மென் புனிற்று அம் பிணவு பசித்தென பைங்கட்; செந்நாய் ஏற்றை கேழல் தாக்க; இரியற் பிணவல் தீண்டலின் பரீஇச்; செங்காய் உதிர்ந்த பைங்குலை ஈந்தின்; இருங்களிற்று இன திரை தூர்க்கும்"** (அகம்; பா-21; வரி-15,17-20,26) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

புதரின் மீது படர்ந்த செம்முல்லையின் சிவல் முள்ளைப் போன்று சிவந்த அரும்பு நெருங்கிய குலையையுடைய பிடாவின் அரும்புடன் ஒருங்கே கட்டவிழ்ந்து விரிந்து மலர்கின்ற மலர் மணம் கமழ்கின்ற காட்டுப்பகுதி எனப் பாலை நிலத்தினை விளக்க, **"முல்லை, பிடவம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"புதல் மிசைத் தளவின் இதல் முட் செந்தனை; நெருங்கு குலைப் பிடவமொடு ஒருங்கு பிணி அவிழ"** (அகம்; பா-23; வரி-3-4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வளைந்த கோடுகளையுடைய பெரிய புலி வெளிப்பட்டுத் தோன்றும் நீண்ட மலையில் அசையும் தண்டையுடைய வன்மையான மூங்கில்கள் மேல்காற்று மோதுதலால் வளையும் காட்டு நெறி எனப் பாலை நிலத்தினை விளக்க, **"புலி, மூங்கில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கொடுவரி இரும்புலி தயங்க நெடுவரை; ஆடு கழை இரு வெதிர் கோடைக்கு ஒல்கும்"** (அகம்; பா-27; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

இலைகள் இல்லாமல் மிக ஓங்கிய நிலையையுடைய யாமரத்தின் மேல் உள்ள கழுகுகள் தம் குஞ்சுகளுக்குக் கற்களை உடைய சிறிய ஊரில் உள்ள மறவர்கள் அம்புகளை எய்வதால் பொலிவில்லாத வழிகள் தோன்றும் செவ்வரி மாலை அணியப்பட்டுக் கிடத்தாற் போன்ற நிண ஒழுங்கு புண்ணினின்று வெளிப்படும் குருதியும் தம்மைச் சூழக் கிடத்தவரின் கண்களைக் கவர்ந்து போய் கொடுக்கும். அத்தகைய கழுகுகள் பொருந்திய பாலை நிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **"யாமரம், கழுகுகள்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"இலை இல ஓங்கிய நிலை உயர் யா அத்து; கண் உமிழ் கழுகின் கானம் நீந்தி"** (அகம்; பா-31; வரி-5,11) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மழை இல்லாமையால் வற்றிய வாகையின் முதிர்ந்த நெற்றுக்களைக் கொண்ட கொத்துக் கூத்தாடும் களத்தில் ஒலிக்கும் பறையைப் போன்று விட்டு விட்டு ஒலிக்கும். கோடைத் தன்மை கொண்ட அகன்ற பெரிய குன்று, அதில் உள்ள நீர் இல்லாத அரிய வழியில் உயர்ந்த களிற்றைக் கொன்று மக்கள் இயங்காத நெறியில் புலி திரியும் காட்டுப் பகுதி எனப் பாலை நிலத்தினை விளக்க, **"வாகை, களிறு, புலி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"வாடல் உழுஞ்சில் விளை நெற்று அம் துணர்; நீர் இல் ஆர் ஆற்று நிவப்பன களிறு அட்டு; ஆள் இல் அத்தத்து உழுவை உகளும்"** (அகம்; பா-45; வரி-1,4-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வாகையை ‘உழிஞ்சில்’ எனக் கூறுவதற்கான சான்றுக் கருத்தாவது பின்வருமாறு; ***“இருப்பை, ஓமை, மூங்கில், யா, மரபு, நெல்லி, பலா, வேங்கை, ஞெமை, நொச்சி, இற்றி, இத்தி, தேக்கு, உழிஞ்சில், (வாகை), அமை, மருது, யாமை, உலவை(வேலம்), வேம்பு, கள்ளி போன்ற மர வகைகள் பாலைத் திணைப் பாடல்களில் அதிகமாகக் குறிப்பிடப் பெற்றுள்ளன. பாலை நிலம் நிழற் கோடுகளைக் கொண்ட மரங்களையே அதிகமாகக் கொண்டுள்ளது”*** (து.திருநாவுக்கரசு; உள்ளுறை, இறைச்சி- படிமவியல் நோக்கு;ப-139) என்ற கருத்து எண்ணிப்பார்க்கத்தக்கது.

நீண்ட அடியையுடைய யா என்ற மரத்தில் ஊடுருவிச் செல்லும் காற்று முழங்கும் பொலிவில்லாத உயர்ந்த கிளையில் புலால் விருப்பத்துடன் இருக்கும் தன் பெட்டையின் முகத்தைப் பார்த்து ஊன் துண்டு ஒன்றைப் பதித்து வைத்தாற் போன்ற சிவந்த செவியையுடைய ஆண் பருந்தின் இறகு கரிந்து தீய்ந்திடும், இத்தகைய வேனில் வெம்மை மிக்க மூங்கில் உயர்ந்த அகன்ற காடு, எனப் பாலை நிலத்தினை விளக்க, **“யா, எருவை, வேய்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **“நீள் எரி பரந்த நெடுந் தாள் யாத்து; எருவைச் சேவல் கரிபு சிறை தீய; வேனில் நீடிய வேய் உயர் நனந்தலை”** (அகம்; பா-51; வரி-2,6-7) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

பசிய கண்களையுடைய யானை அருவிகள் நீர் இல்லாது ஒழிந்த பக்க மலையில் தீண்டி வருந்தும் தெய்வங்களையுடைய சுனைகளில் இறங்கிக் கையால் துழவிப் பார்த்தும் பயன் காணாமையால் அங்கு உலர்ந்துள்ள பாசியைத் தின்னும். அது தன் இயக்கம் ஓய்ந்து போதற்குக் காரணமான பசியுடன் தன் பெண் யானையுடன் ஒரு பக்கத்தே ஒடுங்கிக் கிடக்கும். அங்கு மூங்கில்களின் கணுக்கள் உடையுமாறு காய்கின்ற வெயில் விளங்கும். இத்தகைய அகன்ற பாலை நிலம், எனப் பாலை நிலத்தினை விளக்க, **“யானை, பிடி, வேய்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பாசி தின்ற பைங் கண் யானை; ஓய் பசிப் பிடியொடு ஒருதிறன் ஒடுங்க; வேய் கண் உடைந்த வெயில் அவிர் நனந்தலை”** (அகம்; பா-91; வரி-5-7) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பாலை போன்ற கோடுகளையுடைய புலியின் கொல்லும் தொழிலையுடைய நகம் போன்ற சிவந்த அரும்பு விரிந்த முள் நிறைந்த முருக்க மலர்கள் அவற்றில் வண்டுகள் மொய்க்கும். அதனால் வாடிய பூக்கள் கீழே விழுந்தன. மதர்த்த அழகையும் சிறந்த அணிகளையும் உடைய இளைய மகளிரின் பூண் அணிந்த கொங்கையைப் போன்ற அரும்புகள் கட்டவிழ்ந்து கோங்கின் மலருடன் தங்கி அரும்பிய புனலிப்பூக்கள் பரவப் பெற்றுள்ளன. குளிர்ந்த பாதிரியின் அழகிய கிளைகளினின்று உதிர்ந்த பூக்களுடன் தாவிப்

பூக்கும் பருவத்தை உடைய வெண் கடப்ப மலருடன் கலந்து விளங்குகின்றன. வணங்குதற்கரிய தெய்வமுடைய கோயிலில் கலந்து கிடக்கும் மலர்களைப் போல அவை மணம் கமழும் பல்வேறு மலர்கள் உடைமையால் நாம் செல்லும் இக்காடு விரும்பத்தக்கதாய் உள்ளது எனப் பாலை நிலத்தினை விளக்க, **“வயமான், முருக்கு, கோங்கு, அதிரல், பாதிரி, மராஅ”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“வாள்வரி வயமான் கோள் உகிர் அன்ன; செம்முகை அவிழ்ந்த முள் முதிர் முருக்கின்; முகைபிணி அவிழ்ந்த கோங்கமொடு அசைஇ நனை; அதிரல் பரந்த அம் தண் பாதிரி; மராஅ மலரொடு விராஅய் பராஅம்”** (அகம்; பா-99; வரி-1-2,5-6,8) என்பதாகும்.

வெண்மையான பனை ஓலையால் ஆன குடைகளை மிக்க விசையையுடைய சூறாவளிக் காற்று தூக்குகின்றது. அதனால் ஓசை எழுகின்றது. அந்த ஒலியைத் தான் பெண் மானின் குரல் என அஞ்சி ஆண்மான் அப்பெண்மானை அழைக்கின்றது. இத்தகைய தன்மையுடைய இடங்களில் குரங்குகள் மிகுதி. அத்தகைய இயல்புடைய காட்டினை விளக்க, **“பனை, மான், குரங்கு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வெருள் ஏறு பயிரும் ஆங்கண்; கருமுக முசுவின் கானத் தானே”** (அகம்; பா-121; வரி-14-15) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஆண்மானானது அசையும் நீண்ட மூங்கிலினின்று உதிர்கின்ற நெற்களைக் கண்ட போது தான் இயல்பாய் மேயும் புல்லை மறந்து அதனைத் தன்னுடன் உண்பதற்காகத் தன் பெண்மானை அழைக்கும். அத்தகைய காட்டுப் பகுதியினை விளக்க, **“கழை, நெல், கலை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“அலங்கால் வான்கழை உதிர்நெல் நோக்கி; கலை பிணை விளிக்கும் கானத்து ஆங்கண்”** (அகம்; பா-129; வரி-4-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மலையில் உள்ள வேங்கை மரத்தினது பல புள்ளிகளையுடைய புலியின் நிறம் போன்று விளங்கும் மலர்களிடையே பெரிய கிளைகளையுடைய நரத்தை மலர்கள் உதிர முசுக்கலை என்னும் குரங்குகள் பாய்ந்து தாவும் இயல்பினான தேன் மணம் கமழும் நீண்ட உச்சிகளால் விளங்கிய வேங்கட மலையைச் சார்ந்த ஊர்கள் பொருந்திய காட்டு வழியைக் கடந்து சென்றார் தலைவர் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“புலி, வேங்கை, நரத்தம், குரங்கு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“புலிக்கேழ் உற்ற பூவிடைப் பெருஞ்சினை; நரத்த நறும்பூ நாள்மலர் உதிரக், கலை பாய்ந்து உகளும் கல்சேர் வேங்கை”** (அகம்; பா-141; வரி-25-27) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

பெண்புலி உயர்ந்த மலையின் பக்கத்தில் பிடவுடன் ஒரு சேர மலர்ந்துள்ள வேங்கை மரத்தின் மணம் கமழும் மலருடன் கூடிய தழையை வெவ்வேறாக வைத்தாற் போன்ற தசையின் மறைப்பு நீங்காத நகத்தையுடைய குட்டிகள் மூன்றை ஒரு சேரப் பெற்றது. முடக்கமான இடத்தில் உள்ள பாறையின் பிளப்பில் உள்ள குகையில் உள்ளது. வலி ஓய்ந்து பசியுடன் இருந்தது. அதனை உண்ணச் செய்யப் புள்ளிகளையுடைய பிளந்த வாயையுடைய ஆண்புலி அறல்பட்ட கொம்பையுடைய ஆண் மானின் குரலைத் தன் செவியால் கேட்கும். இத்தகைய இயல்புடைய பிளவுபட்ட வழிகள் பொருந்திய பெரிய காடு எனப் பெரிய காட்டுப் பகுதியினை விளக்க, **'பிடவம், வேங்கை, குருளை, பிணவு, உழுவை, உழைமான்''** போன்ற கருப்பொருள்கள் மூலம் விளக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **''ஓங்குமலைச் சிலம்பில் பிடவுடன் மலர்ந்த; வேங்கை வெறித்தழை வேறுவகுத்தன்ன; ஊன் பொதி அவிழாக் கோட்டு உகிர்க் குருளை; மூன்று உடன் ஈன்ற முடங்கர் நிழத்த; துறுகல் விடர் அளப் பிணவுப்பசி கூர்ந்தெனப்; பொறிகிளர் உழுவைப் பேழ்வாய் ஏற்றை; அறுகோட்டு உழைமான் ஆண்குரல் ஓர்க்கும்''** (அகம்; பா-147; வரி-1-7) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கோங்க மரத்தின் மீது படர்ந்து இரவில் பூத்த பசுமையான அதிரல் கொடியைக் காட்டு யானைகள் விடியற்காலையில் அரும்புடன் இழுத்து உணவாக உண்ணும். இவ்வியல்புடைய அச்சம் தருகின்ற பாலைவழி எனப் பாலை வழியினை விளக்க, **''கோங்கு, அதிரல், யானை''** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **''வில்இட வீழ்ந்தோர் பதுக்கைக் கோங்கின்; எல்லி மலர்ந்த பைங்கொடி அதிரல்; கான யானை கவளும் கொள்ளும்''** (அகம்; பா-157; வரி-5-6,8) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பசுமையான பழத்தையுடைய பலாமரங்கள் பொருந்திய காடு நீர் குளங்கள் இல்லாதிருக்கும் உயர்ந்த இடங்கள். அங்கு ஆண் யானைகள் பெரு மூச்சுவிடும் இளைய பெண் யானைகளைத் தழுவி வேற்று நாட்டு விழாவை எண்ணிக் கொண்டு கூத்தர் செல்வது போல ஆண் யானைகள் வழி நடத்திச் செல்லும் பாலைநிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **''பலா, மடப்பிடி, களிறு''** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **''பசும்பழப் பலவின் கானம் வெம்பி; நாறுஉயிர் மடப்பிடி தழீஇ வேறு நாட்டு; களிறு அதர்ப் படுத்த கல்உயர் கவாஅன்''** (அகம்; பா-189; வரி-1,4,6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பன்றியின் வளைந்த கொம்பைப் போன்ற துய்யை உடைய நீண்ட பெரிய காய் உடையது அரும்பு முதிர்ந்த முருக்கமரம். அம் மரத்தினது கிளையைப் பொருந்திய பெரிய

கல் அது மிக்க வேகம் உடைய காற்று அசைத்தலால் வெப்பம் மிக்க காட்டின் தீயால் மூடப் பெற்ற யானை போன்று வியப்புக் கொள்ளும்படி தோன்றும். இத்தகைய தன்மையுடைய நிழல் இல்லாத ஓமை மரங்கள் பொருந்திய நீர் இல்லாத பாலைவழி எனப் பாலை வழியினை விளக்க, **"பன்றி, முருக்கு, யானை, ஓமை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"ஆழல் வாழி தோழி! கேழல்; நனை முதிர் முருக்கின் சினைப் பொங்கர்; அழல் பொழி யானையின் ஐயெனத் தோன்றும்; நிழல் ஓமை நீர்இல் நீள் இடை"** (அகம்; பா-223; வரி-3,5,7-8) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

வேங்கைப் புலியானது தன் பெண்புலியின் மிக்க பசியைப் பொறுக்க முடியாது போய்க் கரிய பனையின் செறும்பு போன்ற மயிரையும் சிறிய கண்ணையும் பொருந்திய பன்றிகள் வரும் வழியைப் பார்த்திருக்கும். இத்தகைய இயல்புடைய காடு எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"உழுவை, பிணவு, பனை, பன்றி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கடையல் அம்குரல வாள்வரி உழுவை, பேழ்வாய்ப் பிணவின் விழுப்பசி நோனாது; இரும்பனஞ் செறும்பின் அன்ன பரூஉ மயிர்ச்; சிறுகண் பன்றி வருதிறம் பார்க்கும்"** (அகம்; பா-227; வரி-5-8) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கூர்மையான பல்லை உடைய ஊனை விரும்பும் பெண் நாயினது மிக்க பசியைப் போக்குதற்காக அதன் ஆண் கலை மானைத் தேடிக் கொண்டிருக்கும் பெண்மான் அலறும் படியாக ஆண்மானின் தொடையைச் சிதைத்த செந்நாயின் ஆண் வெயிலை வெறுத்து மெலியும் வெப்பம் மிக்க வழிகள் வரிகளையுடைய வேங்கைப் புலியின் தோலைப் போன்ற ஆறலைப்போர் கல்லெடுத்து எறிகின்றதால் பல கிழிசல்களைக் கொண்ட உடையையும் உலர்ந்த குடையையும் உடைய புதியவரான வழிப்போக்கர் உள்ள காட்டு வழிகள் எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"பிணவு, மடப்பிணை, கலை, செந்நாய், இரும்புலி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"ஊன்நசைப் பிணவின் உறுபசி களை இயர்; காடுதேர் மடப்பிணை அலறக் கலையின்; ஓடு குறங்கு அறுத்த செந்நாய் ஏற்றை; இரும்புலி வேங்கைக் கருந்தோல் அன்ன"** (அகம்; பா-285; வரி-4-6,8) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஆண்யானை தன் கொல்லும் கொம்பு ஒடியும் படி பாய்ந்து சினம் மிக்கு கொடிய வெயிலில் தன் இனிய துணையான பெண்யானை உண்ணும்படி கிளைகளையுடைய யாமரத்தின் பட்டையைக் கிழித்து ஊட்டும் எனப் பாலையின் காட்சியினை விளக்க, **"யானை, மராஅம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **"யானும் அறிவென் மன்னே; யானை தன்; முளி சினை மராஅத்துப் பொலி பிளந்து ஊட்ட"** (அகம்; பா-335; வரி-4,7) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

செம்மையான மூங்கிலின் அசையும் தன்மைத்தாகி கல் என்ற ஒலி ஏற்பட ஞெமை மரத்தின் இலைகளை உதிர்த்த வெப்பம் உடைய கோடைக் காற்று உடைய காட்டில் வருந்திய நடையையுடைய இளம் பெண்யானையுடன் புள்ளிகளையும் பிளவுபட்ட கொம்பையும் உடைய கலைமான் நீர் இல்லாத குளத்தை நோக்கிச் சென்று நீர் கிட்டப் பெறாமல் மெலிந்து தளரும் இயல்பு கொண்ட பாலை நிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“மூங்கில் ஞெமை, மடப்பிணை”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **“அமை ஆடு அம்கழை தீண்டி கல்லென; ஞெமை இலை உதிர்ந்த எரிவாய்க் கோடை; உயங்கு நடை மடப்பிணை தழீஇய வயங்கு பொறி”** (அகம்; பா-353; வரி-7-8,11) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மானின் உடல் புறத்தேயுள்ள புள்ளிகளைப் போன்ற புள்ளிகளையுடைய மரநிழலில் தங்கியிருக்கும் போது, பெரிய புலியுடன் போர் செய்து வருந்திய வடுவுடைய கொம்பை உடைய ஆண் யானையின் பொருட்டுப் பெண்யானை ஆரவாரத்துடன் செல்லும் அடிகள் பதிதலால் பள்ளமான நீண்ட பாலைவழி எனப் பாலை வழியினை விளக்க, **“மான், புலி, யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“உழைப் புறத்து அன்ன புள்ளி நீழல்; உறுபுலி உழந்த வடு மருப்பு ஒருத்தற்குப்; பிடு இடு பூசலின் அடி படக்குழிந்த”** (அகம்; பா-379; வரி-20,24-25) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கடிய ஆண்யானை மரம் அசையும்படி குத்திப் பிளத்தலால் புண்ணை ஏற்படுத்திய பொரிந்த அடிப்பகுதியை உடைய ஓமை மரத்தின் சிவந்த அடிப்பகுதியை ஊன் என நினைத்து மாமரத்தில் பருந்து வந்து தங்கும். காற்றினால் அசையும் மூங்கில் நெல் விளையும் காட்டுப் பகுதி எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **“யானை, ஓமை, மா, பருந்து, மூங்கில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கடும் பகட்டு ஒருத்தல் நடுங்கக் குத்தி; போழ் புண் படுத்த பொரி அரை ஓமைப்; புல் இலை வெதிர நெல் விளை காடே”** (அகம்; பா-397; வரி-10-11,16) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

“பருந்து” பாலை நிலம் பறவையாகக் கருதப்படுகின்றது. என்பதை; ***“பருந்து, எருவை, புறா, கழுகு, குடிஞை, கோழி, மஞ்ஞை, குயில், வானம்பாடி, குரா(கோட்டான்), காக்கை, வெள்ளாங்குருகு, தும்பி, கின்வீடு (வண்டு), தும்பி, கிளி, போன்ற பறவைப் பெயர்கள் பாலைப் பாடல்களில் வருகின்றன. இதில் குயில், பருந்து, கோழி போன்றன அதிக அளவில் குறிப்பிடப் பெற்றுள்ளன”*** (து.திருநாவுக்கரசு; உள்ளுறை, இறைச்சி, படிமவியல் நோக்கு; ப-140) என்ற சான்று வழி அறிய முடிகின்றது.

கல்வி இல்லாத கோவலர்கள் தம் கைக்கோலால் தோண்டிய நீர் நிறைந்த பள்ளத்தை யானைகள் கவரும் கற்கள் பொருந்திய பாலைநிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. **"ஆனிர்பத்தல் யானை வௌவும்"** (ஐ.நூறு; பா-304; வ-2) என்ற வரியானது விளக்குகின்றது.

ஆண் யானை தன் பெண் யானையைத் தழுவி வேனில் வெப்பம் தெறுதலால் உணவொன்றும் பெறலாகாமையால் அது பெறக் கூடிய வேறு புலங்களை நினைத்துச் செல்லுதலும் செய்யாது பசிநோய் வருந்த வருந்தி வாடும் பசுமையில்லாத பாலை நிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **"களிறு, பிடி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"களிறு பிடிதழீஇப் பிறபுலம் படராது"** (ஐ.நூறு; பா-305; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மூங்கிலால் கடையப்பட்ட கழையில் எழுந்த முழங்கும் தீயை வன்மையுடைய புலிகள் அஞ்சி ஓடும் அரிய காடுகள் உள்ள பாலைநிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **"மூங்கில், புலி"** போன்ற கருப்பொருட்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **"ஞெவிகழை முழங்கு அழல் வயமா வெரூஉம்"** (ஐ.நூறு; பா-307; வ-1) என்பதாகும்.

காட்டில் உள்ள வேங்கை மரத்தில் ஏறிப் பூக்கொய்பவர் பஞ்சுரம் என்னும் பண் எனப் பாடுவாராயினும் அரிய வழியில் செல்பவர் அது கேட்பினும் அந்த வழியில் செல்வதற்கு அஞ்சும் காட்டை உடைய பாலைநிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **"வேங்கை, பஞ்சுரம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பாலை நிலத்தின் இசைத் தன்மையை விளக்கும் செய்தியாவது பின்வருமாறு; ***"பாலை நிலத்தில் பல்வேறு பண்களும் பறைகளும் ஒலிக்கப் படுகின்றன. கள்ளே உணவாகக் கொள்ளும் மக்களுக்கு இசையும் உணவாக இருந்தது இதன் மூலம் அறியலாம். அரிகோற் பறை, குழல், பறை, ஆடுகளப்பறை, இணை, தண்ணுமை, துடி, முழவு, முரசம், முரசு போன்ற பெயர்கள் பாலைத் திணையில் வரும் பறை பற்றிய குறிப்புகளாகும்"*** (து.திருநாவுக்கரசு; உள்ளுறை, இறைச்சி, படிமவியல் நோக்கு; ப-141) என்ற கருத்து எண்ணிப்பார்க்கத்தக்கது.

உயர்ந்த மலைப் பக்கத்தில் புல்லென்ற அடிப்பகுதியை உடைய ஓமை மரங்கள் நிறைந்த புலிகள் திரியும் காடு எனப் பாலை நிலத்தினை விளக்க, **"ஓமை, புலி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"புல்லரை ஓமை நீடிய; புலிவழங்கு அதர கானத்தானே"** (ஐ.நூறு; பா-316; வரி-4-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நீண்ட மூங்கில்கள் உலரும்படி வேனில் நீளுதலால் மிக்க கதிர்களையுடைய ஞாயிறு காய்கின்ற பாலைநிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“கழை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“நெடுங்கழை முளிய வேனில் நீடிக்”** (ஐ.நூறு; பா-322; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

புள்ளிகளையும் வரிகளையும் உடைய பெரிய கை வேவதற்கு அஞ்சிச் சிறிய கண்களையுடைய யானைகள் நிலத்தைத் தொட இயலாத வெயிலால் உலர்ந்த சோலைகளையுடையவை மூங்கில் உயரமாய் வளர்ந்த மரங்கள் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“யானை, மூங்கில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“சிறுகண் யானை நிலந்தொடல் செல்லா; வெயில் முளி சோலைய வேய் உயர் சுரனே”** (ஐ.நூறு; பா-327; வரி-2-3) என்ற பாடல் வரிகள் விளக்கிநிற்கின்றன.

மலர்ந்த மலர்க் கொத்துக்களையுடைய கரிய அடியையுடைய வெண்கடம்ப மரத்தில் உள்ள கிளையில் பூத்த வெண்மலர்கள் தடுக்கும் போவதற்கு அரிய சுரம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“மரா அத்து”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“கருங்கால் மராஅத்து வைகுசினை வான்பூ”** (ஐ.நூறு; பா-331; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மலைச்சாரலில் இலை உதிர்ந்து மலர்ந்து உயர்ந்து தோன்றும் நிலையையுடைய இலவமரம் தீயைப் போல் காட்டு வழியில் தோன்றும் பாலைநிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“இலவம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“இலையில் மலர்ந்த ஓங்குநிலை இலவம்”** (ஐ.நூறு; பா-338; வ-2) என்ற வரி விளக்குகின்றது.

குரவமும், மரவமும் பூத்து விளங்குதலால் அழகு பெற்று விளங்கும் காடு எனப் பாலை நிலத்தினை விளக்க, **“குரவம், மரவம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **“குரவம் மலர மரவம் பூப்ப”** (ஐ.நூறு; பா-357; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

புலியால் பற்றப் படுவதினின்று தப்பிப் பிழைத்த கவைத்த கொம்பையுடைய முதிய கலைமான் தன் பெண்மான் தன்னை அடையுமாறு தன் ஆண்குரலை உயர்த்தி அழைக்கின்ற கொடிய காடு எனப் பாலை நிலத்தினை விளக்க, **“புலி, மான்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்குகின்ற வரிகளாவன, **“புலிகோட் பிழைத்த கவைக் கோட்டு முதுகலை; மான் பிணை அணிதர ஆண்குரல் விளிக்கும்”** (ஐ.நூறு; பா-373; வரி-2-3) என்பதாகும்.

நீர் வேட்கை மிக்கு வருந்தும் யானை வங்கியம் என்னும் இசைக் கருவியின் தூம்பு போல் துதிக்கையை உயர்த்திப் பிளிறுகின்ற பாலைநில வழி எனப் பாலை நிலத்தினை விளக்க, **“யானை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது இதனை, **“நீர் நசைக் கூக்கிய உயவல் யானை”** (ஐ.நூறு; பா-377; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

கொலையில் வல்ல வேங்கைகள் மிக்க மலைகள் பிற்பட முன்னாக உள்ள பலவாய் வேறுபட்ட போவதற்கரிய சுரங்கள் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“கோள்வல் வேங்கை மலை பிறக்கொழிய”** (ஐ.நூறு; பா-385; வ-2) என்பதாகும்.

காட்டில் ஆண்யானை துடியைப் போல அடியையுடைய யானைக் கன்றுகள் இழிந்து தாயும் தந்தையும் உண்ண வேண்டும் என்று எண்ணாமல் சிறிதளவுள்ள நீரை முதலில் தன் பெண் யானை உண்ணுமாறு செய்து பின்பு தானும் உண்ணும் காட்டுப்பகுதி எனக் காட்டுப்பகுதியினை விளக்க, **“பிடி, களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பிடி ஊட்டி பின் உண்ணும் களிறு எனவும் உரைத்தனரே”** (கலி; பா-11; வ-9) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மலைமீதுள்ள மூங்கில்கள் வாடும் படிச் சுடுகின்றன. அக்காட்டில் கலைமான் இனிய நிழல் இல்லாததால் வருந்திய மடப்பத்தை உடைய தன் பெண்மானுக்குத் தான் நின்று தனது நிழலினைத் தந்து உயிரைக் காக்கும் எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **“வேய், பிணை, கலை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“கல்மிசை வேய் வாடக் கனை கதிர் தெறுதலான்; இன் நிழல் இன்மையான் வருந்திய மடப் பிணைக்குத்; தன் நிழலைக் கொடுத்து அளிக்கும் கலை எனவும் உரைத்தனரே”** (கலி; பா-11; வரி-14,16-17) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மடப்பம் உடைய மான்கள் உணவுகளைக் காணாதன வாய்த் திரிந்த கொம்பையுடைய ஆண்மானுடன் பேய்த் தேரைக் கானல் நீரை நீர் என்று உண்ணும் பொருட்டு ஓடும் மந்திகள் உணவு இல்லாது வருந்தும். உரல் போன்ற அடிகளை உடைய உடல் வாடிய யானைகள் சேற்றில் உள்ள ஈரத்தை நுகர்ந்து நீங்கும். இத்தகைய செல்வதற்கு அரிய கொடிய சுரப்பகுதி எனச் சுரப்பகுதியினை விளக்க, **“மான், மந்தி, யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பொரி மலர்ந்தன்ன பொதிய மடமான்; மரல் சாய் மலை வெம்ப மந்தி உயங்க; உரல் போல் அடிய உடம்பு உயங்கு யானை”** (கலி; பா-13; வரி-3,5-6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

காற்றானது தாக்குதலால் நிலை கலங்கி வாகை மரத்தினது வெள்ளிய நெற்றுக்கள் ஒலித்தற்கு இடமாகிய மூங்கில் செறிந்த பாலை நிலப் பரப்பு எனப் பாலை நிலத்தினை விளக்க, **"வாகை, மூங்கில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **"வாகை வெண் நெற்று ஒலிக்கும்; வேய் பயில் அழுவம் முன்னியோரே"** (குறுந்; பா-7; வரி-5-6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வாகை மரத்தினது நெற்றாய் விளைந்த வற்றலானது ஒலித்தற்கு இடமாகிய மலைகளை உடைய பாலை நிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **"வாகை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"நெற்று விளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்"** (குறுந்; பா-39; வ-2) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

வேட்டையை மேற்கொண்ட செந்நாய் தோண்டி உண்டு எஞ்சியதாகிய காட்டு மல்லிகைப்பூ மூடிய அழுகல் நாற்றத்தையுடைய சிறிதான நீரை வளையையுடைய கையளாய் தலைவனுடன் உண்ணக் கூடிய கொடுமையைத் தலைவி ஆற்றாள் எனப் பாலை நிலக் கொடுமையை விளக்க, **"செந்நாய், குளவி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **"வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்; குளவி மொய்த்த அழுகற்சில் நீர்"** (குறுந்; பா-56; வரி-1-2) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கிளி தன் வளைந்த அலகினிடத்திலே கொண்ட வேம்பினது ஒளி வீசும் பழமானது புதிய பொற்கம்பியின் ஊடு செலுத்தும் பொற்கொல்லரது முனை மாட்சிமைப்பட்ட கூரிய கைந்நகத்தில் கொண்ட பொன்னாபரணத்திற்குரிய ஒரு காசை ஒத்துக் காணப்படும். நிலம் கரிந்துள்ள கள்ளியை உடைய பாலைநிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **"கிள்ளை, வேம்பு, கள்ளி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"உள்ளார் கொல்லோ தோழி! கிள்ளை: வளை வாய்க் கொண்ட வேப்ப ஓண் பழம்; நிலம் கரி கள்ளி அம் காடு இறந்தோரே?"** (குறுந்; பா-67; வரி-1-2,5) என்ற வரிகள் விளக்குகின்றன.

காட்டு யானையால் பட்டையை விரும்பி உண்ணப்பட்ட பொரிந்த அடியை உடைய ஓமை மரத்தின் காற்றடிக்கும் நெடிய கிளையினது அசைதலை உடைய வற்றல் கொம்பில் ஏறி, 'ஓய்' என்ற தனிமை வருத்தத்தை வெளிப்படுத்தும் வகையில் ஆண்புறா பெண்புறாவை அழைக்கும் பாலை நிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **"யானை, ஓமை, புறா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கான யானை தோல் நயத்து உண்ட; பொரிதாள் ஓமை வளி பொரு நெடுஞ்சினை; புலம்பு தரு குரல்**

**புறவுப் பெடை பயிரும்”** (குறுந்; பா-79; வரி-1-2,4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

விரிந்த இடத்தை உடைய ஊரானது பாழ்பட்டுக் கிடப்பது போன்ற தோற்றத்தை உடைய ஓமை மரங்கள் வளர்ந்த பெரும் பாலை நிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“ஓமை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஊர் பாழ்த்தன்ன ஓமை அம் பெருங்காடு “**(குறுந்; பா-124; வ-2) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

கவைத்த முள்ளை உடைய கள்ளியினது காய் வெடிக்கும் பொழுது விடும் கடிய ஒலியானது நெருங்கிய மெல்லிய சிறகுகளை உடைய ஆணும் பெண்ணுமாகிய இரட்டைப் புறாக்களை நீங்கச் செய்யும் வழிகள் கடத்தற்கரியன எனப் பாலை நிலத்தினை விளக்க, **“கள்ளி, புறவு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“கவை முடக் கள்ளிக் காய் விடு கடு நொடி; துதை மென் தூவித் துணைப் புறவு இரிக்கும்”** (குறுந்; பா-174; வரி-2-3) இப்பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பேயின் பற்களைப் போன்ற பருத்த நகங்களை உடைய பரவிய அடிகளைப் பெற்ற பெரிய களிற்றுக் கூட்டத்தின் தலைவனாகிய யானை வந்து கைப்பற்றியதனாலே அழிந்து பாத்தியினிடத்து வீழ்ந்த கரும்புகளின் இடையிடையே நின்ற ஒற்றைக் கரும்பு போல ஒற்றை மூங்கில் ஆங்காங்கே வளர்ந்துள்ள பாலை நிலம், எனப் பாலை நிலத்தினை விளக்க, **“களிறு, கரும்பு, கழை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“இருங்களிற்று இன நிரை ஏத்தல் வரின் மாய்த்து; அறை மடி கரும்பின் கண் இடை அன்ன; பைதல் ஒரு கழை நீடிய சுரன் இறந்து”** (குறுந்; பா-180; வரி-2-4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வேனிலால் கரிந்து போன மராமரத்தினது ஓங்கிய வெவ்விய கிளைகளில் வேனிற்காலத்து மலர்ந்த ஒற்றைப் பூங்கொத்தைத் தேன் உண்ணும் தும்பி என்னும் சாதி வண்டானது ஊதி அதன் கண் தேன் இன்மையால் உண்ணாமல் மீளுகின்ற நீரில்லாத இடங்களையுடைய பாலை நிலம், எனப் பாலை நிலத்தினை விளக்க, **“மராமரம், தேன்”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **“தீய்ந்த மராஅத்து ஓங்கல் வெஞ்சினை”** (குறுந்; பா-211; வ-4) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

நீரற்று வறண்ட குளத்தைத் துழாவிய ஒளிவீசும் கொம்புகளை உடைய ஆண்யானைகள் சிறிய குண்டுக் கற்களுக்கருகில் தாம் விரும்புகின்ற படிகளைத் தழுவிக் கொண்டு வளைந்த கோடுகளையுடைய பெரிய புலித் தாக்குதல்களில் இருந்து

பாதுகாக்கின்ற உயர்ந்த மலைப் பக்கத்திலுள்ள பாலை நிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“யானை, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வறுங்கயம் நுழை இய இலங்கு மருப்பு யானை; கொடு வரி இரும் புலிகாக்கும்”** (குறுந்; பா-215; வரி-4,6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மரலாகிய உணவை உண்ட பெரிய பிடரை உடைய ஆண்மான் உரலைப் போன்ற காலுடைய யானை முறித்து உண்டு குறைபடச் செய்த யாமரத்தின் புள்ளிகளை உடைய நிழலின் கண் தூங்குகின்ற மிகப் பெரிய இருண்ட சோலைகள் உடைய பாலை நிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“மான், யானை, யா”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“மரற்புகா அருந்திய மா எருத்து இரலை; உரற்கால் யானை ஒடித்து உண்டு எஞ்சிய; யா அ வரி நிழல் துஞ்சும்”** (குறுந்; பா-232; வரி-3-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நாரைகள் கரிய வானத்தின்கண் உயரப் பறக்கும் தலைமை பொருந்திய யானையையும் வளவிய தேரையும் உடைய தொண்டை மான்களுக்குரிய சுரபுன்னைகள் நெருங்கிய மலைப் பக்கத்தில் கன்றில்லாத ஒற்றைப் பசுவினை நிழல் காட்டித் தம்பால் வரச் செய்து தடுத்த புல்லிய அழயை உடைய ஓமை மரங்களுடைய பாலை நிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“நாரை, யானை, மான், சுரபுன்னை, பசு, ஓமை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“குருகும் இரு விசும்பு இவரும் புதலும்; மண் எடுத்து உண்ணும் அண்ணல் யானை; புண் தாள் ஓமைய சுரன் இறந்தோரே”** (குறுந்; பா-260; வரி-1,5,8) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

ஆண்யானை வருந்திய நடையை உடைய மடப்பத்தை உடைய தனது பிடியினது வருத்தத்தைப் பெறாமல் உயர்ந்த நிலையை உடைய யாமரம் அழியும்படி கொம்பால் குத்தி பசையற்ற வெள்ளிய பட்டையைக் கைக்கொண்டு நீரற்ற வெறுங்கையைச் சுவைத்து மேல்நோக்கித் தன் பிடியின் வருத்தத்தைப் போக்க இயலாமையை நினைத்து வருந்தும் நெஞ்சோடு பிளிறுகின்ற நீண்ட அரிய வழி எனப் பாலை நிலத்தினை விளக்க, **“களிறு, மடப்பிடி, யாமரம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“மறந்தனர் கொல்லோ தாமே களிறு தன்; உயங்கு நடை மடப்பிடி வருத்தம் தோனாது; நிலை உயர் யாஅம் தொலையக் குத்தி”** (குறுந்; பா-307; வரி-4-6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வளர்ந்த இளமையை உடைய வாகை மரத்தின் கொம்பின் கண் உள்ள நறிய மலர், மடப்பத்தை உடைய கரிய மயிலினது உச்சிக் கொண்டையைப் போல

தோன்றுகின்ற நீண்ட காட்டு வழியென பாலை நிலத்தினை விளக்க, **“வாகை, மயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“குமரி வாகைக் கோலுடை நறுவீ; மடமாத் தோகைக் குடுமியின் தோன்றும்”** (குறுந்; பா-347; வரி-2-3) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

நீரைத் தன்னுடைய அடியிலே கொண்டுள்ள வரிசையான இதழ்களை உடைய குவளை மலரானது மேல்காற்று வீசினாலும் வாடாதது ஆகும். கவணைப் போன்ற நுகத்தின் பிணிப்பு பொருந்தாமையால் வருந்துதலை உடைய உப்பு வணிகருடைய எருதுகள் பூட்டிய வண்டிகளின் தொகுதியை வரிசையாக வைத்தாற் போன்ற உலர்ந்த மரக்கிளைகளைப் பிரித்தற்கரிய வன்மை இல்லாமையால் யானை தன் துதிக்கையை மடித்து வருந்துகின்ற பாலைநிலம் எனப் பாலை நிலத்தினை விளக்க, **“குவளை, எருது, யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நீர் கால்யாத்த நிரை இதழ்க் குவளை; உமண் எருந்து ஒழுகைத் தோடு நிரைத்தன்ன; யானை கைம் மடிந்து உயவும்”** (குறுந்; பா-388; வரி-1,4,6) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

உயர்ந்த கிளைகளை உடைய ஓமை மரத்தினைக் குத்திய உயர்ந்த கொம்பை உடைய ஆண்யானை வேனிலின் தன்மையை உடைய மலையினிடத்தில் உள்ள வெம்மையாகிய அடிவாரத்தில் மேகம் முழங்குகின்ற கடிய முழக்கத்தைக் கூர்ந்து கேட்கும் மூங்கில்கள் உலர்ந்த செல்லுதற்கரிய வழி எனப் பாலை நிலத்தினை விளக்க, **“ஓமை, யானை, கழை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“ஓமை குத்திய உயர் கோட்டு ஒருத்தல்; கழை திரங்கு ஆர் இடை அவனொடு செலவே”** (குறுந்; பா-396; வரி-4,7) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

நெடுங்காலம் வழங்கி வந்தது பெரிய குளிர்ந்த மலை. அதில் தழைத்த வலிய ஈந்து மரத்தின் கிளைகள் விளங்கும். அழகிய அக்காட்டு வழியில் நடந்து செல்லும் மக்களின் தலையைப் புலிக்குட்டிகள் மோதும். சிவந்த தலை குருதி படிந்த சாய், பெரிய தலை இவற்றையுடையனவாய் விளங்கும். மாலைக் காலத்தில் பதுங்கியிருக்கும் மரலின் தூறுகளை நிமிர்ந்து நோக்கும். அங்கே இண்டங்கொடி படர்ந்திருக்கும் ஈங்கை மரமுள்ள காடு உள்ளது எனக் காட்டின் நிலையை விளக்க, **“ஈந்து, குருளை, ஈங்கை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“ஒலி வில் ஈந்தின் உவமை அம் காட்டு; வல்லியப் பெருந் தலைக் குருளை; மாலை, மான் நோக்கு இண்டு இவர் ஈங்கைய சுரனே”** (நற்; பா-2; வரி-2,5-6) ஆகிய வரிகள் விளக்குகின்றன.

வெண்மையான மூங்கில் நெல்லில் உள்ள வரிகளையுடைய நெற்றியைக் கொண்ட யானைகள் குளிர்ந்த நறிய மலையில் தூங்கும் சிறிய இலைகளையுடைய சந்தன மரங்கள் வெப்பத்தால் வாடும்படியான பெரிய காடு எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"மூங்கில், யானை, சந்தனம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"வெண்ணெல் அருந்திய வரி நுதல் யானை; சிறியிலைச் சந்தின வாடு பெருங் காட்டே"** (நற்; பா-7; வரி-7,9) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மலர் தலைகவிழ்ந்து பெரிய இதழ் விரிந்த காந்தள் மணக்கும் அழகிய மலைச்சாரலில் தன் இனம் அமைந்த வலிய ஆண்யானை பெரும் மலைப்பாம்பின் வாய்ப்பட்டது. அதனையறிந்த பெண்யானை நீங்காத துயரோடு அச்சம் கொண்டு ஒலிக்கும் பேரொலி நீண்ட மலையின் பிளம்புகளில் எதிரொலிக்கும் அவ்வாறான கடிய விலங்குகள் பொருந்தியது காடு எனக் காட்டுப் பகுதியை விளக்க, **"காந்தள், களிறு, பிடி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"மாமடல் அவிழ்ந்த காந்தள் அம் சாரல்; இனம் சால் வயக் களிறு பாந்தட் பட்டென; துஞ்சாத் துயரத்து அஞ்சு பிடிப் பூசல்" (**நற்; பா-14; வரி-7-9) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

ஞாயிறு தன் வெயிலை முழுதும் வீச செழித்த பலாக்காய்கள் வாட முடம்பட்ட முதிர்ந்த பலா மரங்களுடைய காடு எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"பலா"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"முடமுதிர் பலவின் அத்தம் நும்மொடு"** (நற்; பா-26; வ-6) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

பசிய கண்ணையுடைய யானையின் பருத்த கால் உதைத்தால் வெள்ளை நிறமான புழுதி எழுந்தது எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"பைங்கண் யானைப் பரூஉத்தாள் உதைத்த"** (நற்; பா-41; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

மிக்க பசியையுடைய செந்நாய் வருந்தும் ஒருவகை மானைக் கொன்று தின்றுவிட்ட மிச்சில் தூர நாட்டிற்கு அருஞ் சுரவழியாகச் செல்வோர்க்கு உணவு ஆகும் எனக் காட்டு வழியினை விளக்க, **"செந்நாய், மான்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"ஓய்பசிச் செந்நாய் உயங்கு மரை தொலைச்சி"** (நற்; பா-43; வ-3) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

கொன்றையின் அழகிய இனிய கனிகள் காம்புகளோடு பாறையில் அறைந்து விழும்படி கிளைகள் அசைய வெம்மையான காற்று வீசும் மூங்கில் நெருங்கிய காட்டில் உள்ள துன்பமிக்க வழியென எனக் காட்டு வழியினை விளக்க, **"கொன்றை, மூங்கில்"**

போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **“அயிர்ப்புக் கொண்டன்ன கொன்றை அம்தீம் கனி”** (நற்; பா-46; வ-6) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

புல்லிய புற இதழையுடைய கோங்கு மரத்தின் மெல்லிய இதழ்களையுடைய குடைபோன்ற பூக்கள் விடி வெள்ளிகள் என்று நினைக்கும் படி மலர்ந்து தோன்றி வெளியழகு கொண்ட பூக்கள் மணக்கும் காட்டுப் பகுதியினை விளக்க, **“கோங்கு”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“புல் இதழ்க் கோங்கின் மெல் இதழ்க் குடைப்பூ”** (நற்; பா-48; வ-3) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

வேர்கள் பின்னிக் கொண்ட மூங்கில்களிலே காற்றுத் தாக்கும் போது எழும் ஒலி, கட்டுத்தறியிலே கட்டிய யானை வருந்தி நெட்டுயிர்ப்பது போல் இருக்கும். அவ்வாறான கோடைக் காலத்தில் நீண்ட மூங்கில் நெருங்கிய காட்டுப்பகுதி எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **“மூங்கில், யானை, வேய்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வேர் பிணி வெதிரத்துக் கால் பொரு நரல் இசை; கந்து பிணி யானை அயா உயர்த்தன்ன; என்றூழ் நீடிய வேய் பயில் அழுவத்து”** (நற்; பா-62; வரி-1-3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பெரிய நீர்ப் பரப்பைப் போன்ற வெள்ளையான பேய்த் தேரை மரமில்லாத நீண்டவிடத்தில் மான் கூட்டம் நீர் என விரும்பிச் செல்வதும், சுட்ட மண்மிடாவில் மத்தால் கடைந்த போது பிறவாத வெண்ணெய் வெப்பத்தால் சிதறியது போன்ற உவர் எழுந்த களர் நிலத்தில் ஓமை மரங்கள் நெருங்கியதுமான பகுதியினை விளக்க, **“தேரைமரம், மான், வெண்ணெய், ஓமை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பெரு நீர் ஒப்பின் பேஎய் வெண்தேர்; மரன் இல் நீள் இடைமான் நசையுறூஉம்; உவர் எழு களரி ஓமை அம் காட்டு”** (நற்; பா-84; வரி-4-5,8) என்ற வரிகள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

அகன்ற இடத்திலுள்ள கிணற்று நீரை எடுத்துப் பயன்தரும் ஆனிரை குடிக்கும்படி பத்தர் என்னும் குழியில் ஊற்றி பிற உண்ணாதவாறு ஒரு விற்பொறி வைத்து மூடி வைப்பர். அத்தெளிந்த நீரைக் கொல்லும் ஆண்யானை பத்தரின் மேல் வைத்த விற்பொறியை எடுத்து முறித்து விட்டுப் புன்தலைப் பெண்யானையும் கன்றும் நீருண்ண கூட்டிச் செல்லும். அத்தகைய காட்டுப் பகுதி என விளக்க, **“பிடி, களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை, **“புன் தலை மடப்பிடி கன்றோடு ஆர; கொல் களிற்று ஒருத்தல் சுரன் இறந்தோரே?”** (நற்; பா-92; வரி-7,9) இப்பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சாய்ந்த கொடி சுற்றிய முள்ளுள்ள இலவ மரத்தின் ஒளியுள்ள கிளைகள் அதிர்ந்து முறியுமாறு கொடுங்காற்று வீசும் மூங்கில் உள்ள பக்கத்தில் கடும் நடையுடைய யானைக் கன்றுகளோடு வருந்தும்படி நீரில்லாத நிழலற்ற அரிய சுரம் எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"இலவம், மூங்கில், யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"முளி கொடி வலந்த முள் அரை இலவத்து; வெவ்வளி வழங்கும் வேய் பயில் மருங்கில்; கடு நடை யானை கன்றொடு வருந்த"** (நற்; பா-105; வரி-1,3-4) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

பெரிய நகமுடைய பெண்யானை பிளந்திட்ட நார் இல்லாத வெண்மையான கிளைகளையும் பற்றுக் குறடு போன்ற காய்களையும் வெண்மையான பூங்கொத்துக்களையும் உடையது வெப்பாலை என்னும் மரம் புல்லிய இலைகளையுடைய ஓமை மரத்தையுடையதும் புலி வழங்குவதுமான காட்டுப்பகுதி எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"யானை, வெப்பாலை மரம், ஓமைமரம், புலி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்குகின்ற பாடல் வரிகள் பின்வருமாறு, **"பிடி பிளந்திட்ட நார் இல் வெண்கோட்டுக்; கொடிறு போல் காய வால் இணர்ப் பாலை; புல் இலை ஓமைய புலி வழங்கு அத்தம்"** (நற்; பா-107; வரி-2-3,6) என்பதாகும்.

ஆண்மான் அண்ணாந்து நின்றதால் உயர்ந்து விளங்கிய மேலான கிளைகளையும் புல்லிய அடிமரத்தையும் உடைய இலந்தை மரத்தின் கொத்துக்களில் வெளிப்புறமுள்ள பசிய காய்கள் மலை சேர்ந்த சிறு நெறியில் உதிர்ந்து நிறையப் பரவிக் கிடக்கும் அப்பெரிய காட்டுப் பகுதி, எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"மான், இலந்தை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"உழை அணந்து உண்ட இறை வாங்கு உயர் சினைப்; புல் அரை இரத்திப் பொதிப் புறப் பசுங்காய்"** (நற்; பா-113; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

பசிய காய் நல்ல இடத்திலிருந்து நிறம் மாறிச் செங்காய் ஆகும். பின்னர் அது கருங்கனியாகிய கனியாகும். ஈத்த மர மிக்க வெளிய புறத்தினையுடைய களர் நிலத்தில் எழுந்த புழுதி படிந்த கடு நடையுடைய ஆண் யானை மனிதரைப் பெற விரும்பி நாட்காலையில் பாலை நிலத்தில் குறுக்கிடும். அங்கு விரைவில் வரும் அயலாரைக் காணாது தன் சினத்தைப் பனை மரத்தில் மோதித் தீர்த்துக் கொள்ளும். அவ்வாறு பாழ்பட்ட நாட்டின் காட்டுப் பகுதி உள்ளது எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"ஈத்தமரம், ஒருத்தல், பனை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பைங்காய் நல் இடம் ஓரிஇய செங்காய்க்; கருங்கனி ஈந்தின் வெண்புறக் களரி; இடு நீறு ஆடிய கடு நடை ஒருத்தல்; பனைக்கான்று ஆறும் பாழ் நாட்டு அத்தம்"** (நற்; பா-126; வரி-1-3,6) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

செம்மையான மலையில் அருவி அமைந்திருக்கும் நீரில்லாத நீண்ட வழியில் மெல்லிய தலையுடைய இளம்பிடியின் வருந்தும் பசியைப் பெருங்களிறு நீக்கக் கருதியது. களிறு அழித்ததால் முடமான அடியையுடைய ஓமைமரம் செல்லுதற்கரிய காட்டில் செல்வோர்க்குத் தங்கும் நிழலாகும் எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"மடப்பிடி, களிறு, ஓமை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கயந்தலை மடப்பிடி உயங்கு பசி களை இயர்; பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை"** (நற்; பா-137; வரி-6-7) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

கரிய மண் சேறு படிந்த வளைந்த கன்னத்தையும் பெரிய வாயையுமுடைய மேகம் போன்ற யானையின் உடம்பு பட்டுப் பொரிந்த அடிமரத்தையும் நெரிந்த உட்தொளையுள்ள சாயையுமுடைய கொன்றை மரங்கள் உள்ள வெயில் பொலிவு பெறத் தோன்றும் அரிய பாலை நிலம் எனப் பாலை நிலக் காட்டுப்பகுதியினை விளக்க, **"யானை, கொன்றை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"மாரி யானையின் மருங்குல் தீண்டி; பொரி அரை ஞெமிர்ந்த புழற் காய்க் கொன்றை"** (நற்; பா-141; வரி-2-3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சிவந்த அடியையுடைய மராமரத்தின் அழகிய பக்கத்திலே பொருந்திப் போவார். மலைக் குகையில் கிடந்த பெரிய நகத்தையுடைய பெண்புலி குட்டியீன்று நோயும் பசியுமாய்க் கிடக்கும். அதன் துன்பத்தைத் தீர்க்கச் சினம் கொண்டு சிவந்த கண்ணையுடைய பெரிய கொல்ல வல்ல ஆண்புலி உயர்ந்த கொம்பையுடைய ஆண்யானையின் புள்ளியமைந்த முகத்திலே பாயும். அவ்வாறான செல்லுதற்கரிய காட்டுப் பகுதி, எனத் தலைவன் கடந்து சென்ற காட்டுப்பகுதியினை விளக்க, **"மராமரம், புலி, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"செங்கால் மராஅத்து அம்புடைப் பொருந்தி; செங்கண் இரும்புலிக் கோள் வல் ஏற்றை; உயர் மருப்பு ஒருத்தல் புகர் முகம் பாயும்"** (நற்; பா-148; வரி-5,9-10) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இத்தி மரத்தின் பூமியைத் தீண்டாத நெடிய விழுதிலிருந்து தொங்கும் நார். ஊசல் போலக் காற்று வீசும் தோறும் அம்மரத்தின் கீழே துயிலும் பிடியானையை வருடும் காட்டுப்பகுதி எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"இத்தி, பிடி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"வேனில் இற்றித் தோயா நெடுவீழ்; துஞ்சு பிடி வருடும் அத்தம்"** (நற்; பா-162; வரி-9,11) என்றபாடல் வரிகள் விளக்குகின்றன.

தொகுதியையுடைய ஈந்தின் முற்றிய குலைபோன்ற ஆளில்லாத வழியிலுள்ள அடிமரம் திரண்ட அழகிய பனைமரத்தின் குலைகளையுடைய நெடிய மடலில் இருந்து

ஆண்பறவை குரல் மூலம் பெண்ணை அழைத்தால் பனை அடியிலிருந்த புலி எதிர்க்குரல் வழங்கும் காட்டுப் பகுதி எனத் தலைவன் சென்ற காட்டுப் பகுதியினை விளக்க, **"ஈந்து, பனை, புலி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"கற்றை ஈந்தின் முற்றுக் குலை அன்ன; ஆள் இல் அத்தத் தாள் அம் போந்தை; புலி எதிர் வழங்கும் வளி வழங்கு ஆர் இடை"** (நற்; பா-174; வரி-1-2,4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கல்லில் உள்ள ஊற்றில் திரளும் நீரைப் பெரிய சருச்சரையுடைய நீண்ட துதிக்கை நீட்டி ஊற்றுநிலை நீங்கும் படி வாங்கி முகந்து கொண்டு பெரிய கையையுடைய ஆண்யானை பெண்யானையின் எதிரே ஓடும். அவ்வாறு காடு முழுதும் வெப்பமடைந்த வறட்சி மிக்க மலை வழியில் வேனிற் காலத்தில் நிறம் மாறும் ஓதிமுது போத்து பாணன்யாழ் வாசிக்க அதனைக் கேட்டுப் பக்கத்திலுள்ள நீண்டு நிற்கும் யா மரத்தில் ஏறும் தொழிலையுடையதாய் இருக்கும் எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"ஆண்யானை, போத்து, யாமரம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பெருங்கை யானை பிடி எதிர் ஓடும்; வேனில் ஓதி நிறம் பெயர் முது போத்து; நெடுநிலை யாஅம் ஏறும் தொழில்"** (நற்; பா-186; வரி-3,5,7) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

'போத்து' ஆண்பாற் பெயர் என்பதைத் தொல்காப்பியர் நூற்பாவில் இருந்து அறிந்து கொள்ளலாம். ***"எருது, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன்"*** (தொல், மரபு, இளம், நூற்-2) என்பதாகும்.

யாமரம் உயர்ந்து ஓமைமரம் நிரம்பியிருக்கும் காட்டுப் பகுதி எனக் காட்டுப்பகுதியினை விளக்க, **"யா, ஓமை"** போன்ற மரங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள் பின்வருமாறு; **"சேயின் வரூஉம் மதவலி! யா உயர்ந்து; ஓமை நீடிய கான் இடை அத்தம்"** (நற்; பா-198; வரி-1-2) என்பதாகும்.

ஆண்யானை தன் கன்றையும் பெண்யானையையும் தழுவிக் கொண்டு செல்லும் புலியொடு பொருத நீண்ட துதிக்கையுடையது. யானை வயது முதிர்ந்ததால் அதன் கொம்புகளில் முற்றிய பல முத்துக்கள் ஒலிக்கின்றன. வலிமை மிக்க அந்த யானை வலிய மேட்டு நிலத்திலுள்ள வேங்கை மரத்தின் அடிப்பாகத்தை முறித்து தேன் உண்டாக்கும் தேனீக் கூட்டம் பறந்தோடிவிடச் செய்து அவ்வேங்கை மரத்தின் பொன்போன்ற பூக்களையுடைய கிளைகளிலிருக்கும் இலைகளைக் கவளமாகத் தன் கன்றுக்கும், பெண்யானைக்கும் பாதுகாத்து நின்று ஊட்டும் காட்டுப் பகுதி எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **"புலி, மடப்பிடி, வேழம், தேன், வேங்கை"** போன்ற கருப்பொருள்கள்

பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“புலி பொரச் சிவந்த புலால் அம் செங்கோட்டு; மடப்பிடி தழீஇய தடக்கை வேழம்; தேன் செய் பெருங்கிளை இரிய வேங்கை”** (நற்; பா-202; வரி-1,4-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சேய்மை நாட்டு அரிய நெறியில் ஓமை மரத்தின் காய்ந்த கிளைகள் தளர்ந்த நிலையடைந்து அடங்கிய போது சில் வண்டு ஒலிக்கும் எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **“ஓமை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை விளக்கும் பாடல் வரியானது பின்வருமாறு, **“உலவை ஊமை ஒல்கு நிலை ஒடுங்கி”** (நற்; பா-252; வ-1) என்பதாகும்.

பெரிய மலைப் பகுதியிலுள்ள சோலையில் பெரிய புலி சினங் கொண்டு திரியும், மலைப் பிளப்புக்களையுடைய குன்றத்தில் நெடிய மேகம் மின்னச் சிறிய துளிகளாகத் தொடங்கிப் பெரிய மழையைப் பெய்தது. ஆண் மானொடு போந்த பெண்மான் குமிழ மரத்தில் உராய்ந்தது. கலன் அணிந்த பெண் ஒருத்தி பொன்னாற் செய்த காசுகளைப் பரப்பினாற் போலக் குமிழமரம் ஒள்ளிய பழங்களை உதிர்த்தது. அக்குமிழ மரங்கள் நிரம்பிய குறிய பல வழிகளையுடைய காட்டுப்பகுதி எனக் காட்டுப்பகுதியினை விளக்க, **“மான், குமிழமரம், புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“உழை படு மான் பிணை தீண்டலின் இழைமகள்; குமிழ் தலை மயங்கிய குறும் பல் அத்தம்; இரும் புலி வழங்கும் சோலை”** (நற்; பா-274; வரி-3,5,8) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வாள் போன்ற நிறமுள்ளுடைய வரியுடைய ஆண் புலியோடு போரிட்ட ஆண் யானையின் புண்ணுடைய கால் விளங்கித் தெரிவது போலப் பசித்த பிடியானது உதைத்த ஓமை மரத்தின் சிவந்த அடிப்பாகம் ஞாயிறு வெயில் காயும் போது வியங்கித் தெரியும் காட்டுப்பகுதி எனத் தலைவி தலைவன் சென்ற காட்டுப் பகுதியினை விளக்க, **“புலி, யானை, பிடி, ஓமை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நாட் சுரம் உழந்த வாள் கேழ் ஏற்றையொடு; பொருத யானைப் புட்தாள் ஏய்ப்ப; பசிப்பிடி உதைத்த ஓமைச் செவ் அரை”** (நற்; பா-279; வரி-5-7) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நெடுந் தூரத்திலுள்ள நாட்டில் களிறு உதைத்துப் போட்டு கவிழ்ந்து கிடக்கும் மிகுதியான புழுதி வெள்ளையில்லாத வயிரமுள்ள வேலமரம் வளர்ந்த துன்பமுள்ள பழைய வழியை மறைத்து விடும் காட்டுப்பகுதி எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **“களிறு, வேலம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“களிறு**

**உதைத்து ஆடிய கவிழ் கண் இடு நீறு; வெளிறு இல் காழ வேலம் நீடிய”** (நற்; பா-302; வரி-7-8) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

மூங்கிலின் அழகு அழிந்த மலை வழியின் சிறு பாதையில் பருக்கைக் கற்களுள் பள்ளத்தில் ஊறிய சிறிது நீருள்ள பக்கத்தில் அழகிய நுதலையுடைய யானையொடு புலி போரிட்டு நீர் உண்ணும் எனக் காட்டுப் பகுதியினை விளக்க, **“மூங்கில், யானை, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“கழை கவின் அழிந்த கல் அதர்ச் சிறு நெறிப்; பூநுதல் யானையொடு புலி பொருது உண்ணும்”** (நற்; பா-333; வரி-2,4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

களர் நிலத்தில் உயர்ந்தோங்கிய கவையுள்ள முட்களையுடைய கள்ளியின் உச்சியிலே கள்ளிகளால் ஆக்கிய அழகிய கூட்டில் முட்டையிட்டுக் குஞ்சு பொறித்துக் காவல் செய்து கொண்டிருக்கும் வருந்திய நடையுடைய பெண்புறா உண்ணுதற்குப் பசிய முதுகையும் சிவந்த கால்களையும் உடைய ஆண்புறா இரை தேடும். மன்னர்கள் போர் செய்த போர்க்களத்தில் சென்று முதிர்ந்த பாழ் நிலத்திலே சிதறி உதிர்ந்து கிடக்கும் நெல்லைப் பெற்றுக் கொண்டு வந்து கொடுக்கும் காட்டுப் பகுதியினை விளக்க, **“கள்ளி, பெண்புறா, ஆண்புறா, நெல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பைம் புறப் புறவின் செங்காற் சேவல்; களரி ஓங்கிய கவை முடக் கள்ளி; உயவு நடைப் பேடை உணீஇய மன்னர்; முளை கவர் முது பாழ் உரு நெற் பெறூஉம்”** (நற்; பா-384; வரி-1-2,4-5) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**சீறூர்**

மலர்ந்த இருப்பையின் தளிர் பொதிந்திடப் பெற்ற குவிந்த துளையுடைய பூங்கொத்துகள் நூலினின்று அறுந்து விழும் முத்துக்கள் நிலத்தில் உதிரும் குடிகளையுடைய சிறிய ஊர் எனச் சிறிய ஊரினை விளக்க, **“இருப்பை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை விளக்க, **“பூத்த இருப்பைக் குழை பொதி குவி இணர்”** (அகம்; பா-225; வ-11) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பெரிய புலியானது ஆண் யானையைக் கொன்று முழங்கும் ஓசையையுடையது வேடரின் சிறிய ஊர் எனச் சீறூரினை விளக்க, **“புலி, களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **“அருஞ்சுரத்து அல்கியேமே இரும்புலி; களிறு அட்டுக் குழமும் ஓசையும் களிபட்டு”** (அகம்; பா-261; வரி-12-13) என்பதாகும்.

பல கிளைகள் பொருந்திய கொம்பையுடைய முதிய மான்களைத் துரத்திவிட்டுச் சிறிய உணவுப் பொருள்களைக் கொணர்ந்த சிறிய ஊர் எனச் சிறிய ஊரினை விளக்க, **"முதுமான்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது இதனை, **"பல் சுவர் மருப்பின் முதுமான் போக்கி"** (அகம்; பா-283; வ-4) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பசித்த யானையின் கண் போன்று விளங்கும் நீர் இல்லாத சுனையுள் புகுந்து மலைப் பிளம்பில் ஒலிக்கும். அங்கு மெலிந்த காலையுடைய பெண்மான் உண்பதற்கு அதனிடம் விருப்பம் கொண்ட கலைமான், குதிர் போன்ற அடிமரத்தை உடைய இருப்பை மரத்தின் வெண்மையான மலரைத் தான் உண்ணாமல் தன் ஆண் குரல் தோன்ற அழைக்கும். நீர் வெளிப்படும் ஊற்றுக் கண்களையுடைய கிணற்றினைக் கன்றையுடைய இளைய பெண்யானை தன் ஆண்யானையுடன் பார்க்கும் அழகிய குடியிருப்புகள் உடைய சீறூர் எனச் சீற்றூரினை விளக்க, **"யானை, மான், இருப்பை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"பசித்த யானைப் பழங்கண் அன்ன; கதிர்க் கால் அம் பிணை உணீஇய புகல்ஏறு; குதிர்க்கால் இருப்பை வெண்பூ உண்ணாது; ஆண் குரல் விளிக்கும் சேண்பால் வியன் சுரை; கன்றுடை மடப்பிடி களிறொடு தடவரும்"** (அகம்; பா-321; வரி-1,4-6,9) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சிவந்த தளிர்களையுடைய இலுப்பை மரங்கள் அவற்றின் யானைக் கொம்பினைக் கடைந்தாற் போன்ற வெண்மையான பூக்களைப் பெண்கரடிகளின் கூட்டம் கிளைகளில் ஏறிப்பறித்து உண்ணும். கணுக்கள் திரண்ட நீண்ட மூங்கிற் குழாயில் அடைத்து வைத்துக் கொண்டு குன்றிடையே அமைத்த சிற்றூர், எனச் சிற்றூரினை விளக்க, **"இலுப்பை, எண்கு, அமை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"நீடு நிலை அரைய செங்குழை இருப்பை; ஆடு பரந்தன்ன ஈனல் எண்கின்; கண் திரள் நீள் அமைக் கடிப்பின் தொகுத்து"** (அகம்; பா-331; வரி-1,3,6) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

மேற்கு மலையில் கலக்கம் அடைந்த ஆண்மான் தன் ஆண் குரல் தோன்ற அழைக்க மனையைச் சூழ்ந்து வளரும் நொச்சியில் மான்கள் தங்கியிருக்கும் காட்டரண்கள். அதில் கரிய அடிப்பகுதியை உடைய வேங்கை மரத்தையுடைய சிற்றூர் எனச் சிற்றூரினை விளக்க, **"மான், நொச்சி, வேங்கை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **"அலந்தலை மூதேறு ஆண் குரல் விளப்ப; மனை வளர் நொச்சி மாசேர்பு வதிய; முனை உழை இருந்த அம் குடிச் சீறூர்; கருங்கால் வேங்கைச் செஞ்சுவல் வரகின்"** (அகம்; பா-367; வரி-3-6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஈன்ற பருந்து அடைகாக்க உட்கார்ந்து வருந்தும் படியானதும் வானத்தைத் தொடும் உயர்ந்த கிளைகளையுடையதும் பொரிந்த அடி மரத்தையுடையதுமான வேப்ப மரத்தின் புள்ளிகளையுடைய நிழலிலே பொன்னை உரைக்கும் கல்லைப் போல வட்டமான அரங்கு அமைத்துத் தம் தொழில் கல்லாத சிறுவர்கள் நெல்லிக் காயை விளையாட்டுக் கருவியாகக் கொண்டு ஆடுவர். அவரது வெய்ய குடியிருப்பினையுடைய சீறூர் எனச் சீறூரினை விளக்க, **“பருந்து, வேம்பு, நெல்லி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“ஈன் பருந்து உயவும் வான் பொரு நெடுஞ்சினை; பொரி அரை வேம்பின் புள்ளி நீழல்; கல்லாச் சிறாஅர் நெல்லி விட்டு ஆடும்”** (நற்; பா-3; வரி-1-2,4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**கார்கால வருகை**

வெண்காந்தளின் பசிய பயிருடன் அறுகங்கிழங்கையும் நின்று தெவிட்டுதலால் வெறுத்துச் செருக்கிய தடையையும் தலைமையையும் உடைய ஆண்மான் வெண்மானைத் தழுவிக் குளிர்ந்த நீரைப் பருகி ஓரிடத்தே தங்கி விட்டது. இல்லத்தில் உள்ள முல்லை மலரும் இடமான குறிய நொச்சியின் கரிய சினையைச் சுட்டிக் காட்டித் தாம் வேற்று நாட்டில் இருந்துபொருள் ஈட்டும் காலத்து எல்லை அம்முல்லைக்கொடி பூக்கத் தொடங்கும் கார்ப்பருவம் எனக் கார்ப்பருவத்தினை விளக்க, **“காந்தள், ஆண்மான், பெண்மான், நொச்சி, முல்லை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கோடு உடைந்தன்ன கோடற் பைம்பயிர்; அண்ணல் இரலை அமர் பிணை தழீஇ; தாழ்வின் நொச்சி சூழ்வன மலரும்; மௌவல் மாச் சினை காட்டி”** (அகம்; பா-23; வரி-6-7,11-12) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

முதுவேனில் வெயில் வெப்பத்தால் வருந்திய பெண்யானைகள் தத்தம் ஆண்யானைகளுடன் நீர் நிலைகளில் தம் உயர்த்திய கையை மறைக்கும், அளவுக்குப் பெருகி வரும் வெள்ளத்தில் மூழ்கி இன்பமடையும் கார்ப்பருவம் எனக் கார்ப்பருவத்தினை விளக்க, **“மடப்பிடி, களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“என்றூழ் உழந்த புன் தலை மடப்பிடி; கைமாய் நீந்தும் களிற்றொடு படீஇய”** (அகம்; பா-43; வரி-3-4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நல்ல நாள் காலையில் நறுமணமுடைய மலர்களின் பூந்தாது படிந்த புள்ளிகளுடன் கூடிய வரிகளை உடைய மயில் தேனை உடைய பசிய குருத்த மரத்தின் நறுமணம் கமழும் கிளையிலிருந்து தன் துணையை அழைத்திடும். இந்நிகழ்வுக்குக் காரணமான விரைந்து வரும் குளிர்ந்த கார்ப்பருவம் எனக் கார்ப்பருவத்தினை விளக்க, **“வேங்கை, மஞ்ஞை, குருந்து”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நல்**

**நாள் பூத்த நாகு இளவேங்கை; நறுவீஆடிய பொறி வரி மஞ்ஞை; நனைப் பசுங் குருத்தின் நாறு சினை இருந்து"** (அகம்; பா-85; வரி-10-12) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

கருப்பம் கொண்ட பெண் யானை போன்று பலவிடங்களிலும் தோன்றி ஒலிமிக்குப் பெய்வதற்கு ஒருசேரக் கார்காலம் வந்தது எனக் கார்கால வருகையினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"வயவுப்பிடி இனத்தின் வயின் வயின் தோன்றி"** (அகம்; பா-183; வ-8) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

செம்மண்ணை உடைய மேட்டின் மேல் தழைத்த பருவம் வாய்ந்த வரகினது காற்றால் ஒலித்தலை உடைய நாற்றின் மிக்க கருத்த ஓர் இலையை மானின் இளங்கன்று கவ்வி ஒருவேளைப் பசியைப் போக்கிக் கொள்கின்ற கார்காலம் எனக் கார்காலத்தினை விளக்க, **"வரகு, மான்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை விளக்க, **"செவ்வி கொள் வரகின் செஞ்சுவற் கலித்த; நவ்வி நாள்மறி கவ்விக் கடன் கழிக்கும்"** (குறுந்; பா-282; வரி-1,3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கற்களை உருட்டிக் கொண்டு இறங்கிக் கடுமையாக வரும் காட்டாற்றில் மிதந்து வரும் மூங்கில்களை ஒடிக்கும். வெள்ளம் காடுகளை அலைத்து ஓசையிட மேகம் மழை பெய்ய மின்னும் கார்கால வருகையை விளக்க, **"கழை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"கழை மாய் நீத்தம் காடு அலை ஆர்ப்ப"** (நற்; பா-7; வ-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மன்னரின் வினையில் வல்ல யானையின் புள்ளியையுடைய முகத்திலேயணிந்த பொன்னால் செய்யப்பட்ட முகப்படாம் போல துளையையுடைய காய்கள் காய்க்கும் கொன்றையின் கிளையினிடத்தே கொடி போல் பூத்திருக்கும், பூங்கொத்துக்கள் பாறையின் மேல் மென்மையாக மலர்ந்திருக்கும் கார்காலம், எனக் கார்காலத்தினை விளக்க, **"யானை, கொன்றை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"வினைவல் யானைப் புகர் முகத்து அணிந்த; காய்க் கொன்றைக் கோடு அணி கொடி இணர்"** (நற்; பா-296; வரி-2,4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

அணிகலன்களை அணிந்த பெண்கள் போல விரும்பும் படியாகப் பூத்த நீண்ட சுரிந்த பூங்கொத்திலுள்ள விளங்கும் மலரையுடைய கொன்றைக் காடு அழகு பெறப் பூத்துள்ளது. நீல மணியின் நிறம் போன்ற பெரிய புதர்களின் நறும்புகை நிறம் சேர்ந்த நல்ல பூங்கொத்தையுடைய எறுழ மரத்தின் மலர்கள் பரந்து கிடக்கும் எனக் கார்காலத்தின் வருகையினை விளக்க, **"கொன்றை, எறுழ மரம்"** போன்ற மரங்கள் கருப்பொருளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"நீடு சுரி இணர சுடர்வீக் கொன்றைக்; நறை**

**நிறம் படுத்த நல் இணர்த் தெறுழ் வீ"** (நற்; பா-302; வரி-2,5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**தலைவியின் அழகு நலம்**

பெண் யானையின் துதிக்கையைப் போன்ற கூந்தலினை உடைவள் தலைவி எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **"பிடி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"பிடிக் கை அன்ன பின்னகம் தீண்டி"** (அகம்; பா-9; வ-22) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

மலை மூங்கிலைப் போன்ற திரண்ட மென்மையான தோளை உடையவள் தலைவி எனத் தலைவியின் தோளினை விளக்க, **"மூங்கில்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"குன்ற வேயின் திரண்ட என்"** (அகம்; பா-15; வ-18) எனும் பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

வீட்டின் முன்பக்கத்தில் வளர்ந்துள்ள நொச்சியின் மீது படர்ந்துள்ள முல்லைக் கொடியினது வெண்மையான அரும்புகளை வரிசையாய் வைத்தாற் போன்ற வண்டுகள் விரும்புதற்குக் காரணமான வெண்மையான பற்கள். மெல்லிய மூங்கில் போன்ற தோள்களை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"நொச்சி, முல்லை, பணை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"மனை இள நொச்சி மௌவல் வால் முகை; தாழ் மென் கூந்தல் தடமென் பணைத் தோள்"** (அகம்; பா-24; வரி-1,4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தேன் உண்டாகத் தெளிந்த நீரை ஏற்ற திரண்ட தண்டையுடைய குவளை மலரின் சிறந்த அழகைக் கெடுத்தும் அமையாது பருந்துகள் வந்து சூழ மன்னர் தம் போர்களை வென்ற வெற்றி பொருந்திய நல்ல வேல் இரத்தம் தோய்ந்து பிறழ்வது போன்றன தலைவியின் சிவந்த வரிகள் படர்ந்த மையுண்ட கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **"குவளை, பருந்து, தேன்,** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"தெள் நீர்க்கு ஏற்ற திரள்காற் குவளை; பெருந்தகை சிதைத்தும் அமையா பருந்து பட"** (அகம்; பா-27; வரி-13-14) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சிறிய மூங்கிலைப் போன்ற வளைந்த முன் கையையுடைய பெரிய தோளினை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"மூங்கில்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"நுணங்கு அமை புரையும் வணங்கு இறைப் பணைத்தோள்"** (அகம்; பா-33; வ-15) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

ஒரு பெண் மான் தோன்றினாப் போல் தோன்றினாள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“நவ்வி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பரந்து படு பாயல் நவ்வி பட்டென”** (அகம்; பா-39; வ-16) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

முல்லையின் மணம் வாடைக் காற்றுடன் கலந்து வீசும் காடு மணப்பதைப் போன்று மணக்கும் பலவான கூந்தலை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“கொய் அகை முல்லை காலொடு மயங்கி”** (அகம்; பா-43; வ-9) என்பதாகும்.

கூதாள மலர் மணம் கமழும் பக்க மலையிலே வளம் உண்டாக வளரும் மூங்கில் போன்ற தோள்கள் எனத் தலைவியின் தோள் அழகினை விளக்க, **“வேய்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதனை விளக்கும் பாடல் வரியாவது, **“வேய் புரை பணைத் தோள் பாயும்”** (அகம்; பா-47; வ-18) விளக்கப்படுகின்றது.

சந்தன மரங்கள் மிக்கு உயர்ந்த மலையில் உள்ள இனிய சுனையிலே பொருந்திய நறுமணப் பூவினால் அலங்கரித்த கூந்தலை உடையவள் எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“சந்தனம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அத்துவன் பாடிய சந்து கதெழு நெடு வரை”** (அகம்; பா-59; வ-12) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

நெய்தல் மலரின் அரும்பு மலர்ந்த ஒளியுடைய மலரைப் போன்ற அழகையுடைய குளிர்ந்த கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **“நெய்தல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை, **“எய்த வந்தனவால் தாமே நெய்தல்”** (அகம்; பா-83; வ-12) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

கரிய அடிப்பகுதியை உடைய வெண்கடம்ப மரத்தின் சிவந்த காம்பையுடைய வெண்மையான பூங்கொத்துக்களைத் தம் சுருண்டு வளைந்த தலைமயிரில் சூடி இருந்தனர் எனத் தலைவி தன் மயிரில் சூடியிருந்ததை விளக்க, **“கடம்ப”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. என்பதை, **“முந்நீர் ஓட்டிக் கடம்பு அறுத்து இமயத்து”** (அகம்; பா-127; வ-4) இவ்வரியின் மூலம் விளக்கப்படுகின்றது.

நீண்ட கோல் தொழில் உடைய வளையலையும் திருந்திய அணிகளையும் மூங்கில் போன்ற தோளையும், தேன்மணக்கும் கூந்தலையும், கருங்குவளை போன்ற மைபூசப்பெற்ற

கண்களையும் உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"மூங்கில், குவளை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"திருந்து இழைப் பணைத்தோள் தேன் நாறு கதுப்பின்; குவளை உண்கண் இவளொடு செலற்கு என"** (அகம்; பா-129; வரி-15-16) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மயில் இறகின் அடியைப் போன்ற கூரிய பற்கள் சிவந்த வாய் குவளையின் புதிய மலரைப்போன்ற மைதீட்டிய கண்ணைஉடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"மயில், குவளை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"முருந்து எனத் திரண்ட முள்எயிற்றுத் துவர்வாய்; குவளை நாள்மலர் புரையும் உண்கண் இம்"** (அகம்; பா-179; வரி-11-12) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

அழகிய மூங்கில் போன்ற நீண்ட தோளில் படிந்த கூந்தலில் காட்டு மல்லிகையின் அரும்புடன் கூடிய தண்ணிய குவளைமலரை வைத்துக் கட்டப்பட்ட மாலையைச் சூடியவள் எனத் தலைவி சூடிய மலர்களை விளக்க, **"மூங்கில், அதிரல், குவளை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"அம்பணை நெடுந் தோள் தங்கித் தும்பி; தன்முகை அதிரல் போதொடு குவளை"** (அகம்; பா-223; வரி-11,14) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

தாமரை மலர் போன்ற குளிர்ந்த கண்ணின் கருமணியை மறைக்கும் பசலை எனத் தலைவியின் கண்களை விளக்க, **"தாமரை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"பல் இதழ் மழைக்கண் பாவை மாயப்ப"** (அகம்; பா-229; வ-12) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மூங்கிலைப் போன்ற தோளையும், குரும்பைப் போன்ற மென்மையான முலையையும் உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"பனை, குரும்பை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள், **"உள்ளுப தில்ல தாமே பணைத்தோள்; குரும்பை மென்முலை அரும்பிய சுணங்கின்"** (அகம்; பா-253; வரி-21-22) என்பதாகும்.

காட்டில் உள்ள பாதிரியின் ஒளியுடைய மலர்களைக் காட்டு மல்லிகை மலருடன் கலந்து அழகு பொருந்திக் கூந்தலில் செருகி தேன்சிந்தும் வெண்கடம்ப மரத்தின் மலர்களையும் சூடியவள் தலைவி எனத் தலைவி சூடியவற்றினை விளக்க, **"பாதிரி, அதிரல், மராஅம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கானப் பாதிரிக் கருந்தகட்டு ஒள்வீ; வேனில் அதிரலொடு விரைஇ காண்வர; தேம்பாய் மராஅம் அடைச்சி வான்கோல்"** (அகம்; பா-261; வரி-1-2,4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

நெல் கொண்ட நீர் வளம் உடைய வயலில் அரும்பு மலர்ந்த செங்கழுநீர் மலர் போன்றது தலைவியின் கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **“செங்கழுநீர்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஒண்செங்கழுநீர் அன்ன நின்”** (அகம்; பா-269; வ-24) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

குவளை மலரைப் போன்ற கண்களை உடையவள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“குவளை உண்கண் இவளும் நம்மொடு”** (அகம்; பா-285; வ-13) என்ற பாடல் வரி பயன்படுத்தப் பட்டுள்ளது.

பொன் போன்ற மலர்களையுடைய வேங்கையின் புதிய மலரைப் போன்ற தேமலையுடைய மார்பினை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பொன் வீ வேங்கைப் புதுமலர் புரைய”** (அகம்; பா-319; வ-8) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

யாமரத்தின் ஒண்மையான தளிரில் அரக்குப் பொடியைச் சிதறியதைப் போன்று நின் உடலில் அழகிய பசலை பரவும் எனத் தலைவியின் உடல் அழகினை விளக்க, **“யா”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“யாஅ ஒண் தளிர் அரக்கு விதிர்த்தன்ன நின்”** (அகம்; பா-333; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

வளைந்த மூங்கில் போன்ற பருத்த தோள்களை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது இதனை, **“வாங்கு அமைபுரையும் வீங்கு இறைப் பணைத் தோள்”** (அகம்; பா-348; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

குளிர்ந்த பந்தலின் கீழ் வறுமையால் வருந்தி வருபவரைப் பார்த்துக் குளிர்ச்சியாகத் தாழையின் மகரந்தமாகிய பொடியை உதிர்த்த மென்மையான பின்னலுடைய கூந்தலை உடையவள் தலைவி எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“தாழை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“தாது துகள் உதிர்ந்த தாழை அம் கூந்தல்”** (அகம்; பா-353; வ-19) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

தூய்மையான மலரான தாமரைப் பூவில் கரிய இதழ்களையுடைய குவளைமலர் இரண்டைப் பிணைத்து வைத்தாற் போன்ற அழகிய வளையலையுடைய முன்கையினையும் அழகிய உதட்டையும் உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“தாமரை, குவளை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை

விளக்க, **“தூ மலர்த் தாமரைப் பூவின் அம்கண்; மா இதழ்க் குவளை மலர் பிணைத்தன்ன”** (அகம்; பா-361; வரி-1-2) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மலர்களைப் போன்ற மையுண்ட கண்களின் பெண்மானை ஒத்தது தலைவியின் பார்வை எனத் தலைவியின் பார்வையினை விளக்க, **“பிணை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை விளக்கும் பாடல் வரியாவது, **“பிணை ஏர் நோக்கும் பெருங்கவிள் கொளவே”** (அகம்; பா-363; வ-19) என்பதாகும்.

தேனைக் குடிக்க ஆழமான நீரில் நிரையாய் உள்ள இதழ்களை உடைய குவளையின் புதிய இரண்டு மலர்களைப் போல் குளிர்ந்த கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“நெடு நீர் பயந்த நிரை இதழ்க் குவளை”** (அகம்; பா-381; வ-19) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

நுட்பமான கொடியில் பூத்த காட்டு மல்லிகையில் மலர்களைப் பூ விற்பவர் விற்று அவற்றை வாங்கிக்கொள்ளும் இடம் பெறாதவராய் எஞ்சியவற்றைத் தலைவியின் கூந்தலில் சூடியுள்ளாள் எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“அதிரல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வரி மென் முகைய நுண் கொடி அதிரல்”** (அகம்; பா-391; வ-2) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

மயில் தோகையைப் போன்ற கூந்தலில் குவளைப்பூவுடன் விளங்கும் காட்டு மல்லிகையின் பூவையும் சூடியவள் தலைவி எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“மயில், குவளை, காட்டு மல்லிகை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“உரு கெழு மஞ்ஞை ஒலி சீர் ஏய்ப்ப; புகர்இல் குவளைப் போதொடு தெரி இதழ்; வேனில் அதிரல் வேய்ந்த நின்”** (அகம்; பா-393; வரி-22,24-25) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நீர் நிலையில் உள்ள குவளையின் மழைக் காலத்தில் மலர்ந்த கரிய மலர் மழைக்கு எதிர்ப்பட்டாற் போன்ற நீரால் நிறைந்த விருப்பம் தரும் கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது இதனை, **“தண்கயம் பயந்த வண் காற் குவளை”** (அகம்; பா-395; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

பெரிய மனையில் நின்ற நெடிய இல்லத்தில் நிறத்தால் வேங்கை மலர் போல் வீறு பெற்ற சுணங்கினை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க,

**“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“வேங்கை வென்ற சுணங்கின்”** (ஐ.நூறு; பா-324; வ-4) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

மான் போன்ற நீண்ட கண்களையுடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மான்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. என்பதனை, **“நெடுமான் நோக்கி! நின் உள்ளி வரவே”** (ஐ.நூறு; பா-360; வ-5) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

அழகிய சிலவாகிய கூந்தலையும் சிறிய பெண்மானைப் போன்றவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மான்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“பெருமடமான் பிணை அலைத்த”** (ஐ.நூறு; பா-394; வ-4) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

அழகிய மூங்கிலையும் போன்ற பெருமையுடைய மென்மையான தோள்கள் மணம் பொருந்திய வண்டுகள் விரும்பும் முல்லை முகையைப் போன்ற ஒழுங்கையுடைய வெண்மையான பற்கள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“பணை, முல்லை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“அணை மருள் இன் துயில் அம் பணைத்தடமென் தோள்; மண மௌவல் முகை அன்ன மாவீழ் வார் நிரை வெண்பல்”** (கலி; பா-14; வரி-1,3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மூங்கில் போன்ற இரண்டு தோள்களை உடையவள் எனத் தலைவியின் தோளினை விளக்க, **“அமை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அமைக் கவின் கொண்ட தோள் இணை மறந்தே”** (கலி; பா-21; வ-14) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

முல்லையின் அரும்புகளைப் போன்று வரிசையாய்த் தோன்றிய பற்களை உடையவள் தலைவி எனத் தலைவியின் பற்களினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“நறு முல்லை நேர் முகை ஒப்ப நிரைத்த”** (கலி; பா-22; வ-9) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

வெண்கடப்ப மலரையுடைய வேனிற் காலத்தில் மலர்ந்த அழகிய கிளையினிடத்தில் மணக்கின்ற நன்மனம் பரவிய விளக்கத்தையுடைய நெற்றியை உடையவள் எனத் தலைவியின் நெற்றியினை விளக்க, **“மராஅம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“சிலம்பு அணி கொண்ட வலம் சுரி மராஅத்து”** (குறுந்; பா-22; வ-3) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆழமுள்ள சுனையிடத்து மலர்ந்த குவளை மலர்களோடு சேர்த்துக் கட்டிய காட்டு மல்லிகையின் மணங்கமழும் நெற்றியுடையவள் தலைவி எனத் தலைவியின் நெற்றியினை விளக்க, **"குவளை, குளவி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"குவளையொடு பொதிந்த குளவி நாறு நறு நுதல்"** (குறுந்; பா-59; வ-3) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

அசைகின்ற மூங்கிலை ஒத்த அழகினையும் பருத்த தோள்களையும் உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"அமை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"ஆடு அமை புரையும் வனப்பின் பணைத் தோள்"** (குறுந்; பா-131; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

நீரில் விடும் தெப்பத்தைப் போன்ற வளைந்த சந்திரனை உடைய மூங்கிலனைய தோள்களை உடையவள் தலைவி எனத் தலைவியின் தோள் அழகினை விளக்க, **"பணை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"புனற் புணை அன்ன சாய் இறைப் பணைத் தோள்"** (குறுந்; பா-168; வ-5) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மூங்கிலைப் போன்ற தோள்களை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"பணை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது இதனை, **"வந்தன்று பெருவிரல் தேரே பணைத் தோள்"** (குறுந்; பா-338; வ-6) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

சிறுபிடி போன்றவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"பிடி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"செல்லா தீமோ, சிறு பிடி துணையே!"** (குறுந்; பா-390; வ-2) என்ற பாடல் வரியானது விளக்குகிறது.

பொரி போன்ற பூக்களையுடைய புன்க மரத்தின் அழல் போன்ற ஒள்ளிய தளிர்களைத் தலைவி தன் கொங்கைகளில் அழகு உண்டாகும்படி பூசிக் கொண்டால் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **"புன்கம்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"பொரிப் பூம் புன்கின் அழல் தகை ஒண் முறி"** (நற்; பா-9; வ-5) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

கரிய கொடியையுடைய காட்டு மல்லிகைப் பூவோடு தூய பொன்தகடு போன்ற பாதிரிப் பூவையும் சேர்த்துச் சூடிய கூந்தலினை உடையவள் எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **"காட்டு மல்லிகை, பாதிரி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"மாக்கொடி அதிரற் பூவொடு பாதிரித்"** (நற்; பா-52; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

கரிய இதழ்களையுடைய குவளையின் வண்டுபடும் சிறந்த போதானது கமழும் கூந்தலை உடையவள் தலைவி எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை, **“குடவரைச் சுனைய மா இதழ்க் குவளை”** (நற்; பா-105; வ-8) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பெரிய மெல்லிய மூங்கில் போன்ற தோளை உடையவள் எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“மூங்கில்”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரிகள் பின்வருமாறு **“தடமென் பணைத்தோள் மட நல்லோள்வயின்”** (நற்; பா-137; வ-2) என்பதாகும்.

தலைவியின் அழகிய மையுண்ட கண்கள் குவளை மலர்களைப் போன்றன. தலைவியின் தோள்கள் மூங்கில் போன்றன எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“குவளை, மூங்கில்”** போன்ற கருப்பொருள்கள் மூலம் விளக்கப்படுகின்றன. இதனை, **“போதும் பணையும் போலும் யாழ நின்”** (நற்; பா-166; வ-9) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

குவளை போன்ற மையுண்ட கண்களையுடைய தலைவி தனியாக இருந்தால் கொல்லையில் வளைந்த முள்ளையுடைய ஈங்கையின் நெடிய கரிய அழகிய தளிரின் மீது விரைவையுடைய மழை நீர் மலியப் பெய்த போதுண்டான அழகிய நிறம் போன்ற தலைவியின் மாமையழகு எனத் தலைவியின் அழகு நலத்தை விளக்க **“குவளை, ஈங்கை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“குவளை உண்கன் இவள் ஈண்டு ஒழிய; கொடு முள் ஈங்கை நெடு மா அம் தளிர்”** (நற்; பா-205; வரி-6,9) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

திரண்ட தண்டுள்ள குவளை மலர் மணம் வீசும் கூந்தலை உடையவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலத்தினை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“குவளை நாறும் கூந்தல் தேமொழி”** (நற்; பா-262; வ-7) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

இளவேனிலை எதிர் பார்த்து மலரும் காட்டு மல்லிகை மலர் பருத்த அடிமரத்தோடு குறுகிய நுண்ணிய மயிரையுடைய சிறந்த பூக்களைக் கொண்ட பாதிரி மலர், நறுமணமுள்ள செங்கருங்காலி மலர் ஆகிய மூன்று மலர்களையும் கொய்து ஒன்றாகச் சேர்த்து ஒரு செப்பின் உள்ளே அடைத்து வைத்திருந்து பின்பு அப் பூக்களடங்கிய அச்செப்பைத் திறந்து வைத்தது போன்ற நறுமணம் ஒருங்கே அமையப் பெற்ற கூந்தலினையுடையவள் தலைவி எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“மல்லிகை, பாதிரி, செங்கருங்காலி மலர்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை,

**“முதிரா வேனில் உதிரிய அதிரல்; பராரைப் பாதிரிக் குறு மயிர் மாமலர்”** (நற்; பா-337; வரி-3-4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நீலமணி போன்ற கூந்தலை மாசு அறக் கழுவி கூதிர் காலத்தில் மலரும் முல்லையில் குறும் காம்பு நீக்கிய மலர்களை முடிந்தவள் வண்டு மொய்க்கும் பலவான மெல்லிய கூந்தலையுடையவள் எனத் தலைவியின் கூந்தலினை விளக்க, **“முல்லை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“கூதிர் முல்லைக் குறுங்கால் அலரி”** (நற்; பா-366; வ-5) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பாதையில் நல்ல நாட்காலையில் மலர்ந்த வேங்கையின் பொன்போன்ற புதுமலர்கள் உதிர்ந்து பறந்து கிடக்கும். அந்த மலரின் மேல் அன்னம் நடப்பது போலத் தலைவி நடந்து வந்தால் இவ்வாறு தலைவியின் நடையழகினை விளக்க, **“வேங்கை, அன்னம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரியானது, **“நல் நாள் வேங்கைப் பொன் மருள் புதுப்பூப்”** (நற்; பா-384; வ-7) என்பதாகும்.

**வரலாற்றுச் செய்திகள்**

**பொதினி மலை**

வண்டுகள் மொய்க்குமாறு மலர்ந்த பூக்களால் ஆன கண்ணியையும் ஒண்மையான கழலையும் உடைய அஞ்சத்தக்க குதிரைகளையுடைய மழவரைவென்று புறம்காட்டி ஓடச் செய்த சிறந்த போர் ஆற்றலை உடைய வேளிர்குலத் தலைவனான, ‘‘ஆவி’’ என்னும் மன்னருக்குரிய அறுத்துத் திருந்திய கொம்பினையுடைய யானை நிற்கும் முருகப் பெருமான் வீற்றிருக்கின்ற பொதினிமலை எனப் பொதினி மலையினை விளக்க, **“குதிரை, யானை, முருகன்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“உருவக் குதிரை மழவர் ஒட்டிய; முருகன் நற்போர் நெடு வெள்ஆவி; அறுகோட்டு யானைப் பொதினி ஆங்கண்”** (அகம்; பா-4; வரி-2-4) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**பண்ணி**

குறவர் முருகப் பெருமானை வணங்கித் தந்த சந்தனமாகிய ஆரமும் மராமும் ஆகிய இந்தப் பெரிய இருவகை ஆரங்களையும் அழகுற அணிபவன் பாண்டிய மன்னன். அவனுடைய படைத் தலைவனும் குடியினின்று பிடிக்கப்பட்ட பழகாத காட்டு யானைகளை உரிய மொழிகளால் தொழிலை அறிவிக்கும் சிறிது காலமே அல்லாது தனக்கென வரைந்து வைத்துக் கொள்ளும் தன்மையில்லாது இரவலர்க்கு ஈந்துவிடும் வள்ளன்மையுடைய கூர்மை வாய்ந்த அம்பையுடைய கோட்டூர்க்குத் தலைவன் பண்ணி என்பவன் எனப் பண்ணி என்பவனின் வரலாற்றினை விளக்க, **“முருகன், சந்தனம், யானை”**

எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“குறவர் தந்த சாந்தின் ஆரமும்; குழியில் கொண்ட மராஅ யானை”** (அகம்; பா-13; வரி-4,7) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**நன்னன்**

முகபடாத்தை உடைய யானையையும் ஒளிரும் அணிகலன்களையும் உடைய நன்னன் என நன்னனின் வரலாற்றினை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“சூழி யானைச் சுடர்ப் பூண் நன்னன்” (அகம்; பா-15; வ-10)** என்பதாகும்.

**துளுநாடு**

பசிய காய் முற்றின பாகற்பழத்தைத் தின்னும் பறை போன்ற வட்டமான கண்களையுடைய தோகைகளையுடைய மயில்கள் மிக்க சோலைகளையுடைய துளுநாடு எனத் துளு நாட்டினை விளக்க, **“மயில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பாகல் ஆர்கைப் பறைக் கட் பீலித்”** (அகம்; பா-15; வ-4) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**கொற்கைப் பட்டினம்**

வடக்குத் திக்கில் உள்ள வேங்கடமலை தோற்றுவித்த வெண்மையான கொம்புகளைக் கொண்ட சிறந்த யானைப் படையினாலே மறத்தன்மை கொண்ட போர்த் தொழில் செய்கின்ற பாண்டிய மன்னர் அறநெறி நின்று காவல் செய்கின்ற கொற்கைப் பட்டினம் எனக் கொற்கைப் பட்டினத்தை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வேங்கடம் பயந்த வெண்கோட்டு யானை”** (அகம்; பா-27; வ-7) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

**பாண்டியன்**

பொலிவற்ற கிளைகளையும் குறிய அடியையும் உடைய இற்றி மரத்தின் நீண்ட விழுதானது பெரிய பெருக்கையுடைய உருண்டைக் கல்லைத் தீண்டிக் காற்று வீசுவதால் பெரிய கையையுடைய யானை கையை உயர்த்தினாற் போல் விளங்கும். இத்தகைய பிடரி மயிரை உடைய குதிரைகளை உடைய கொடி கட்டப்பட்ட தேரினைப் பாண்டியன் எனப் பாண்டியன் வரலாற்றினை விளக்க, **“இற்றி, யானை, குதிரை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன, இதனை விளக்க, **“குறுங்கால் இற்றிப் புன் தலை நெடு வீழ்; பெருங்கை யானை நிவப்பின் தூங்கும்; கொய்ச் சுவற் புரவிக் கொடித் தேர்ச் செழியன்”** (அகம்; பா-57; வரி-6,8,14) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பாண்டியன் நெடுஞ்செழியனின் வீரத்தினை விளக்கும் செய்தி பின்வருமாறு; ***"பாண்டியன் நெடுஞ்செழியன் ஆலங்கானம் என்னும் இடத்தில் சேரன், சோழன் மற்றும் 5 சிற்றரசர்களையும் வென்றான். ஆதலால் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்று போற்றப் பட்டான்."*** (டாக்டர் ந.சுப்பிரமணியம்; சங்க கால வாழ்வியல்; ப-210) என்பது விளக்கப்படுகின்றது.

**புல்லி**

தலைமையுடைய யானைகளின் வெண்மையான கொம்புகளைக் கவர்ந்து கொண்டவன் அக் கொம்புடன் கள்ளை விற்றுக் கொண்ட நெல்லால் நாட்காலத்தே களியாட்டம் அயர்கின்றவன் மழவரின் நிலத்தை வணங்கச் செய்தவன் புல்லி என்பவன் எனப் புல்லி என்பவனின் வரலாற்றினை விளக்க, **"யானை, நெல்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"அண்ணல் யானை வெண்கோடு கொண்டு; நறவு கொண்ட நெல்லின் நாள் மகிழ் அயரும்"** (அகம்; பா-61; வரி-9-10) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**மோரிய மன்னர்**

சிறிய இலையையும் பருத்த அடியையும் உடைய நெல்லியின் புளிப்பையுடைய காயினைக் காட்டில் இளைய மரைமானின் கூட்டம் தின்கின்ற வெப்பம் மிக்கவழி என்றும் பாராமல் துன்பத்தை இன்பமாகக் கொண்டு வானத்தைத் தொடும் பெரிய மலையிடத்து இயங்குகின்ற தேரையுடைய மோரிய மன்னர் என மோரிய மன்னர் பற்றி விளக்க, **"நெல்லி, மரைமான்"** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"பராரை நெல்லி அம் புளித்திரள் காய்; கான மட மரைக் கண நிரை கவரும்"** (அகம்; பா-69; வரி-7-8) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**விளங்கில் நகர்**

பகைவரின் ஒளிரும் வேலையுடைய போர்க் களத்தினை யானைகள் மடிய வெல்லும் மிக்க வன்மையுடைய 'கடலின்' என்பவனின் 'விளங்கில்' என்னும் நகரம், என விளங்கில் என்னும் நகரத்தினை விளக்க, **"களிறு"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **"ஒளிறு வேல் அழுவம் களிறு படக் கடக்கும்"** (அகம்; பா-81; வரி-12) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**திருவேங்கடமலை**

வெண்கடம்பின் மணம் கமழ்கின்ற புதிய மலர்களைச் சுருண்ட தலைமயிரின் கண் தலையாட்டம் போல் அசையுமாறு அணிந்து உரல் போன்ற அடியை உடைய இளம்

பெண் யானை காட்டில் அலறுமாறு அதன் ஆண் கன்றைப் பிரித்துக் கொண்டு மகிழ்ச்சி உடையவராய் ஆரவராம் மிக்கார் ஆயினர். வலிய அடிமரத்தை உடைய வெண்கடம்ப மரத்தின் வளமான கொம்பைப் பிளந்து அதினின்று உரித்த பெரிய வெண்மையான நார்க் கயிற்றால் யானைக் கன்றை அழுந்தக் கட்டிக் கொணர்ந்து பெரிய கொடிகள் அசையும் கடைத் தெருக்களையுடைய ஊரில் கள் விற்கும் நல்ல வீட்டின் வாயிலில் பிணிப்பர். அவர் தம் வேட்டுவத் தொழிலேயல்லாது வேற்றுத் தொழிலை அறியார். அத்தகைய வேடர்க்குத் தலைவன் புல்லி. அவனது பரந்த இடத்தை உடைய நல்ல நாட்டில் உள்ள திருவேங்கட மலை எனத் திருவேங்கட மலையை விளக்க, **“மராஅம், மடப்பிடி, களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வலம் சுரி மரா அத்துச் சுரம் கமழ் புதுவீச்; சுரி ஆர் உளைத் தலை பொலியச் சூடி; கறை அடி மடப்பிடி கானத்து அலற; களிற்றுக் கன்று ஒழித்த உவகையர் கலி சிறந்து; கருங்கால் மரா அத்துக் கொழுங் கொம்பு பிளிந்து”** (அகம்; பா-83; வரி-1-5) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

பெரிய யானையையும் வீரத்துடன் புரியும் போரையும் உடைய புல்லி என்பவனின் வேங்கடமலை என வேங்கட மலையினை விளக்க, **“யானை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“மாஅல் யானை மறப்போர் புல்லி”** (அகம்; பா-209; வ-8) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

திண்மையான கொம்பை உடைய வன்மையான களிறு, வெண்கடம்ப மரத்தை உராயும் போதெல்லாம் வெண்சுண்ணாம்பு பரவியது போல அம்மரத்தின் பூக்கள் உதிரும். அவை குளிர்ந்த மழையுடன் விழும் பனிக்கட்டி போலவும் உழவரின் வெண்ணெல்லின் விதை போலவும் பாறையின் மீது காய்ந்து கிடக்கும் இயல்பு கொண்ட குளிர்ந்த சோலைகளையுடையது வேங்கடமலை. இவ்வாறு வேங்கட மலையினை விளக்க, **“வயக்களிறு, வெண்ணெல், மராஅம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கதை விரிந்தன்ன பல்பூ மராஅம்; திண்நிலை மருப்பின் வயக்களிறு உரிறுதொறும்; வெண்ணெல் வித்தின் அறைமிசை உணங்கும்; பனிபடு சோலை வேங்கடத்து உம்பர்”** (அகம்; பா-211; வரி-2,4,6-7) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**வேங்கடமலை (திரையன்)**

மெல்லிய நடை வாய்ந்த இளைய பெண் யானையினதும் அதன் கன்றினதும் பசியைப் போக்குவதற்குப் பசுமையான கண்ணையுடைய ஆண் யானை மூங்கிலின் இளைய முளையினைக் கொண்டு வந்து உண்ணச் செய்யும். இத்தகைய இயல்பு கொண்ட

வெற்றி பொருந்திய வேலையுடைய ‘திரையன்’ என்பவனது வேங்கடம் என்னும் மலை, என வேங்கட மலையினை விளக்க, **“மடப்பிடி, யானை, மூங்கில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை விளக்கும் பாடல் வரிகள் பின்வருமாறு; **“ஈன்று நாள் உலந்த மெல் நடை மடப்பிடி; கன்று பசி களைஇய பைங் கண் யானை; முற்றா மூங்கில் முளை தருபு ஊட்டும்”** (அகம்; பா-85; வரி-6-8) என்பதாகும்.

**ஒடுங்காடு**

கரிய நிறம் உடைய இரலை மான்கள் உறங்கும் பரற் கற்களால் உயர்ந்த கற்குவியலில் அஞ்சாமை உடைய மழ நாட்டினர் பசுக்களைக் களவு செய்பவர்க்கு உதவியாய் வளர்ந்த நீண்ட அடியை உடைய ஆசினிப் பலவின் மரங்களையுடையது. ஒடுங்காடு என்னும் ஊர் என்பதை விளக்க, **“மான், பசு, பலா”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“இரலை சேக்கும் பரல் உயர் பதுக்கைக்; நெடுங்கால் ஆசினி ஒடுங்காட்டு உம்பர்”** (அகம்; பா-91; வரி-10,12) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**குடநாடு**

வளைந்த கொம்பை உடைய எருமை தான் மேய்ந்த தாமரையை வெறுக்குமானால் வளைந்த தன்மையுடைய பலாவின் கொழுவிய நிழலில் தங்குதற்கு இடமானது குடநாடு எனக் குடநாட்டின் வளத்தினை விளக்க, **“எருமை, தாமரை, பலா”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“தடசிவப்பு எருமை தாமரை முனையின்; முடம் முதிர் பலவின் கொழு நிழல் வதியும்”** (அகம்; பா-91; வரி-15-16) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**கருவூர்**

வரிபொருந்திய நெற்றியையும் வாயில் புகும் மதநீரையும் வலிமை விளங்கும் மறத்தன்மை ஆற்றலுடன் பகைவர் படையை அணுகி ஆளைப் பற்றி நிலத்தில் அறைந்து கொல்லும் தொழிலில் தவறாத அச்சம் வருதற்குக் காரணமான ஆண்யானையையும் தவறாத அச்சம் வருதற்குக் காரணமான ஆண் யானையையும் பெரிய தேரினையும் உடைய சேரனின் செல்வம் மிக்க தலைநகரம் கருவூர் எனக் கருவூரினை விளக்க, **“யானை, மா”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கடும்பகட்டு யானை நெடுந் தேர்க் கோதை; திருமா வியல் தகர்க் கருவூர் முன்துறை”** (அகம்; பா-93; வரி-20-21) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**அ∴தை**

புன்மையான தலையை உடைய இளைய பெண் யானைகளைத் தன்னைப் பாடி வருகின்ற பாணர் தலைவனுக்குப் போர்க் களத்தில் பரிசிலாக வழங்கும் வள்ளன்மையால் இன்பம் கொள்பவன் அ∴தை, என அ∴தையைப் பற்றி விளக்க, **"பெண்யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"புன்தலை மடப்பிடி அகவுநர் பெருமகன்"** (அகம்; பா113-; வரி-3) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

**அஞ்சி**

பிறைச் சந்திரனைப் போன்ற வெண்மையான கொம்பை உடைய பெருமையுடைய யானைகளையும் சினம்மிகுந்த வலிமையுடன் தாவிச்செல்லும் குதிரையையும் உடையவன் அஞ்சி என்பான் என அஞ்சியினை விளக்க, **"யானை, மான்"** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பிறை மருள் வான் கோட்டு அண்ணல் யானை; சினம் மிகு முன்பின் வாம் மான், அஞ்சி"** (அகம்; பா-115; வரி-13-14) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**வாணனின் சிறுகுடி**

பெரிய அடியை உடைய மாமரத்தின் முறையாக முற்றிய வெண்மையான பழத்தை வளைந்த காலையுடைய ஆமை தன் பார்ப்புடன் உண்ணும் நீர்நிலைகள் சூழ்ந்துள்ள புது வருவாயையுடைய வாணனது சிறுகுடி, என வாணனின் சிறுகுடியினை விளக்க, **"மா, ஆமை"** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை **"நெடுங்கால் மா அத்து ஊழுறு வெண்பழம்; கொடுந் தாள் யாமை பார்ப்பொடு கவரும்"** (அகம்; பா-117; வரி-15-16) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**கரிகால் வளவன்**

விரைவான ஓட்டத்தை உடைய நல்ல குதிரைப் படையுடன் கூடிய பகைவர்க்கு அச்சம் தரும் புலத்தில் தங்கிய பெரிய வளத்தை உடையவன் கரிகால் வளவன் எனக் கரிகால் வளவனை விளக்க, **"பரி"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"விரி உளைப் பொலிந்த பரியுடைய நல்மான்"** (அகம்; பா-125; வ-16) என்ற வரி பயன்பட்டுள்ளது.

**இடையாற்று மங்கலம்**

பெருவயலில் விளைந்த நெல்லின் வளைந்த கதிரை முறித்துப் பசிய அவலாகக் குற்றுவர். அவர்கள் இடிக்கும் கரிய வயிரமாகிய உலக்கையின் கடிதான இடிக்கு அஞ்சிய நிறைந்த கருப்பமுடைய வெண்கொக்கு இனிய குலையையுடைய வாழையின் உயர்ந்துள்ள

மடலில் இல்லாமல் நெடிய மாமரத்திற்குச் செல்வதற்காகப் பறந்து செல்லும் இயல்புடையது கெட்ட குடிகளைத் தாங்கும் மிக்க புகழையும் வெல்லும் போரையும் உடைய கரிகால் வளவனின் இடையாற்று மங்கலம் என இடையாற்று மங்கலம் என்னும் ஊரினை விளக்க, **"நெல், வெண்குருகு, வாழை, மா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்; கடிது இடி வெரீஇய கமஞ்சூல் வெண்குருகு; தீம்குலை வாழை ஓங்குமடல் இராது; நெடுங்கால் மாஅத்துக் குறும்பறை பயிற்றும்"** (அகம்; பா-141; வரி-17,19-21) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

### கொடுமுடி

சேரமன்னரின் மதநீர் வழியும் கன்னத்தையுடைய சிறிய கண்ணையுடைய யானையினது கொம்பினை ஒடியும்படி அழித்தவன் கொடுமுடி என்பவன் எனக் கொடுமுடி என்பானின் திறனை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. என்பதனை **"மிஞிறு மூசு கவுள சிறுகண் யானைத்"** (அகம்; பா-159; வ-16) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

### நன்னனின் மலை

எருதுகளின் வலிய கழுத்துகளில் நுகத்தை வைத்து உப்பு வணிகர் அவற்றை அதட்டி ஓட்டும்பொழுது எழும் ஓசைக்கு அஞ்சி ஆணும் பெண்ணுமான மான்கள் இனம் ஓடும் கோடைக் காலத்தில் வற்றிய அழகிய பெரிய நீண்ட மூங்கிலின் கணுக்கள் பிளக்கத் தெறிக்கும் இனியகளிப்பைத் தரும் கள்ளையும் தேரையும் உடைய நன்னனின் மலைப்பகுதி என நன்னனின் மலையினை விளக்க, **"மான், பிணை, மூங்கில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"உழைமான் அம்பிணை இனன் இரிந்து ஓட; நின்றுதின் விளிந்த அம்பணை நெடுவேய்"** (அகம்; பா-173; வரி-11,13) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

### பண்ணன்

சிறு கண்ணையுடைய கரிய பெண் யானையின் பெரிய கையைப் போன்று ஒன்றாய்ச் சேர்த்துப் பின்னப்பட்ட நெய் பூசப்பட்ட நறுமணம் கொண்ட கூந்தலில் நறுமணம் வாய்ந்த மலரைச் சூட்டவும். வெற்றி பொருந்திய வேலின் இலையின் நிறம் மாறிச் செந்நிறம் அடையச் செலுத்திப் பகைவரின் மலை போல் யானைகளைப் போரில் அழித்தவன் பண்ணன் எனப் பண்ணனின் வரலாற்றினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை **"மலைமருள் யானை மண்டு அமர் ஒழித்த"** (அகம்; பா-177; வ-15) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**பாண்டியன்**

போர்ச்செயலில் பயின்ற யானைகளையுடைய வெற்றியையுடைய பாண்டியன் எனப் பாண்டியனின் திறனை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வினைநவில் யானை விறற்போர்ப் பாண்டியன்”** (அகம்; பா-201; வ-3) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**சோழ மன்னன்**

சோழ மன்னனின் வெண்ணெல் விளையும் ஊர்களையுடையவன் எனச் சோழ மன்னனின் புகழினை விளக்க, **“வெண்ணெல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது என்பதை, **“வெண்ணெல் வைப்பின் நல்நாடு பெறினும்”** (அகம்; பா-201; வ-13) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**கொல்லி மலை**

சேர மன்னருக்கு ஓரி என்பவன் விட்டுக்கொடுத்த பலா மரத்தின் பயன் மிக்க கொல்லிமலை எனக் கொல்லி மலையினை விளக்க, **“பலா”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“செவ்வேர்ப் பலவின் பயம் கெழு கொல்லி”** (அகம்; பா-209; வ-15) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**தொண்டையர்**

போர்த்தொழில் பயின்ற யானைகளையுடைய வலிய போர் ஆற்றல் வாய்ந்தவர் தொண்டையர் எனத் தொண்டையரை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. என்பதை, **“வினைநவில் விறற்போர்த் தொண்டையர்”** (அகம்; பா-213; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**வழுதுணைத் தழும்பன்**

பிடி மிதித்தமையால் உண்டான வழுதுணங்காய் போன்ற தழும்பை உடையவன் வழுதுணைத் தழும்பன் என அவனின் வரலாற்றினை விளக்க, **“பிடி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பிடிமிதி வழுதுணைப் பெரும் பெயர்த் தழும்பன்”** (அகம்; பா-227; வ-17) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**உறையூர்**

நிணத்தினது கொழுவிய துண்டுகளைத் தினையரிசியால் ஆக்கிய சோற்றுத் திரளில் சொரிந்த கலத்துடன் பெரிய நெற்கதிர்கள் சுழலும்வயலில் முற்றிய கரும்பின் தண்டைப்

பிழிந்து அழகிய இனிய சாறுசுட்ட பாகுடன் பாலையும் வார்த்துச் செந்நெல்லால் ஆன பசிய அவலைப் பாணர் முதலியவர்க்கும் தரும் உறையூர் என உறையூர் பகுதியினை விளக்க, **“தினை, கரும்பு, செந்நெல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“மென்தினைப் புன்கம் உதிர்ந்த மண்டையொடு; இருங்கதிர் அலரும் கழனிக் கரும்பின்; பால்பெய் செந்தெற் பாசவல் பகுக்கும்”** (அகம்; பா-237; வரி-10-11,13) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**வெட்சி வீரர்**

புலியைப் போல் முழங்கும் சிவந்த கண்ணையுடைய வெட்சி வீரர் என வெட்சி வீரரை விளக்க, **“புலி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“புலிஎன உலம்பும் செங்கண் ஆடவர்”** (அகம்; பா-239; வ-3) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

**எருமை (வடுக குலம்)**

உள் தொளையுடைய மூங்கில் குழாய்க்குள் உணவை இட்டு வைத்த உணவை உடைய கோவலரின் பசுத் தொழுவறையைக் கவர்ந்தும் கொட்டிலில் உள்ள கன்றுகளையுடைய ஆனிரையைக் கவர்ந்து மன்றம் நிறையுமாறு செய்த வடுகக் குலத் தோன்றல் **“எருமை”** என்பவன், என எருமை என்பவனைப் பற்றிக் கூற, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“அம் தூம்பு அகல் அமைக் கமஞ்செலப் பெய்த”** (அகம்; பா-253; வ-15) என்ற இவ்வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**பறம்பு மலை**

மலைபோன்ற களிறுகளுடன் நல்ல அணிகளையும் அளிக்கும் சிறந்த புகழுடையது பாரியின் பறம்புமலை எனப்பறம்பு மலையினை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வரைபுரை களிற்றொடு நன் கலன் ஈயும்”** (அகம்; பா-303; வ-19) என்ற வரியானது விளக்குகின்றது.

**மன்னர்கள்**

வெற்றி வேலையும் தலைமையையுடைய யானையையும் உடைய மன்னர்கள் என மன்னர்களின் செழிப்பினை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“அண்ணல் யானை அடுபோர்வேந்தர்”** (அகம்; பா-373; வ-16) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

**கட்டி**

கஞ்சங் குல்லையாகிய கண்ணியைப் பணிந்த வடுகருக்குரிய இடத்திற்கு முன்னேயுள்ளதாகிய பலவாகிய வேற்படையையுடைய கட்டி என்பவன் எனக் கட்டி என்பவனைப் பற்றி விளக்க, **"குல்லை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. என்பதை விளக்கும் பாடல் வரியாவது பின்வருமாறு, **"குல்லைக் கண்ணி வடுகர் முனையது"** (குறுந்; பா-11; வ-5) என்பதாகும்.

**பழையன்**

வெண்மையான கொம்பானைகளையுடையவன் பழையன் ஆவான் எனப் பழையனின் சிறப்பை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"வெண்கோட்டு யானைப் போஓர் கிழவோன்"** (நல்; பா-10; வ-7) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பழையனின் வரலாற்றினை விளக்கும் செய்தியாவது பின்வருமாறு ***"பழையன் என்பவன் சோழ மன்னர்களின் ஆளுமைக்குட்பட்டு ஆட்சி செலுத்திய குறுநிலமன்னன். சோழ நாட்டின் 'போஓர்' என்னும் பகுதியைக் காவல் செய்தவன். இவனுடைய வேற்படை சோழர்க்கு எப்போதும் வெற்றியைத் தேடிதரும். ஆதலால் பழையன், 'சோழன் மறவன்' என்று பாராட்டப்பட்டான்"*** (ந.மு. வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ); அகநானூறு மணிமிடைப் பவளம்; பா.எ.326; வ-6) என்பர்.

**சாய்க்காடு**

செவ்விய மெல்லிய மயிரை நிரைத்து வைத்தாற் போன்ற நீண்ட திரட்சியுடைய வளைந்த நெற்கதிர்களையுடைய வயல்களில் அன்னம் உறங்கும். அவ்வாறு பொலிவு பெற்ற கொல்லைகளையுடைய சாய்க்காடு எனச் சாய்க்காடு என்னும் ஊரினை விளக்க, **"நெல், அன்னம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"செந்நெல் அம்செறுவின் அன்னம் துஞ்சும்"** (நல்; பா-73; வ-8) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**கிள்ளி வளவன்**

பருந்து வட்டமிடும்படி நிமிர்ந்த கொம்பையுடைய யானைப் படையுடையவன் கிள்ளிவளவன் எனக் கிள்ளி வளவனை விளக்க, **"பருந்து, யானை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"ஏந்துகோட்டு யானை இசை வெங்கிள்ளி"** (நல்; பா-141; வ-9) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

**கங்கை**

தெறல் அருங்கடவுள் முன்னர்ச் சென்று அதன் சினம் அடங்கும் பொருட்டுச் சிறிய யாழ் நரம்பின் ஓசையை எழுப்பிப் பாணர் பாடினாற் போன்ற இனிய குரலையுடைய குருகுகள் இருக்கின்ற கங்கையாறு எனக் கங்கையினை விளக்க, **"குருகு"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"நரம்பு இசைத்தன்ன இன்குரற் குருகின்"** (நல்; பா-189; வ-4) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

**காலைப் பொழுது**

மாரிக் காலத்தில் மலரும் பிச்சியினது நீர் ஒழுகும் செழுமையான அரும்புகளைப் பெரிய பசுமையான பனை ஓலைக் குடையில் ஒருங்கே வைத்து மூடி, பெருமழை பெய்தலை உடைய விடியற்காலம் எனக் காலைப் பொழுதினை விளக்க, **"பித்திகம், பனை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"மாரிப் பித்திகத்து நீர் வார் கொழு முகை; இரும் பனம் பசுங்குடைப் பலவுடன் பொதிந்து"** (குறுந்; பா-168; வரி-1-2) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நிறைந்து கருப்பம் காணப்படும் வயிறு போன்ற தாழிப் பானையில் விளாம்பழம் கமழும். அத்தாழியில் தயிர் கடைய மத்திட்டு எதிரே வெளில் என்னும் தூணில் தேய்வு காணப்படும். வெண்ணெய் தெரியும் இயக்கத்தின் போது முழக்கம் கேட்கும் விடியற் காலைப்பொழுது என விடியற் காலைப் பொழுதினை விளக்க, **"விளாம்பழம், தயிர், வெண்ணெய்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"விளாம்பழம் கமழும் கமஞ்சூற் குழிசி; நெய் தெரிஇயக்கும் வெளில் முதல் முழங்கும்"** (நற்; பா-12; வரி-1,3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வேம்பின் ஒள்ளிய பழத்தை வெறுத்துத் தேன் போன்ற பால் வற்றிய இனிய இருப்பைப் பழத்தை விரும்பிப் பனிபெய்யும் காலை நேரத்தில் வௌவால் கிளைகள் தோறும் செல்லும் காலை நேரம் எனக் காலை நேரத்தினை விளக்க, **"வேம்பு, இருப்பை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்குகின்ற பாடல் வரியாவது, **"வேம்பின் ஒண் பழம் முனைஇ இருப்பைத்"** (நற்; பா-279; வ-1) என்பதாகும்.

**உவமை**

நார் இல்லாத முருங்கையின் குலைத்த வெண்மையான மலர்களைச் சூறாவளி காற்று வீச உடைந்து பரந்திருப்பது உடைந்த அலையின் துளிகள் பரந்துகிடக்கும் கடலைப்போலக் காட்சி அளிக்கின்றன என உவமைப்படுத்த, **"முருங்கை"** எனும்

கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“நார்இல் முருங்கை நவிரல் வான்பூச்”** (அகம்; பா-4; வ-16) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

காய்ந்த ஓமை மரங்களையுடைய காட்டில் நெல்லி மரத்தின் பளிங்கு போன்ற பல காய்கள் உயர்ந்த பெரிய பாறையில் சிறுவர் விளையாடுவதற்காகச் சேர்த்து வைத்த வட்டுக் காய்களைப் போல் உதிர்ந்து கிடக்கும் எனக் காட்டுப்பகுதியினை விளக்க ஓமை மரங்களுக்கு உவமையாக, **“நெல்லி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“முளிந்த ஓமை முதையல் அம் காட்டு; பளிங்கத்து அன்ன பல்காய் நெல்லி”** (அகம்; பா-5; வரி-8-9) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வலையைக் கண்ட பெண்மான் அதனின்று தப்பி ஓடுவது போல தலைவனுடன் தலைவி இக்காட்டில் உள்ள வழியில் சென்றாள் எனத் தலைவி உடன்போக்கில் செல்வதனை விளக்க, **“பிணை”** எனும் கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“வலை காண் பிணையின் போகி ஈங்கு ஓர்”** (அகம்; பா-7; வ-11) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

பாண்டியனின் சிறந்த துறைமுகத்தையுடைய ‘முசிறி’ என்னும் பட்டினத்தை யானைப் படையை அழித்த, ‘கல்’ என்னும் ஆரவாரத்தையுடைய போரில் விழுப்புண் மறவரைப் போல் மிகவும் மனம் வருந்தி நள்ளிரவிலும் பகலிலும் ஓயாமல் அழுது கொண்டிருக்கின்றாள் தலைவி எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருளானது விளக்கியுள்ளது. இதனை, **“களிறு பட எருக்கிய கல்லென் ஞாட்பின்”** (அகம்; பா-57; வ-16) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

பூண் அழியப் பெற்ற கொம்பையும் பெண் யானைகள் சூழப்பெற்றனவுமான ஆண் யானைகளைப் போல் தோன்றும் சிறிய பெரிய குன்றுகள் இருந்தன எனக் குன்றிற்கு உவமையாக, **“பிடி, களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“பிடி மிடை களிற்றின் தோன்றும்”** (அகம்; பா-99; வ-13) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

முசிறி என்னும் பட்டினத்தை வென்று பொற்பாவையைக் கவர்ந்து கொண்டவன் யானையும் போரையும் உடைய செழியன் அவனது கொடிகள் அசையும் தெருவினையுடைய உள்ள மயிற் கொடிகள் உயர்த்தப்பட்ட இடையறாத விழாவையுடையது முருகப் பெருமானின் திருப்பரங்குன்றம். அதில் வண்டுகள் மொய்க்கும் சுனையில் பூத்த நீலமலரின் புதிய மலர் இரண்டின் சேர்க்கை போன்றது தலைவியின் செவ்வரி படர்ந்த கண்கள் எனத் தலைவியின் கண்களை விளக்க, உவமையாக **“யானை,**

**மஞ்ஞை, நீலம்"** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"நெடுநல் யானை அடுபோர்ச் செழியன்; பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய; வண்டுபட நீடிய குண்டு சுனை நீலத்து"** (அகம்; பா-149; வரி-13.15,17) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

பள்ளத்தில் விழச் செய்யப்பட்ட கன்றுகளையும் பெண் யானைகளையும் உடைய யானைக் கூட்டங்களை அகப்படுத்தும் பூசலில் எழினி வராததால் சினம் கொண்ட சோழனின் ஏவலால் மந்தி என்பவன் பல்லைப் பறித்து வந்து, வெண்மணி என்ற ஊரின் வாயிலில் நாட்டினான். அத்தகைய துறைமுகத்தில் நீர் மோதி ஒலிப்பதைப் போன்று தலைவியைத் தலைவன் பிரிந்து சென்றதால் அலர் ஏற்பட்டது என அலருக்கு உவமையாக, **"களிறு"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"பிடிபடு பூசலின் எய்தாது ஒழியக்"** (அகம்; பா-211; வ-10) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

பகன்றையின் வெண்மையான பூ பனி நிறைந்ததைப் போல் பாலால் நிரப்பப்பட்ட கிண்ணம் எனத் தலைவிக்குப் பாலூட்டப் பயன்படுத்திய கிண்ணத்தினை விளக்க, **"பகன்றை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்குகின்ற பாடல் வரியாவது, **"பகன்றை வால்மலர் பனிநிறைந்தது போல்"** (அகம்; பா-219; வ-4) என்பதாகும்.

பலா மரங்கள் பல திரண்டிருக்கும் மூங்கில் நெருங்கிய பக்கமலையில் செல்லும் யானைக் கூட்டத்தைப் போல், வானத்தில் விளங்கும் ஞாயிறு என ஞாயிற்றினை விளக்க, **"மூங்கில், யானை, பலா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பலவுப் பல தடைஇய வேய்பயில் அடுக்கத்து; யானைச் செல் இனம் கடுப்ப வானத்து"** (அகம்; பா-323; வரி-8-9) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

ஆண் பருந்து தங்கியிருக்கும் அடிப்பகுதி திரண்ட யாமரத்தின் வெண்மையான கொம்பானது பாழி என்னும் அரணை அழித்துப் புதிய வடுகரின் பசுமையான தலையைச் சிதைத்துக் கொன்ற யானையின் கொம்பைப் போல் தோன்றும் என யாமரத்தின் தன்மையினை விளக்க, **"யா, யானை, பலா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **"அரை சேர் யாத்த வெண்திரள் வினை விறல்; கொன்ற யானைக் கோட்டின் தோன்றும்"** (அகம்; பா-275; வரி-9,15) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

குத்துக்கோலால் குத்தவும் தன் நெறியில் செல்லாத ஆண் யானையானது மென்மையான யாழ் ஓசையினைக் கேட்டு நின்றது போல் தலைவன் அன்பு கொண்டு நின்றார் எனத் தலைவனின் அன்பை விளக்க, **"களிறு"** எனும் கருப்பொருள்

புலப்படுத்துகின்றது. இதனை, **“காழ் வரை நில்லாக் கடுங் களிற்று ஒருத்தல்”** (கலி; பா-2; வ-26) என்ற வரி மூலம் விளக்கப்படுகின்றது.

தாமரையையுடைய நீர் நிலையுள் நீரால் நீக்கப்பட்ட மலர் இரவுக்காலம் முழுவதும் வாடாமல் கிடந்ததைப் போன்று தலைவன் தலைவியைப் பிரிந்தீர் என ஓர் இரவுப் பொழுதும் உயிருடன் வாழ மாட்டாள், எனத் தலைவியின் பிரிவாற்றாமையை விளக்க, **“தாமரை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியானது, **“ஓர் இரா வைகலுள் தாமரைப் பொய்கையுள்”** (கலி; பா-5; வ-14) என்பதாகும்.

காந்தள் மலர் விழுவது போன்று ஒளி பொருந்திய வளைகள் முன் கையினின்று கழல்கின்றன எனத் தலைவியின் நிலையினை விளக்க, **“கோடல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது இதனை, **“இவட்கே அலங்கு இதழ்க் கோடல் வீ உகுபவை போல்”** (கலி; பா-7; வ-15) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

குளம் அழகு பெறுதற்குக் காரணமானது தாமரையின் பசுமையான அரும்பு போன்ற மார்பினை உடையவள், என மார்புக்கு உவமையாக, **“தாமரை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“குளன் அணி தாமரைப் பாசரும்பு ஏய்க்கும்”** (கலி; பா-22; வ-15) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மதம் பொருந்திய ஆண் யானைகள் உள்ளே இருக்கும் போது உலர்ந்த மூங்கிலை உடைய உயர்ந்த மலையைச் சூழ்ந்து முழங்கும் தீயை கணைய மரத்தைப் போன்ற பெரிய துதிக்கையை உடைய யானை புகைத்தீயை உடைய அந்த அரக்கினால் ஆன இல்லத்தை வீமன் அழித்துச் சுற்றத்துடனே தப்பிப் பிழைத்துப் போவதைப் போல் வழிகளை மிதித்துத் தம் யானைக் கூட்டத்துடனே கூடிப்போகும் காட்டுப்பகுதி என உவமையை விளக்க, **“கடுங்களிறு, கழை, வேழம், கணையமரம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“களிதிகழ் கடா அத்த கடுங்களிறு அகத்தவா; முளி கழை உயர் மலை முற்றிய முழங்கு அழல், எழு உறழ் தடக்கையின் இனம் காக்கும் எழில் வேழம்”** (கலி; பா-25; வரி-5-6,9) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நல்ல சாதிப்பசுவின் இனிய பாலானது அப்பசுவின் கன்றினாலும் உண்ணப்படாமல் கலத்திலும் கறந்து கொள்ளப்படாமலும் தரையிற் சிந்தி வீணாவது போலத் தலைவியின் அழகுநலம் யாருக்கும் பயன்படாமல் பசலையால் வீணாகுகின்றது எனப் பசலையுற்றதை விளக்க, **“பசு, பால்”** போன்ற கருப்பொருள்கள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“கன்றும் உண்ணாது கலத்தினும் படாது”** (குறுந்; பா-27; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

வண்டுகள் வீழ்ந்து உழக்கிய குவளை மலர் போல மெலிந்து தவித்தாள் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை விளக்க, **“அமளி தைவந்தனனே குவளை”** (குறுந்; பா-30; வ-4) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

நீர் விளங்குகின்ற மலைப்பக்கத்தில் ஒரு படித்தாக மலர்ந்த வெள்ளிய கூதாளத்தின் உட்டுளை உடைய அழகிய புதிய மலர்கள் காம்பில் கழன்று உதிர்தலைப் போலத் தலைவன் கைவளைகள் சோர்ந்து வீழ்கின்றன எனத் தலைவியின் நிலையை விளக்க, **“கூதாளம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வெண் கூதாளத்து அம் தூம்பு புதுமலர்”** (குறுந்; பா-282; வ-6) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

காட்டினிடத்து மேய்ச்சல் நிலத்தைத் தேடிச் செல்லும் யானையினது கொம்பினிடத்தே முறித்து தங்கிய சிறிய பூக்களை உடைய முல்லைக் கொடியின் கொம்பைப் போல இமையைக் கடந்து ஊறுகின்ற கண்ணீர்த் துளியானது பரவி, மதர்த்த அழகுடைய அணிகலன்களைத் தன்னிடத்தே கொண்ட தலைவியின் முகைகள் நனைகின்றன எனத் தலைவியின் வருத்தத்தை விளக்க, **“யானை, முல்லை”** எனும் கருப்பொருள்கள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“புலம் தேர் யானைக் கோட்டிடை ஒழிந்த; சிறு வீ முல்லைக் கொம்பின் தாஅய்”** (குறுந்; பா-348; வரி-2-3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பொருளானது வாடாத பூக்களையுடைய பொய்கையின் நடுவில் ஓடும் மீனின் வழி மறைந்து அழிவது போல இருந்த இடம் தெரியாமல் அழிந்து போகும் என நிலையாமைக் கருத்தினை விளக்க, **“மீன்”** உவமையாக்கப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது பின்வருமாறு, **“ஓடு மீன் வழியின் கெடுவ யானே”** (நற்; பா-16; வ-6) என்பதாகும்.

கலைமானால் ஒழிக்கப்பட்ட பெண்மான் போன்று தலைவியானவள் கலக்கமடைந்து நீர் சூழ்ந்த சிறந்த குவளை மலர்போன்ற இவள் கண்களிலிருந்து நீர் வடிய அழுவாள் எனத் தலைவனைப் பிரிந்த தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“கலைமான், பெண்மான், குவளை”** போன்ற கருப்பொருள்கள் கொண்டு உவமைப்படுத்தியுள்ளார் இதனை, **“இவளொடும் செலினோ நன்றே குவளை; கலைஒழி பிணையின் கலங்கி மாறி”** (நற்; பா-37; வரி-4,6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பசிய கண்களையுடைய யானைப்படை வேந்தன் மதிலின் வெளியே தங்கியிருத்தலால் தன் துன்பம் நீக்குவாரைக் காணாமல் கலங்கிய உடைந்த

மதிலையுடைய ஓரெயில் மன்னன் போல வருத்தமுற்று நெஞ்சழிந்தாள் தலைவி எனத் தலைவியின் வருத்தத்தை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **“பைங்கண் யானை வேந்து புறத்து இறுத்தலின்”** (நற்; பா-43; வ-9) என்பதாகும்.

வேனிற் காலத்தில் முள்முருக்கின் விளைந்த கொத்துப் போன்ற மாண்பில்லாத விரல்களையும் வலிய வாயையுமுடையது பேய் என உவமையின் மூலம் விளக்க, **“முருக்கு”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வேனில் முருக்கின் விளை துணர் அன்ன”** (நற்; பா-73; வ-1) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

ஆய் அண்டிரன் வியப்புடைய இரவலர் வரும்போது அவர்களுக்குக் கொடை கொடுக்கக் கருதித் தொகுத்து வைத்த யானைக்கூட்டம் போல மேகம் தோன்றும் என மேகத்திற்கு உவமையாக, **“யானை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“புரவு எதிர்ந்து தொகுத்த யானை போல”** (நற்; பா-237; வ-8) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

ஒளிபொருந்திய கொம்புகளையுடைய ஆண்யானைகள் இரண்டு ஒன்றோடொன்று மாறாகப் பற்றி இழுக்கும் போது தேய்ந்த புரிகளையுடைய பழங்கயிற்றின் புரி இற்று போவது போலத் தலைவன் உடம்பு வருந்தி அழிந்து போகின்றது எனத் தலைவியைப் பிரிந்த தலைவன் வருத்தத்தினை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஒளிறு ஏந்து மருப்பின் களிறு மாறு பற்றிய”** (நற்; பா-284; வ-9) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

**தலைவியின் வீடு மற்றும் ஊர்**

பொன்னால் ஆன புலிப்பல் கோக்கப்பட்ட தனி மணித்தானாயையும் தழைத்த அசோகின் தளிரால் ஆன தழையுடையால் சிறப்புற்ற அல்குலையும் உடைய பலாவினது சிறந்த சுளைகளை உண்ணும் முசுக்கலைகளால் உதிர்க்கப் பெற்ற வெண்மையான பலாமரத்தின் வித்துக்கள் எங்கும் எளிதாகப் பொறுக்கி எடுக்கின்ற மலையில் பொருந்திய சிறு குடியையுடைய கானவன் மகள் தலைவி எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“புலி, அசோகு, பலா, முதுக்கலை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“புலிப் பல் கோத்த புலம்பு மணித் தாலி; ஆய் சுளைப் பலவின் மேய் கலை உதிர்த்த”** (அகம்; பா-7; வரி-18,20) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

நெல்லிக்காயை மரையின் கூட்டம் உண்ணுகின்ற முன்னிடத்தை உடைய புல்லால் வேயப்பட்ட குடிசைகளை உடைய நல்ல தலைவியின் ஊர், எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“நெல்லி, மரை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கல் உயர் நண்ணியதுவே நெல்லி; மரையினம் ஆரும் முன்றில்”** (குறுந்; பா-235; வரி-3-4) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

நெடிய நெறி கூட்டில் போட்டு வைக்கப்பட்ட தொகுதியான நெல்லையுடையது தலைவியின் தாய்வீடு எனத் தலைவியின் வீட்டினைச் சிறப்பிக்க, **“நெல்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“பிண்ட நெல்லின் தாய் மனை ஒழிய”** (நற்; பா-26; வ-4) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

பலா பூக்கள் உள்ள கோங்கம் மரங்கள் அழகு செய்யும் காடு தலைவியின் தந்தையின் காடென விளக்க, **“கோங்கம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பல் பூங் கோங்கம் அணிந்த காடே”** (நற்; பா-202; வ-11) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

அண்மையில் ஈன்ற கரிய எருமையின் பெரிய செவியையுடைய கன்று பசிய பூந்தாது உதிர்ந்து எருவாகக் கிடப்பதில் தங்கித் துயில் மேற்கொண்டு உறங்கும், செழுமையான குளிர்ந்த மனை எனத் தலைவியின் மனையினை விளக்க, **“எருமை”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“இரும் புனிற்று எருமைப் பெருஞ் செவிக் குழவி”** (நற்; பா-271; வ-1) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

அழகிய பூங்கொத்தையுடைய நொச்சி மாலைசூடி பலியிடும் கையையுடைய பரிய முது குயவன் இடும் பலியை உண்ணக் காக்கைகள் அழைக்கின்ற அகன்ற இடத்தையுடைய மன்றத்தைக் கொண்ட மூதூர் எனத் தலைவியின் ஊரினை விளக்க, **“நொச்சி, காக்கை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“மணிக் குரல் நொச்சித் தெரியல் சூடி”** (நற்; பா-293; வ-1) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

வாடிய வயலைக் கொடியும் மயில் அடி போன்ற இலையையும் சிறந்த பூங்கொத்தை உடைய நொச்சியும் பாதுகாப்பான அகன்ற இல்லத்தில் காணும்படி தோன்றுகின்றன. தலைவியில்லாது தனியாகக் கண்ட சோலையும் வருந்துகின்றது எனத் தலைவியின் உடன்போக்கிற்குப் பின் வீட்டின் சூழ்நிலையினை விளக்க, **“வயலை, மயில், நொச்சி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வரி அணி பந்தும் வாடிய வயலையும்; மயில் அடி அன்ன மாக்குரல் நொச்சியும்”** (நற்; பா-305; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

பாலை நிலத்தில் உள்ள இல்லத்தை விளக்குகின்ற கருத்துப் பின்வருமாறு: ***“பாலை நிலத்தில் வாழும் எயிற்றியர் தங்கள் குழல்களை ஈச்ச ஓலையால் வேய்ந்திருந்தனர். இது முள்ளம் பன்றியின் முதுகு போல் வடிவம் கொண்டிருக்கும், ஈச்ச ஓலையின் நுனி முள் போன்று இருப்பதால் கூரை வேய்வதற்கு ஏற்றதாக இருந்தது இதனை,***

***வேற்தலை அன்ன வைந்நுதி நெடுந்தகர்***

***ஈந்து இவை வேய்ந்த எய்ப்புறக்குரம்பை”*** (பெரும்பாணாற்றுப்படை, 87-88) ஆகிய வரிகள் விளக்குகின்றன.

**மாலைப் பொழுது**

குறுகிய நடையையுடைய சிவந்த காலையுடைய ஆண்புறா உயர்ந்த மேல் நிலைகளையுடைய பெரியமனையில் தன்னிடம் அன்புப் பெடையை அழைக்கும் மாலைப் பொழுது, என மாலைப் பொழுதினை விளக்க, **“புறா, சேவல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“குறுநடைப் புறவின் செற்காற் சேவல்”** (அகம்; பா-47; வ-11) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

வண்டுக் கூட்டம் சுனையில் மலர்ந்துள்ள பூக்களைத் துறந்து கோட்டு மலர்களை விரும்பிச் செல்லும்; குற்றம் இல்லாத மான் கூட்டம் மயங்கும்; உலையில் வெந்து ஆறிய பொன் போன்ற நிறம் உடைய செவ்வந்தி அரும்புகள் மலரும். இத்தகைய மாலைக் காலத்தினை விளக்க, **“மான், கோட்டுமலர், செவ்வந்தி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“மைஇல் மான் இனம் மருள, பையென”** (அகம்; பா-71; வ-5) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

திரண்ட கால்களையுடைய பெண் மானை அதன் ஆண்கலை மான் முதுகிடத்தே நக்கும் அசையும் நிழல் உடைய மாலைப் பொழுது என மாலைப் பொழுதினை விளக்க, **“பிணை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“கணைக்கால் அம்பிணை ஏறுபுறம் நக்க”** (அகம்; பா-287; வ-10) என்ற பாடல் வரி பயன்படுத்தப் பட்டுள்ளது.

சிறிய இலைகளையும் குறுகிய கிளைகளையும் உடைய வேம்பின் இனிய பழத்தைஉண்டற்கு வௌவால்கள் உயரப் பறக்கும் மாலைக்காலம் என மாலைக் காலத்தினை விளக்க, **“வேம்பு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“குறுஞ்சினை வேம்பின் நறும்பழம் உணீஇய”** (ஐ.நூறு; பா-339; வ-2) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பருக்கைக் கற்களை உடைய பள்ளத்திலே தங்கிய நீரை உண்டு ஆண்மான், பெண்மானோடு வழியினிடத்துத் துள்ளி விளையாடுகின்ற மாலைக் காலம், என மாலைக் காலத்தினை விளக்க, **"ஆண்மான், பெண்மான்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"இரலை நல்மான் நெறிமுதல் உகளும்"** (குறுந்; பா-250; வ-2) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

முறுக்கின கொம்பையுடைய இரலை என்னும் தலைமை உடைய நல்ல ஆண்மான் மென்மையும், மடப்பத்தையும் உடைய பெண்மானோடு தாம் தங்குவதற்குரிய நிழலிடத்தே தங்கி மலர்கள் அடர்ந்த அகன்ற பிணக்கத்தை உடைய தூற்றினிடத்தே தூங்கி பகற்பொழுது போனமையின் செழுவிய பயிற்றும் பயிரைக் கறித்துத் தின்னும் துன்பத்தைத் தரும் மாலைக் காலம் என மாலைக் காலத்தின் வருகையினை விளக்க, **"இரலை, பிணை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"திரி மருப்பு இரலை அண்ணல் நல் ஏறு; அரி மடப் பிணையோடு அல்கு நிழல் அசைஇ"** (குறுந்; பா-338; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

ஆழமான நீரினிடத்து வளர்ந்த ஆம்பலினது இலையின் புறத்தைப் போன்ற வளைந்த மெல்லிய சிறகை உடையனவாகிய கூரிய நகங்களை உடைய வெளவால்கள் அகன்ற இலைகளை உடைய பலாமரங்களை உடைய மலைச் சாரலை நோக்கிப் பகற்காலத்தில் உறைந்த பழையமரம் தவிக்கும்படி செல்லும் சிறிய புல்லிய மாலைக் காலம், என மாலைக்காலத்தினை விளக்க, **"ஆம்பல், பலா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"நெடுநீர் ஆம்பல் அடைப் புறத்தன்ன; அகல் இலைப் பலவின் சாரல் முன்னிப்"** (குறுந்; பா-352; வரி-1,3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

குறுகிய நிலைமையிலுள்ள குராமரத்தின் சிறிய குளிர்ந்த கமழும் அரும்புகள் வண்டுகளால் மலர்ந்து உண்டாகும் நறுமணம் காற்றோடு கலந்து வர அது மணத்திற்கும் கண்ணிற்கும் இனிமையை உண்டாக்கும் மாலை நேரம் என மாலைப் பொழுதினை விளக்க, **"குரவம்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ"** (நற்; பா-56; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

மனையுறை செங்காற் புறாவின் பேடை அழகிய துணையாகி ஆண் புறாவோடு சேர அது கண்டு வருத்தம் ஏற்படும்படி தோன்றும் துன்பம் தரும் மாலைப் பொழுது, என மாலைப் பொழுதினை விளக்க, **"புறா, சேவல்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"மனை உறை புறவின் செங்காற் பேடைக்; காமர் துணையொடு சேவல் சேர"** (நற்; பா-162; வரி-1-2) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

ஆக்கள் முல்லைக் கொடி படர்ந்த மலையின் வழியாகிய சிறிய நெறியை அடையாது அழகிய குடிகள் வாழும் சீறூரில் பூக்களின் தாதுக்கள் எருவாக உதிர்ந்திருக்கும் தெருவில் செல்லும். அந்த ஆக்களின் முதுகிலே கடவுள் உறையும் ஆலமரம் விட்ட நெடிய விழுது தீண்டும். அங்குப் போடப்பட்ட பலிச் சோற்றைத் தொக்க விரல்களையுடைய காக்கைகள் திண்ணும், பிரித்தாரை வருந்தும் தென்றல் குழலிசை என்னும் படையொடு வந்த துன்பம் தரும் மாலை என மாலைப் பொழுதினை விளக்க, **“முல்லை, பசு, ஆலமரம், காக்கை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“முல்லை தாய கல் அதர்ச் சிறு நெறி; நெடு வீழ் இட்ட கடவுள் ஆலத்து; உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை”** (நற்; பா-348; வரி-1,4-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**தலைவியின் வருத்தம்**

சிறந்த மூங்கிலைப் போன்று பருத்திருந்த தலைவியின் தோள்கள் மெலியுமாறு தலைவன் பிரிந்து சென்றான் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“வேய் மருள் பணைத் தோள் நெகிழ சேய் நாட்டு”** (அகம்; பா-1; வ-8) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

குவளை மலரின் கரிய இதழைப் போன்ற நீர் மிகுதல் கொண்ட கண்களின் இமை பின்பு நறவம் பூவின் சிவந்த இதழைப் போன்று விளங்கி உள்ளம் கொதித்தலால் நினைக்கும் போதெல்லாம் வற்றித் துன்பம் கொள்வதற்குக் காரணமாகத் தலைவியின் கண்கள் நீர் வடிகின்றன எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“நறவு, குவளை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“மறவல் ஓம்புமதி எம்மே நறவின்; சேயிதழ் அனைய ஆகி குவளை”** (அகம்; பா-19; வரி-9-10) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வலிய முயற்சியினையுடையதும் பட்டினியாய் இருந்து உயிர்விட நேரிடினும் தான் வீழ்த்திய களிறு இடப்பக்கம் வீழ்ந்தால் அதைத் தின்னாதது புலி. அப்புலியினை விட மேம்பட்ட தளர்ச்சியற்ற ஊக்கம் மேன்மேல் மிகப் பொருளீட்டுதற்குப் பிரிந்து சென்றார் தலைவர் எனத் தலைவன் பிரிவால் தலைவி வருந்துவதனை விளக்க, **“களிறு, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வீழ் களிறு மிசையாப் புலியினும் சிறந்த”** (அகம்; பா-29; வ-3) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

குளத்தில் செறிந்த வண்டுகள் வந்து மொய்க்கும் இரட்டையாய் உள்ள தாமரை மலர் போன்று விளங்கும் அழகை இழந்து பசலையுடைய கண்களை உடையவள்

தலைவி, எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **"தாமரை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியாவது, **"தண் கயத்து அமன்ற வண்டு படு துணை மலர்ப்"** (அகம்; பா-59; வ-1) என்பதாகும்.

பருத்த இறையினையுடைய மூங்கில் போன்ற தோள் மெலியும்படி தலைவன் பிரிந்து சென்றான் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **"பணை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"வீங்கு இறைப் பணைத் தோள் நெகிழ சேய் நாட்டு"** (அகம்; பா-59; வ-16) என்ற வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தான் வளர்த்த முல்லைப்பூவுடனே மலர்ந்த கொத்தையுடைய கரிய நொச்சியையும் அழகிய வரிகளையுடைய அல்குலையுடைய ஆயத்தாரையும் நினையாதவள் தலைவி எனத் தலைவியின் நிலையை விளக்க, **"முல்லை, நொச்சி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரியாவது பின்வருமாறு, **"மௌவலொடு மலர்ந்த மாக் குரல் நொச்சியும்"** (அகம்; பா-117; வ-1) என்பதாகும்.

கரிய குவளைமலர் போன்ற மையுண்ட என் கண்கள் பிரிவாற்றாமையால் அழகழிந்து விடும், எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **"குவளை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"குவளை உண்கண் கலுழவும் திருத்திழைத்"** (அகம்; பா-183; வ-1) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

பனை மரத்தில் துணை இல்லாது தனித்து இருக்கும் கூர்மையான வாயையுடைய அன்றிற் பறவையின் வருத்தத்தையுடைய குரல் மூட்டுதலால் அகத்தே கொதிக்கின்ற உள்ளத்தில் மிக்க தீ உண்டாகக் குழலோசை கேட்கிறது. அக்குழலோசைத் தலைவியின் வருத்தத்தை மிகுவிக்கிறது எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **"பெண்ணை, அன்றில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"பராரைப் பெண்ணைச் சேக்கும் கூர்வாய்; ஒருதனி அன்றில் உயவுக் குரல் கடைஇய"** (அகம்; பா-305; வரி-12-13) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மூங்கில் போல் பருத்த தோள்களிடமிருந்து அணிந்த ஒளி வீசும் மணிகள் கழன்று நீங்குகின்றவாறு தலைவன் பிரிந்து சென்றான் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **"மூங்கில்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"வேய் மருள் பணைத்தோள் வில்லிழை நெகிழ"** (ஐ.நூறு; பா-318; வ-2) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

மூங்கிலினது அழகை இழந்த தோளையுடையவள் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **"வேய்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"வேய் வனப்பு இழந்த தோளும் வெயில் தெற"** (ஐ.நூறு; பா-392; வ-1) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

மென்மையான அனிச்ச மலர் பொருந்தும் சிறிய அடிகள் சுரத்தில் உள்ள கல்லைத் தீண்டின் தாமரை மலரின் அல்லியின் உள் இதழ்களைச் சேர்ந்த அழகிய இதழ்கள் அரக்குத் தோய்ந்தது போல சிவந்து விடும் பாதம் எனத் தலைவியின் நிலையை விளக்க, **"தாமரை, அல்லி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"மெல் இயல் மே வந்த சீறடி தாமரை; அல்லிசேர் ஆய்இதழ் அரக்குத் தோய்ந்தவை போல"** (கலி; பா-13; வரி-11-12) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

அரிய வழியிடத்துப் பெருமையுடைய கழுத்தையும் அழகையும் கொண்ட ஆண்மானின் பின் அதனை நீங்காமல் திரியும் பெண்மானைப் பிரியாது இருக்கும் அது போலத் தலைவனும் தலைவியும் பிரியாமல் இருக்க வேண்டும் எனத் தலைவியின் நிலையினை விளக்க, **"பிணை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை. **"பிணையும் காணிரோ பிரியுமோ அவையே"** (கலி; பா-20; வ-23) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

நல்ல இல்லின் உள்ளே வீட்டிறப்பில் வாழும் சிவந்த கால்களையுடைய அழகிய ஆண்புறா தான் விரும்பிய தன் பெண்புறாவைக் கூவி அழைக்கும் குரலைக் கேட்டு தலைவி வருத்தமடைந்தாள் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **"புறா"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை. **"வண்ணற் புறவின் செங்காற் சேவல்"** (நற்; பா-71; வ-8) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

தலைவியின் நெய்தல் மலர் போன்ற மையுண்ட கண்கள் துன்பங் கொண்டனவாய் வருந்துகின்றன எனத் தலைவனின் பிரிவைத் தாங்காத தலைவியின் வருத்தத்தினை விளக்க, **"நெய்தல்"** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை. **"நெய்தல் உண்கண் பைதல் கூர"** (நற்; பா-113; வ-7) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

இம் என்று ஒலிக்கும் பெரிய போர்க்களத்திலே வாச்சியக் காரர் ஊதும் ஆம்பலின் அழகிய குழல்போல ஏங்கி அழுதாள் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **"ஆம்பல்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரியானது, **"ஆம்பல் அம் குழலின் ஏங்கி"** (நற்; பா-113; வ-11) என்பதாகும்.

தம் தொழிலில் வல்லமையுள்ள ஓவியர்கள் ஒள்ளிய அரக்கைத் தோய்த்த எழுதுகோல் போல மெல்லிய பகுதி கொண்ட பாதிரிப்பூ இருக்கும் வெள்ளையான இதழ்களையுடைய அம் மலர்களை வண்டுகள் மொய்க்கும் அப்புது மலர்களை வட்டிலில் ஏந்திக் கொண்டு தெருவு தோறும் வந்து விற்பனை செய்யும் பூவிலை மடந்தையர் கூவுவதைக் கேட்டுத் தலைவியின் நெஞ்சம் பெரிதும் வருத்தமடையும் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“பாதிரிப்பூ”** என்ற கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி”** (நற்; பா-118; வ-8) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

இளவேனிற் காலத்தில் பூங்கொத்துக்கள் நெருங்கிய மா மரத்தில் நெருங்கியிருக்கும் குயில்கள் கூவுந்தோறும் தலைவனை நினைக்கும் நெஞ்சோடு பிரிவுத் துன்பம் மிகுந்து குயில் ஒலி கேட்குந்தோறும் தலைவி அழுவாள் மேலும் காட்டகத்தில் சிறிய மலையின் பக்கத்திலிருக்கும் நெடிய அடி மரத்தையுடைய வேங்கையின் அழகிய பூங்கொத்து உதிர்ந்தாற் போன்று நுண்ணிய பல தேமலையுடைய மாமை நிறத்தினைப் பெற்ற தலைவி அழுவாள் எனத் தலைவனைப் பிரிந்த தலைவியின் வருத்தத்தினை விளக்க, **“மாமரம், வேங்கை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“இணர் துதை மாஅத்த புணர் குயில் வளந்தோறும்; குறும் பொறை அயல நெடுந்தாள் வேங்கை”** (நற்; பா-157; வரி-5,8) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தலைவி இல்லத்தில் வளர்த்தெடுத்த வயலைக் கொடியைக் கன்று ஈன்ற பசு தின்றதைப் பார்த்து தன் அழகிய வயிற்றில் அடித்துக் கொண்டு வருந்தினாள். மான் மாறுபட்டுப் பார்ப்பது போன்ற மயங்கிய நோக்கத்தோடு அடிக்கடி வருந்தினாள். நற்றாயும், தோழியும் தேனொடு கலந்த இனிய பாலை ஊட்ட உண்ணாமல் விம்மியழுதாள். தலைவி இளையவள் என்பதால் பசு வயலைக் கொடியைத் தின்றதை எண்ணி வருத்தமுறுவதை விளக்க, **“வயலை, மான், தேன், பால்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“இல் எழு வயலை ஈற்ற ஆ தின்றெனை; மான் அமர்ப்பன்ன மையல் நோக்கமொடு; யானும் தாயும் மடுப்ப தேனொடு; தீம் பால் உண்ணாள் வீங்குவனள் விம்மி”** (நற்; பா-179; வரி-1,4-6) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

குவளை மலர் போன்ற அவள் மையுண்ட கண்களில் நீர்வடியக் கலங்கினாள் தலைவி எனத் தலைவன் பிரிவால் தலைவி வருத்தத்தினை விளக்க, **“குவளை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“மலர் ஏர் உண்கண் பனி வர ஆயிழை”** (நற்; பா-308; வ-2) எனும் பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பருத்த அடிப்பாகத்தையுடைய ஓமை மரத்தின் தாழ்ந்த கிளை தந்த பொருந்தாத புள்ளியுள்ள நிழலின் கீழ் ஆண், பெண் யானைகள் அங்கு வந்து தழையை ஒடித்துத் தின்றன. உயர்ந்த மருப்பையுடைய யானை புள்ளிகளையுடைய தன் நீண்ட துதிக்கையைச் சுருட்டித் தூக்கி வேறொரு வழியாகப் போகத் தொடங்கியது. அந்த அளவிற்குத் தன் துணை விலகியதைக் கண்டதும் அதையே பிரிவு என்று புல்லிய தலையையுடைய பெண்யானை வெயிலடிக்கும் மலைப்பிளப்புகள் எல்லாம் எதிரொலிக்குமாறு புலம்பியது. அதனைப் போலவே தலைவியும் தலைவன் பிரிவால் தன் உயிரை விட்டு விடுவதைத் தலைவனுக்கு அறிவுறுத்துவதனை விளக்க, **"யானை, பிடி, ஓமை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **"பணைத் தாள் ஓமைப்படு சினை பயந்த; ஒடித்து மிசைக் கொண்ட ஓங்கு மருப்பு யானை; புன் தலை மடப்பிடி புலம்பிய குரலே"** (நற்; பா-318; வரி-2,5,9) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நீர் ஒழுகும் ஒளிபொருந்திய குவளை மலர் போன்ற உனது பெரிய அமர்ந்த குளிர்ந்த கண்களிலிருந்து நீர் ஒழுகத் தலைவி அழுகின்றாள் எனத் தலைவியின் வருத்தத்தினை விளக்க, **"குவளை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"யாரோ பிரிகிற்பவரே குவளை"** (நற்; பா-391; வ-8) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

தலைவனின் மீது கொண்ட அன்பினால் தலைவி அடைந்த வருத்தத்தினை விளக்கும் (**பெயல் மணக்கும் பொழுது)** புதுக்கவிதை வரிகள் பின்வருமாறு:

> **"கண்களிடமிருந்து பறித்தெடுத்த**
> **ஒருபிடிக் கனா**
> **காதுகளிடமிருந்து பறிக்கப்பட்ட**
> **ஒரு வெளி நிறைய இசை**
> **என்னிடமிருக்கிறது**
> **அவனில்லாத வாழ்வு நெடுகிலும்**
> **சுமந்தலைய"**

**(அ.மங்கை; (தொ.ஆ; ப-24))** என்பதாகும்.

**உடன்போக்கு**

இடம் எது என்று அறியலாகாத மூங்கில் கரியும் காடு அக்காட்டில் வலிய ஆண் யானையைப் போன்ற ஆடவனுடன் தலைவி உடன் போக்குச் சென்றாள் என

உடன்போக்குச் சென்றதனை விளக்க, **“வேய், களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“விளி முறை அறியா வேய் கரி கானம்; வயக் களிற்று அன்ன காளையொடு என் மகள்”** (அகம்; பா-55; வரி-4-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மென்மையான தலையையும் இளமையையும் உடைய பெண்யானை, யானையைப் பிடிப்பதற்குத் தோண்டிய குழியில் விழுந்தது. இதனைக் கண்ட அதன் ஆண்யானை வருந்திக் கூப்பாடு இட்டது. அந்த முழக்கத்தைக் கேட்டு அஞ்சியது யானைக் கன்று. அத்தகைய பழைய ஊர்களைக் கடந்து தலைவனும், தலைவியும் உடன்போக்கில் சென்றனர் என உடன்போக்கு நிகழ்வினை விளக்க, **“மடப்பிடி, களிறு, குழவி, எருமை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“கயந்தலை மடப்பிடி பயம்பில் பட்டென; களிறு விளப்படுத்த கம்பலை வெரீஇ; ஒய்யென எழுந்த செவ்வாய்க் குழவி; எருமை நல் ஆன் பெறுமுலை மாந்தும்”** (அகம்; பா-165; வரி-1-3,5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நொச்சியின் மென்மையான கிளைகளில் உள்ள வளைந்த கதிர்கள் வாடிக் கவிழ்ந்தாலும் அவை கருதி வருந்தாதே. உன் தமையன்மாரின் புலியைப் போன்ற அச்சம் தரும் தலைமையும் எண்ணிக் கலங்குவதையும் செய்யாமல், தலைவனுடன் உடன்போக்கில் செல்வதே அறம் எனத் தோழி கூறினாள் என உடன் போக்கின் அறத்தினை விளக்க, **“நொச்சி, புலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நொச்சி மென்சினை வணர்குரல் சாயினும்; புலிமருள் செம்மல் நோக்கி”** (அகம்; பா-259; வரி-14,17) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

மயில் போன்ற சாயலைக் கொண்ட தலைவி தன் தோழியரும் தாயாரும் பார்த்து மகிழ வன்மையான கையையுடைய யானையையும் தேரையும் உடைய சோழ மன்னரின் உறையூரின் செல்வம் போன்று சிறப்பான முறையில் மணந்து கொள்ளாமல் மூங்கிலுடன் கற்பாறை பொருந்திய பக்கமலை வழியில் கூந்தல் ஆடும் மயில்தோகை போல் பொங்கிப் பறக்கத் தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்றாள் எனத் தலைவியின் உடன்போக்கினை விளக்க, **“மயில், யானை, அமை, பீலி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை விளக்க, **“தண் ஓரன்ன ஆயமும் மயில் இயல்; கைவல் யானைக் கருந்தேர்ச் சோழர்; அகல் அமை அல்குல் பற்றிக் கூந்தல்; ஆடு மயில் பீலியின் பொங்க நன்றும்”** (அகம்; பா-385; வரி-1,3,13-14) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

காற்றுள்ள அழகிய காட்டில் ஆலமரத்தின் நிழலிலே தங்கி தளர்ச்சி நீக்கித் தன்னோடு வருமாறு கூறினான். இவ்வாறு தலைவனும் தலைவியும் உடன்போக்கில் செல்வதை விளக்க, **"ஆலம்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"ஆல நீழல் அசைவு நீக்கி"** (நற்; பா-76; வ-3) என்ற பாடல் வரி பயன்படுத்தப் பட்டுள்ளது.

உடன்போக்கும் ஓர் அறத்துடன் அக்காலத்தில் நடைபெற்றதை விளக்குகின்றன மேலே கூறப்பட்டுள்ள பாடல்கள்.

**பனிக்காலம்**

அகன்ற வயலில் உள்ள நீண்ட தண்டையுடைய கரும்பின் பெரிய பூக்கள் வாடைக் காற்றால் அசைந்திடப் பசிய இலை நெருங்கிய புதர்தோறும் பகன்றை நீலம் ஊட்டப்பெற்ற தோலின் நிறம் மறையுமாறு கொழுத்த இலையையுடைய அவரைக்கொடியின் அரும்புகள் விரிய தோன்றியின் ஒள்ளிய பூக்கள் கட்டவிழ தலைவரைப் பிரிந்த மகளிர் அழகிழந்து நடுங்கப் பனிப்பருவம் வந்தது எனப் பனிப் பருவத்தினை விளக்க, **"கரும்பு, பகன்றை, அவரை, தோன்றி"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"நீடு கழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்; பாசிலைப் பொதுளிய புதல் தொறும் பகன்றை; கோழிலை அவரைக் கொழுமுகை அவிழ; ஊழ்உறு தோன்றி ஒண்பூத் தளைவிட; புலம் தொறும் குருகினம் நரல கல்லென"** (அகம்; பா-217; வரி-4,6,9-11) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

குற்றமற்ற தெருவினிடத்தே நாயில்லாத அகன்ற வாயிலில் செந்நெல் சோற்று உருண்டை மிக வெள்ளிய நெய்யுமாகிய ஒரு வீட்டில் இடும் பிச்சையைப் பெற்று வயிறு நிரம்ப உண்ட முன்பனிக் காலம் என முன்பனிக் காலத்தினை விளக்க, **"நாய், செந்நெல், நெய்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"ஆசு இல் தெருவின் நாய் இல் வியன் கடை; செந்நெல் அமலை வெண்ணெல் வெள் இழுது"** (குறுந்; பா-277; வரி-1-2) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நல் நிறமும் துய்யும் உடைய ஈங்கை மலர்கள் உதிர்ந்து நிற்க இனிமேல் தோன்றுதற்குரிய கடிய பனிப்பருவம், எனப் பனிப் பருவத்தினை விளக்க, **"ஈங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"யாங்குச் செய்வாம் கொல் தோழி! ஈங்கைய"** (குறுந்; பா-380; வ-5) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

மறவரின் வேற்படையின் இலை போல விரிந்த கதுப்பும் தோலுமுடைய பகன்றையின் மலர் வட்டில் போல மலரும் முன்பனிக்காலம் என முன்பனிக் காலத்தினை

விளக்க, **“பகன்றை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“பாண்டில் ஒப்பின் பகன்றை மலரும்”** (நற்; பா-86; வ-3) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

குளிர்ந்த புதரிலுள்ள ஈங்கையின் அழகிய தளிர் தடவத்தன் சிறகு குவிந்திருந்த வருத்தமிக்க வெண்மையான குருகைப் பார்வை விலங்குள்ள வேட்டுவன் அதன் கட்டை அவிழ்த்து விட்ட முன்பனிக் காலம், என முன்பனிக் காலத்தினை விளக்க, **“ஈங்கை, குருகு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பனிப் புதல் ஈங்கை அம்குழைவருட்; சிறை குவித்திருந்த பைதல் வெண்குருகு”** (நற்; பா-312; வரி-2-3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**வேனிற் காலம்**

காஞ்சி மரத்தின் அழகிய தாதுக்களைக் கொண்ட மலர்கள் மிக உதிர்ந்துள்ள மணல் மேடுகள் புதிய மணம் கமழ விளங்கும். மாமரத்தின் தளிரைத் தின்ற நீலமணி போன்ற கரிய நிறமுடைய குயில்கள் இனிய நம் நாவினால் பிணக்கம் கொண்ட காதலர்க்கு இரங்கி நாள்தோறும் அவர்தம் பிணக்கைத் தீர்க்கத் தாம் நடுநிலைமை மேற்கொண்டு அறம் கூறுவது போன்று மாறி மாறிக் கூவும் கூட்டமான வண்டுகள் மலர்கள் நிறைந்த கிளைகளையுடைய கோங்க மரத்தின் மீது உதிர்ந்து விட்ட நுண்ணிய தாதுக்கள் இலவமலரில் வீழ்ந்தன. அவை பொன் பொடிவிற்பவர் பவளச் செப்பில் அப்பொன் பொடியை வைத்தாற் போன்று தோன்றும் பிரிவால் அடையும் துயர்களைப் புறக்கணித்துப் பிரிபருவம் பிரிய ஒண்ணாத இளவேனிற் பருவம் என இளவேனிற் பருவத்தினை விளக்க, **“காஞ்சி, மா, குயில், கோங்கம், இலவம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“தண் கயம் நண்ணிய பொழில் தோறும் காஞ்சிப்; மா நனை கொழுதிய மணிநிற இருங்குயில்; இனச்சிதர் உகுத்த இலவத்து ஆங்கண்; சினைப்பூம் கோங்கின் நுண்தாது பகர்நர்”** (அகம்; பா-25; வரி-3,6,9-10) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கரிய குயில் கிளைகளையுடைய சிவந்த அரும்புகளையுடைய முருக்க மரத்தின் அழகிய போதுகள் விரிந்த மலர்களைக் கிண்டி அவற்றில் உள்ள பூந்துகள் உண்ணும். அழகிய தளிர்களை உடைய மாமரத்தின் கிளைகளின் உச்சியில் இருந்து இனிமை தோன்றக் கூவும் இளவேனிற் பருவம் என இளவேனிற் பருவத்தினை விளக்க, **“குயில், மாமரம், முருக்கமரம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பாசரும்பு ஈன்ற செம்முகை முருக்கினப்; அம் தளிர் மா அத்து அலங்கல் மீமிசை; செங்கண் இருங்குயில் நயவரம் கூஉம்”** (அகம்; பா-229; வரி-16,18-19) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பெருநிலத்தை விட்டு வளம் பொருந்திய வேறு இடங்களுக்கு ஓடும் மழை துறந்ததாக தசை வற்றிய யானை வருந்தும் வேனிற்காலம் என வேனிற் காலத்தினை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“ஊன் இல் யானை உயங்கும் வேனில்”** (அகம்; பா-233; வ-5) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

அத்தகைய வேனிற் காலத்தினை விளக்குகின்ற செய்தியானது பின்வருமாறு அமைகின்றது: ***“பாலைக்குத் தனியாக நிலமில்லை முதுவேனிற் காலத்தில் காடும் மலையும் வயல் பிரிந்த வறண்ட நிலையே பாலை எனப்படும், பாலை – பிரிவு வளம் பிரிந்ததால் அப்பெயர் பெற்றது. அக்கால நிலங்களே பாலைநிலம் எனப்படும், இதனாலே தான் தமிழகம் நானிலம் எனப்பட்டது.”*** (புலவர் குழந்தை; தொல்காப்பியர் காலத்தமிழர்; ப-55) என்பர்.

பாதிரியின் திரண்ட மலர் மென்மையான கொடியாகிய புனலியின் மலருடன் நுட்பமான மணலிடத்தில் கோலம் செய்யும். முதிர்ந்த குராவினது வண்டுகள் ஒலிக்கும் கிளையில் தென்றல் ஊடறுத்துச் செல்லும். குயில் கூவும் வேனிற்காலம், என வேனிற் காலத்தினை விளக்க, **“பாதிரி, குரவு, குயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **“புன்காற் பாதிரி அரிநிறத் திரள்வீ; அரவு எயிற்று அன்ன அரும்பு முதிர் குரவின்; குயில்குரல் கற்ற வேனிலும் துயில் துறந்து”** (அகம்; பா-237; வரி-1,3,5) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

பாதிரி மரத்தின் தேன் பொருந்திய வாடிய பூக்கள் மணக்கும் வேனிற் காலம், என வேனிற் காலத்தினை விளக்க, **“பாதிரி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“வேனிற் பாதிரிக் கூனி மார்பன்”** (அகம்; பா-257; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

செம் முருக்கினது பூங்கொத்தில் உள்ள மதுவை நிறைய உண்டு வண்டுகள் தேன்களைச் சிதறச் செய்யும் இளவேனிற் காலம், என இளவேனிற் காலத்தினை விளக்க, **“முருக்கு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“பொங்கு அழல் முருக்கின் ஒண்குரல் மாத்தி”** (அகம்; பா-277; வ-17) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

முருக்கு மரத்தின் முற்றாத பல பூவிதழ்கள் உதிரும்படி தேனை உண்ணும். விரும்பினால் வண்டுகள் ஒன்றாய்க் கூடிக்கிண்டி உதிர்த்தன. கோங்க மலரினுள் குரவமரத்தின் நறுமண மலர்கள் குறைந்து உதிர்ந்தன. மான் கூட்டங்கள் இன்பம் உற்ற

அழகிய வேனில் என வேனிற் காலத்தினை விளக்க, **“முருக்கு, குரவம், கோங்கு, மான்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“குவிமுகை முருக்கின் கூர்நுனை வை எயிற்று; அரவ வண்டினம் ஊதுதொறும் குரவத்து; ஓங்கு சினை நறுவீ கோங்கு அலர் உறைப்ப; ஆன் ஏமுற்ற காமர் வேனில்”** (அகம்; பா-317; வரி-4,10-11,14) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வெயிலின் விளக்கம் போல் விளங்கும் மலர்கள் பொருந்திய மராமரத்திலிருந்து குயில் செய்யும் ஆரவாரம் கேட்கும் இளவேனிற் பருவம், எனப் பருவத்தினை விளக்க, **“மராஅம், குயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வெயில் அவிர் புரையும் வீ ததை மரா அத்துக்; குயில் இடு பூசல் எம்மொடு கேட்ப”** (அகம்; பா-317; வரி-15-16) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

கோங்க மரங்களும் மெல்ல மெல்லக் கொய்யப்படும் தளிர்களை உடையன. குயிலும் தேன் பெருகும் மாமரத்தில் உயர்ந்த கிளையிலிருந்து கூவும். குறுகிய அடிப்பகுதியையுடைய காஞ்சி மரத்தின் மாலை போன்ற பூக்கள் உதிரும் வேனிற் பருவம் என வேனிற் பருவத்தினை விளக்க, **“கோங்கம், குயில், மா, காஞ்சி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கோங்கும் கொய் குறை உற்றன; குயிலும் தேம்பாய் மா அத்து ஓங்கு சினை விளிக்கும்; குறுங்காற் காஞ்சிக் கோதை மெல் இணர்”** (அகம்; பா-341; வரி-2-3,9) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

வண்டுகள் தேனையுண்டு ஒலிக்கும் பெரிய கிளைகளையும் கரிய அடியையும் உடைய நுணாமரம். அதில் மலர்கள் மலர்ந்து மணம் கமழ்கின்றன. இவ்வியல்பு வாய்ந்த வேனிற்பருவம் என வேனிற் பருவத்தினை விளக்க, **“நுணாமரம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“கருங்கால் நுணவம் கமழும் பொழுதே”** (ஐ.நூறு; பா-342; வ-3) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

திண்மையான நிலையையுடைய கோங்க மரம் அரும்பிய அழகு மிகுந்த கொழுவிய அரும்பு முறுக்கு அவிழ்ந்து மலரும் வேனிற் பருவம் என வேனிற் பருவத்தினை விளக்க, **“கோங்கம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“திண்நிலைக் கோங்கம் பயந்த”** (ஐ.நூறு; பா-343; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

நறுமணப் பூக்களையுடைய குரவமரம் காய்ந்த பாலையைக் கொய்யும் பருவமாகிய இளவேனில், என இளவேனில் காலத்தினை விளக்க, **“குரவம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“நறும் பூங்குரவம் பயந்த”** (ஐ.நூறு; பா-344; வ-2) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

அழகிய கிளைகளையுடைய பாதிரி மலர்ந்தது. சிவந்த கண்ணையுடைய கருங்குயில் கூவும் இளவேனிற் பருவம் என இளவேனிற் பருவத்தினை விளக்க, **“பாதிரி, குயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **“அஞ்சினைப் பாதிரி அலர்ந்தெனச்; செங்கண் இருங்குயில் அறையும் பொழுதே”** (ஐ.நூறு; பா-346; வரி-2-3) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

அழகும் தகுதியும் பொருந்திய இளமையான கொங்கை பொலிவு அடையுமாறு பொரி போன்ற பூக்களையுடைய புன்க மரத்தின் தளிர்களை அணியும் வேனிற் பருவம் என வேனிற் பருவத்தினை விளக்க, **“புன்கம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே”** (ஐ.நூறு; பா-347; வ-3) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

வலப்பக்கமாகச் சூழ்ந்த மலர்களையுடைய மராமரம் மலர்ந்து நல்ல மணம் கமழும் குளிர்ந்த சோலையில் பூக்கள் மலரும் இளவேனிற் பருவம் என இளவேனிற் பருவத்தினை விளக்க, **“மராஅம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்கும் பாடல் வரி, **“வலஞ்சுரி மராஅம் வேய்ந்து நம்”** (ஐ.நூறு; பா-348; வ-2) என்பதாகும்.

வேனிற் காலமே சிறந்த காலம் என்பதை விளக்கும் சான்றுகள் பின்வருமாறு: ***“வேனிற் கால நண்பகலில் பாலை நிலத்தில் பிரிவொழுக்கம் நிகழும், பாலை என்பது முல்லை குறிஞ்சி நிலங்களிலுள்ள மரஞ்செடி கொடிகளின் வளம் வெயிலால் உலர்ந்து அந்நிலங்களை விட்டுப் பிரிந்த வறண்ட தண்மை, நீர் நிழல் இல்லாமை, பசியால் வாடியலையும் கொடிய விலங்குகள் இருத்தல் முதலியன அவ்வழிச் செல்வோர்க்குத் துன்பந் தருமாகையால் பிரிந்திருக்கும், தலைவிக்கு அருளுணர்வு பிறத்தற்கு ஏதுவாகும். பிரிந்து போகின்றவனைப் பற்றிக் கூறுவன வெல்லாம் பாலையாகும்”*** (புலவர் குழந்தை; தொல்காப்பியர் காலத்தமிழர்; ப-108) என்பர்.

வேனில் பருவத்தில் பாதிரியின் விரிந்த மலர்கள் மலருகின்றன என வேனிற் காலத்தினை விளக்க, **“பாதிரி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“வேனில் பாதிரி விரிமலர்க் குவைஇத்”** (ஐ.நூறு; பா-361; வ-2) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பொரிந்த அடிப்பாகத்தை உடைய கோங்கின் பொன் போன்ற மலர்கள் விரிந்த கொத்துக்களை உடைய வேங்கைப் பூவுடன் வேறுபட அணிந்து பலவாய் விரவிய பூக்களால் பொலிந்த வேனிற் பருவம் என வேனிற் பருவத்தினை விளக்க, **“கோங்கம், வேங்கை”** என்னும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க,

**“பொரியரைக் கோங்கின் பொன் மருள் பசுவீ; விரியினர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி”** (ஐ.நூறு; பா-367; வரி-1-2) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தீயைப் போன்ற நிறைய உடைய இலவ மரத்தினின்றும் உதிர்ந்த பல மலர்கள் பொரி போன்ற மலர்களைக் கொண்ட புன்க மரத்தின் புள்ளி பொருந்திய நிழலில் கிடந்து அழகுபடுத்தும் குளிர்ந்த வேனிற் பருவம் என வேனிற் பருவத்தினை விளக்க, **“இலவம், புன்கம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **“எரிப்பூ இலவத்தூழ் கழி பன்மலர்; பொரிப்பூம் புன்கின் புகர்நிழல் விரிக்கும்”** (ஐ.நூறு; பா-368; வரி-1-2) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நம்பி மூத்தபிரானைப் போன்ற வெண்கடம்ப மரம், கதிரவனைப் போல செருந்தி மரம், மீன் கொடியையுடைய காமன் போன்ற காஞ்சிமரம், காமனின் தம்பியான சாமன் போன்ற ஞாழல் மரம், காளைக் கொடியைப் போன்ற இறைவனின் இலவமரம், இத்தகைய ஐவரின் நிறத் தன்மை போன்ற மலர்களையுடைய மரங்களின் அழகு பெற விளங்கும் இளவேனிற் பருவம், என இளவேனிற் பருவத்தினை விளக்க, **“கடம்பம், செருந்தி, காஞ்சி, ஞாழல், இலவம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதனை, **“ஒரு குழை ஒருவன் போல், இணர் சேர்ந்த மராஅமும்; பருதி அம் செல்வன் போல், நனை ஊழ்த்த செருத்தியும்; ஏனோன்போல், நிறம் கிளர்பு கஞலிய ஞாழலும், ஆன் ஏற்றுக் கொடியோன் போல் எதிரிய இலவமும்”** (கலி; பா-26; வரி-1-5) ஆகிய வரிகள் விளக்குகின்றன.

பெண்மானின் கண் போன்ற பார்வையை உடைய மகளிரின் பற்களைப் போல் முல்லையின் அரும்புகள் அலரும் இளவேனிற் காலம் என இளவேனிற் காலத்தினை விளக்க, **“மான், மௌவல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“பேதுறு மடமொழி பிணை எழில் மான் நோக்கின்; மாதரார் முறுவல் போல், மண மௌவல் முகை ஊழ்ப்ப”** (கலி; பா-27; வரி-3-4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஈங்கையின் வாடிய பூக்காம்பு கழன்று அம்மணலில் விழும் கணவரைப் பிரிந்த மகளிர் நெற்றியைப் போல் முன்னம் மலர்ந்த பீர்க்கம்பூ காதலித்த தலைவரைக் கூடிய மங்கையரின் முகம் போல் நீர் நிலையில் மலரும் தாமரை புதிதாய்ப் பூக்கும் இளவேனிற் காலம், என இளவேனிற் காலத்தினை விளக்க, **“ஈங்கை, பீர்க்கம், தாமரை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வடுத்து ஊர வரிப்ப போல் ஈங்கை வாடு உதிர்பு உக; பிரிந்தவர் நுதல் போலப் பீர் வீய காதலர்ப்; புணர்ந்தவர் முகம்**

**போலப் பொய்கை பூப் புதிது ஈன"** (கலி; பா-31; வரி-3-5) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

தீயைப் போல் இலவம் பூக்க பொரியின் வடிவத்தை ஒத்த புன்கு மரங்கள் மலர்களைச் சிந்த புதிய மலர்களை உடைய கோங்க மரம் பொன் போன்ற தாதைச் சிந்தும் இளவேனிற் பருவம் என இளவேனிற் பருவத்தினை விளக்க, **"இலவம், புன்கு, கோங்கு"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"எரி உரு உறழ இலவம் மலர; பொரி உரு உறழ்ப் புன்கு பூ உதிர; புது மலர்க் கோங்கம் பொன் எனத் தாது ஊழ்ப்ப"** (கலி; பா-33; வரி-10-12) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மலர்ந்த காஞ்சிப் பூவின் தாதில் ஆடிக் குயில்கள் தம் பெடையை அழைக்கும் இளவேனிற் பருவம் என இளவேனிற் பருவத்தினை விளக்க, **"காஞ்சி, குயில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"விரி காஞ்சித் தாது ஆடி இருங்குயில் விளிப்பவும்"** (கலி; பா-34; வ-8) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

வண்டுகள் குளிர்ந்த அருவி நீரினால் வளர்ந்த நறிய முல்லைப் பூவில் உள்ள தாதை உண்ணும் இளவேனிற் பருவம் என இளவேனிற் பருவத்தினை விளக்க, **"முல்லை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"தண் அருவி நறு முல்லைத் தாது உண்ணும் பொழுதன்றோ"** (கலி; பா-35; வ-10) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றன.

பலதேவனின் துழாய் மாலை போல் விளங்கும் வெண் கடம்பமரம், அதன் உயர்ந்த இடத்தில் ஆரவாரிக்கும் மயில்கள் அனைத்தும் தங்கும் சீர்மை அமைந்த இளவேனிற் பருவம் என இளவேனிற் பருவத்தினை விளக்க, **"மராத்து, மயில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"கொடு மிடல் நாஞ்சிலான் தார் போல் மராத்து; நெடுமிசைச் சூழும் மயில் ஆலும் வீர"** (கலி; பா-36; வரி-1-2) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மின்னுகின்ற இனிய இறகுகளை உடைய கரிய குயில் தன்மேனி பொன்னை உரைத்த பொடியானது விளங்குகின்ற உரைகல்லை ஒக்கும்படி மாமரத்தின் கிளையினிடத்து நறிய பூந்தாதைக் கோதுகின்ற இளவேனிற் காலம் என இளவேனிற் காலத்தினை விளக்க, **"குயில், மா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **"மின்னின் தூவி இருங்குயில் பொன்னின்; உரை திகழ் கட்டளை கடுப்ப மாச்சினை"** (குறுந்; பா-192; வரி-3-4) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பெரிய கோங்கு மரத்தின் குவிந்த மொட்டுக்கள் மலரவும் ஈங்கையின் நல்ல தளிர்கள் இனிமை தோன்ற அசையவுமான காலமாகிய இளவேனிற் காலம் என இளவேனிற் காலத்தினை விளக்க, **“கோங்கம், ஈங்கை”** என்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கோங்கம் குவி முகை அவிழ ஈங்கை”** (நற்; பா-86; வ-7) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

முதுவேனிற் காலத்தில் விடாத நடையையுடைய ஓந்தி என்னும் வழுவை தன் துணையோடு விரியுடைய மரலின் மடல் விரியாத குருத்துப் போல வாடியது என முதுவேனிற் காலத்தினை விளக்க, **“ஓந்தி, மரல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன இதனை, **“வேனில் ஓதிப்பாடு நடைவழுவை; வரி மரல் நுகும்பின் வாடி அவண”** (நற்; பா-92; வரி-2-3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஆற்றங்கரைப் பக்கமுள்ள மாமரங்களின் அசையும் கிளைகள் விளங்கியிருந்தன. தளிர்கள் அழகு எய்தியிருந்தன. குளிர்ந்த நறுமணமுள்ள சோலையிலே சிவந்த, கண்களையுடைய கரிய பெண் குயில்கள் ஆண் குயில்களோடு விரும்பி உட்கார்ந்து கொண்டு ஒன்றையொன்று எதிர் எதிர் விரும்பிக் கூவின. பூக்கள் மலர்ந்திருக்கும் இளவேனில் காலம் என இளவேனிற் காலத்தினை விளக்க. **“மா, குயில்”** போன்ற கருப்பொருள்கள் கொண்டு விளக்கப்படுகின்றன. இதனை, **“அடைகரை மா அத்து அலங்கு சினை பொலியத்; சேவலொடு கெழீஇய செங்கண் இருங்குயில்”** (நற்; பா-118; வரி-1,3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

குரவம் என்னும் மரம் கொழுந்துகளை விட்டு அதன் பிறகு அரும்புகளைத் தோற்றுவித்தன. சிவந்த கண்களையுடைய கரிய குயில்கள் மாவின் பூங்கொத்துள்ள கிளைகளில் எதிர் எதிர் உட்கார்ந்து கொண்டு ‘கணவனோடு சேர்ந்தவர்கள் பிரியாதீர்கள், பிரிந்தால் சேர்ந்து கொள்ளுங்கள்’ என்று குரல் எழுப்புகின்ற இளவேனிற் காலம் என இளவேனிற் காலத்தினை விளக்க, **“குரவம், குயில், மா”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கொழுந்து, முந்துறீ இக் குரவு அரும்பினவே; செங்கண் இருங்குயில் எதிர் குரல் பயிற்றும்”** (நற்; பா-224; வரி-3,5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**கூற்றுகள்**

இனிய முழக்கம் உடைய ஆண் மானான இனத்தை உடைய உயிர்ப்புத் தோன்றும் இளைய மான், என உடன்போக்குச் சென்ற மகள் போகிய வழி செவிலி சென்று எதிர்கொண்ட மானினை நோக்கிக் கூறியது எனச் செவிலி கூற்றினை விளக்க, **“மான்”**

எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“ஏறுடை இணைத்த நாறு உயர் நவ்வி”** (அகம்; பா-7; வ-10) என்ற பாடல் வரி பயன்படுத்தப் பட்டுள்ளது.

கிளி சுழன்ற பார்வையையுடைய அழகுமிக்க ஒளி பொருந்திய நெற்றியை உடைய பசிய கிளி போன்றவள் வளர்த்த பச்சைக்கிளி ஆகும் எனத் தன் மகள் உடன்போக்கில் சென்றதை அறிந்த நற்றாயின் கூற்றினை விளக்க, **“கிளி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“இது என் பைங்கிளி எடுத்த பைங்கிளி”** (ஐ.நூறு; பா-375; வ-2) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

நெல்லியின் பசுமையான காய்களைப் பலாவின் பழத்துடன் உண்டு சிவந்த அடிமரத்தையுடைய செங்கடம்பு மரத்தின் இடை வெளியுடைய நிழலில் அமர்ந்திருப்பவர், நீண்ட சிறகுகளையும் குறுகிய காலையும் உடைய மகன்றில் பறவை போல் பிரிதற்கு அரிய இயல்புடையவர்களாக உள்ளனர் எனத் தலைவன் தலைவியின் அன்பினை உடன்போக்கினைக் கண்டவர்கள் கூறியதாக அமைவதை விளக்க, **“நெல்லி, பலா, செங்கடம்பு”** போன்ற கருப்பொருட்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“பைங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து; செங்கண் மரா அத்த வரிநிழலிருந்தோர்”** (ஐ.நூறு; பா-381; வரி-1-2) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மலையின் அடிவாரத்தில் தொடும்படி உள்ள கரும்பு நட்ட பாத்தியைப் போன்ற பெரிய ஆண்யானையினது அடிச் சுவட்டின் கண் தங்கிய நீரை அத்தலைவரோடு நெல்லிக்காயைத் தின்ற முள்ளைப் போன்ற கரிய பற்கள் விளங்கும்படி தீ உண்ணுதலை நினைத்தேன் எனத் தலைவன் தலைவி உடன்போக்கில் செல்லும் நிகழ்ச்சியினைத் தோழி கூறும் கூற்றினை விளக்க, **“நெல்லி, யானை, கரும்பு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகளாவன, **“கரும்பு நடு பாத்தி அன்ன; பெருங்களிற்று அடிவழி நிலைஇய நீரே”** (குறுந்; பா-262; வரி-7-8) என்பதாகும்.

விளையாடும் இடத்திலுள்ள நொச்சி வேலியைக் காணும் தோறும் விரைந்து கண்ணீர் ஒழுகும் கண்ணோடு அழுகின்றேன். அவள் வளர்த்த கிளிகளும் என்னை விட மிகக் கூடிக் கத்துகின்றன எனத் தலைவி உடன்போக்கில் செல்வதற்குக் காரணம் தானே என நற்றாய் கூறுகின்ற கூற்றினை விளக்க, **“நொச்சி, கிளி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“ஓரை ஆயமும் நொச்சியும் காண்தொறும்; கிள்ளையும் கிளை எனக் கூஉம் இளையோள்”** (நற்; பா-143; வரி-3,5) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

சேய்நாட்டுச் சுவையான காய்களையுடைய நெல்லி மரச் சோலை வழியே போகும் போது இடையிலே திரண்டு வீழ்ந்த காயை ஒரு சேரத்தின்று பூக்களுள்ள சுனையின் மிகச்

சிலவாய நீரைக் குடித்துச் செல்வாள். குவளை மலர் போன்ற மையுண்ட கண்ணளாய என் மகள் சென்று விட்டாள். ஒரு தன்மையாகிய சிவந்த பனங் குருத்தைக் கண்டு பதனிடுமாறு போடுதலான மாலைப் பொழுதில் சென்ற பின் காண்பதற்கு இறந்திருக்கலாம், எனத் தனது மகளான தலைவி உடன்போக்கில் சென்றதற்கு பிறகு உயிருடன் இருப்பதற்கு இறப்பு நிகழ்ந்திருக்கலாம் என மருட்சியடைந்த நற்றாய் கூறும் கூற்றினை விளக்க, **“நெல்லி, குவளை, பனை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“சுவைக்காய் நெல்லிப் போக்கு அரும் பொங்கர்; குவளை உண்கண் என மகள் ஓரன்ன”** (நற்; பா-271; வரி-5,8) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

முள்வேலியின் மேலே படர்ந்திருக்கும் தாதொடு நெருங்கிய குலையோடு சேர்ந்த பீர்க்கம்பூ. அப்பூவின் தேனை ஊதிவிட்டு அதற்கு மாறுபட்ட பசலையை ஊதமாட்டாய் எனத் தலைவி தன் ஆற்றாமையைத் தும்பியிடம் கூறுவதற்கு, **“பீர்க்கம்பூ”** எனும் கருப்பொருளைப் பயன்படுத்தியுள்ளார். இதனை விளக்க, **“தாது படு பீரம் ஊதி வேறுபட”** (நற்; பா-277; வ-7) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**வாடைக்காற்று**

யானையானது நீரைக் குடித்துப் பெருமூச்சு விட்டதைப் போன்று கண்பார்வையை மறைக்கின்ற பனித்துளிகளால் தாமரை மலர்கள் கரிந்தழியும். இத்தகையப் பனிப்பருவத்தின் நள்ளிரவில் மலைகளையும் நடுங்கச் செய்யும் குளிரை உடைய வாடைக் காற்று என வாடைக்காற்றினை விளக்க, **“களிறு, முளரி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“களிறு உயிர்த் தன்ன கண் அழி துவலை; முளரி கரியும் முன்பனிப் பானாள்”** (அகம்; பா-163; வரி-7-8) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

அகன்ற வயலில் உள்ள நீண்ட தண்டையுடைய கரும்பின் பெரிய பூக்கள் வாடைக் காற்றால் அசைந்திட பசிய இலை நெருங்கிய புதர்தோறும் பகன்றை நீலம் ஊட்டப்பெற்ற தோலின் நிறம் மறையுமாறு கொழுத்த இலையையுடைய அவரைக் கொடியின் அரும்புகள் விரிய, தோன்றியின் ஒள்ளிய பூக்கள் கட்டவிழ, தலைவரைப் பிரிந்த மகளிர் அழகிழந்து நடுங்கப் பனிப்பருவம் வந்தது எனப் பனிப்பருவத்தினை விளக்க, **“கரும்பு, பகன்றை, அவரை, தோன்றி”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நீடு கழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்; பாசிலைப் பொதுளிய புதல்தொறும் பகன்றை; கோழிலை அவரைக் கொழுமுகை அவிழ, ஊழ்உறு தோன்றி ஒண்பூத் தளைவிட; புலம்தொறும் குருகினம் நரல கல்லென”** (அகம்; பா-217; வரி-4,6,9-11) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வாடைக் காற்றின் நன்மையையும், கொடுமையையும் விளக்கும் நெடுநல்வாடை நூலில் வரும் பிரிவாற்றாமை கருத்துப் பின்வருமாறு:

***"கணவனின் பிரிவால் வாடிய கோப்பெருந்தேவி அவ்வோவியத்தைத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் மனைவி கோப்பெருந்தேவி படுத்திருந்த கட்டிலின் மேற்கூரையில் பலவகை ஓவியங்கள் தீட்டப் பெற்றிருந்தன. அவற்றுள் திங்களின் பக்கத்தில் உரோகிணி இருப்பது போன்ற ஓவியம் ஒன்று இருந்தது. கணவனின் பிரிவால் வாடிய கோப்பெருந்தேவி அவ்வோவியத்தைக் கண்டு, 'உரோகிணியைப் போல நானும் என் கணவனோடு என்றுமே இணைந்திருக்க முடியாதோ' என எண்ணிப் பெருமூச்சு விட்டாள் என்பதை,***

***"திண்நிலை மருப்பின் ஆடுதலையாக (மேஷராசி)***

***விண் ஊர்பு திரிதரும் வீங்குசெலல் மண்டிலத்து***

***முரண்மிகு சிறப்பின் செல்வனோடு நிலை இய***

***உரோகிணி நினைவனள் நோக்கி"*** (160-163) என்ற நெடுநல் வாடையின் பாடல் வரிகள் விளக்குகின்றன.

உயர்ந்த அழகிய இதழையுடைய காந்தள் சுடரையுடைய அரும்பு விரிந்தது. சுரிந்த அரும்புடைய முசுண்டையின் கட்டவிழ்ந்த பெரிய பூ வானை அழகுபடுத்தும். நண்டு தனது வளைக்குள் போய்ச் சேர்ந்தது. அகலமான வயலில் கிளைத்து விரிந்த கரும்பினது திரண்ட காம்பையுடைய பெரிய பூ மழையில் நனைந்த நாரையைப் போல ஈரம் உடையதாய் வளைந்திருந்தது. பனி தாங்கிய வாடைக் காற்று என வாடைக் காற்றினை விளக்க, **"காந்தள், முசுண்டை, நண்டு, கரும்பு, நாரை"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"வாடையொடு நிவந்த ஆய்இதழ்த் தோன்றி; சுரிமுகிழ் முசுண்டைப் பொதி அவிழ் வான்பூ; கிளைவிரி சுரும்பின் கணைக்கால் வான்பூ; மாரிஅம் குருகின் ஈரிய குரங்க"** (அகம்; பா-235; வரி-7,9,12-13) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

அவரையின் அழகிய மலர்கள் உதிர பவளம் போன்ற இண்டைக்கொடி பூக்க, பகன்றை ஊரின் பக்கத்தின் அழகுண்டதாக மலர, வயலின் நெல்ஒலி செய்யும் பள்ளங்களைத் துழாவிக் கல்லென்ற ஒலியுடன் வாடைக் காற்று வீசுகிறது என வாடைக் காற்றினை விளக்க, **"அவரை, ஈங்கை, பகன்றை, நெல்"** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"அவரை ஆய்மலர் உதிரத் துவரின; பாங்கு துளைத்**

**துகிரிண் ஈங்கை பூப்ப; இறங்கு போது அவிழ்ந்த ஈர்ம்புதல் பகன்றை; நெல்ஒலி பாசவல் துழைஇக் கல்லென"** (அகம்; பா-243; வரி-1-3,7) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

கருவிளைப் பூவுடன் மாறுபட்ட பகன்றைச் செடியின் மலர்களின் உள் இதழ்களை அசையும் பலாக்காய் போன்ற புறத்தை உடைய அழகிய பழங்கள் பொருந்திய பாகற் கொடிகள் கூதாளியின் கொடிகளின் கூட்டத்தில் கிடந்து அசையும்படி வருந்தும் என வாடைக் காற்றினை விளக்க, **"கருவிளை, பகன்றை, பலா, கூதளம்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"கருவிளை முரணிய தண்புதல் பகன்றை; பலவுக் காய்ப் புறத்த பசும்பழப் பாகல்; கூதள மூதிலைக் கொடிநிரைத் தூங்க"** (அகம்; பா-255; வரி-11,13-14) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பகை மன்னனைக் கொன்று அவன் நாட்டைக் கொண்டு ஆண்யானை மீது வருபவரின் வீரத்தால் தோன்றிய வாடைக்காற்று உயிரைக் கொள்கிறது என வாடைக் காற்றினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"தயங்கிய களிற்றின் மேல் தகை காண விடுவதோ"** (கலி; பா-31; வ-10) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

அரக்கு உருக்கியது போன்ற சிவந்த வட்டமான மொட்டையுடைய ஈங்கையின் மென்மையான தலையையுடைய புதிய பூவின் பனித்துளி தன்னுடன் கலக்கச் செய்கின்ற வாடைக்காற்று என வாடைக் காற்றினை விளக்க, **"ஈங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"அட்டரங்கு உருவின் வட்டு முகை ஈங்கை"** (நற்; பா-193; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

கரும்பின் வேல் போன்ற வெண்முகை விரியும்படி தீண்டுவது வாடை அறிவு மிக்க குருவி முயன்று செய்த கூட்டினை மூங்கிலின் அழகிய கழை அசையத் தாக்குவது வடபுல வாடை என வாடையினை விளக்க, **"கரும்பு, மூங்கில்"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **"இரும் பல் மென் அணை ஒழிய கரும்பின்; மூங்கில் அம் கழைத் தூங்க, ஒற்றும்"** (நற்; பா-366; வரி-7,10) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**தலைவன் செலவு ஒழிதல்**

கூர்மையான முளையையுடைய களாவின் பூ மலர்ந்து கமழ்ந்தது. பிடவின் பூ தளையவிழ்ந்தது. மேகம் மழை பொழிந்த அழகிய கார்காலம் இது. கரிய பிடரியையுடைய ஆண் மான்கள் இளைய பெண் மான்களைத் தழுவிக் கொண்டு வயிரம்

கொண்டவேலமரத்தின் தாழ்ந்த கிளைகள் தந்த கண்கவரும் வரி நிழலில் தங்கியிருக்கும். குளிர்ந்த கானத்தின் வழி தலைவன் தான் செல்வதைத் தவிர்த்தான் எனத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்வதை ஒழிந்ததை விளக்க, **“களா, பிடவம், மடப்பிணை, இரலை, வேலம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை, **“களவுடன் கமழ பிடவுத் தளை அவிழ; மடப்பிணை தழீஇய மா எருத்து இரலை; காழ் கொள் வேலத்து ஆழ் சினை பயந்த”** (நற்; பா-256; வரி-6,8-9) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**அன்பு நிலை**

அகன்ற துறையில் நீராடிய ஆயர் மகளிர் குளிர்ந்த தழையை உடுத்திக் கொள்ளக் குருந்த மரம் வளையும்படி மிதித்துத் தந்தான் கண்ணன். அவனைப் போல ஆண்யானை இளைய பெண்யானை அழகிய தளிரை உண்ணுதற்கு முன்பு உயர்ந்த நிலையை உடைய யா மரத்தை வளைத்துத் தந்து மதநீரால் நனைந்த கன்னத்தில் படியும் வண்டுகளை ஓட்டும். இத்தகைய அன்புச் செயலினை விளக்க, **“குருந்தமரம், மடப்பிடி, யாமரம், களிறு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“மரம் செல மிதித்த மாஅல் போல; புன்தலை மடப்பிடி உணீஇயர் அம் குழை; நெடுநிலை யாஅம் ஒற்றி நனை கவுள்; படி ஞிமிறு கடியும் களிறே-தோழி”** (அகம்; பா-59; வரி-6-9) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பெண்யானையின் பசியை நீக்கும் பொருட்டுப் பெரிய துதிக்கையை உடைய ஆண்யானை மெல்லிய கிளைகளை உடைய, ‘யா’ மரத்தின் பட்டையை உரித்து அதன் நீரை அப்பெண் யானையைப் பருகச் செய்யும் அன்பு நிலை, என விலங்குகளின் அன்பு நிலையினை விளக்க, **“பிடி, வேழம், யா”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“பிடி பசி களைஇய பெருங்கை வேழம்; மென் சினை யாஅம் பொளிக்கும்”** (குறுந்; பா-37; வரி-2-3) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

விரைவாகக் கிளைத்த கொம்புகளை உடைய முதிய ஆண்மான் தன்பசி நோயைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டுக் காலால் வளைத்த பருத்த பெரிய மரப்பட்டையைத் தன் குட்டி உண்டபின் எஞ்சியதைத் தான் உண்டு பின் குற்றமில்லாத நெஞ்சினோடு துள்ளி நடக்கும் இயல்பினை உடைய தன் குட்டிக்கு நிழலாக நின்று வெயிலில் இருந்து காக்கும் என விலங்கினங்களின் அன்பு நெறியினை விளக்க, **“மான்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“தெறித்து நடை மரபின் தன் மறிக்கு நிழல் ஆகி”** (குறுந்; பா-213; வ-5) என்ற பாடல் வரியானது விளக்கி நிற்கின்றது.

**தலைவியின் தன்மை**

மேகம் தவழும் பொதிய மலையில் வேங்கை மலரினது மணத்தையும் காந்தள் மலரினது மணத்தையும் ஒருங்கே பெற்றவளும் ஆம்பல் மலரைக் காட்டில் குளிர்ச்சியையும் உடையவள் தலைவி எனத் தலைவியின் தன்மையினை விளக்க, **“வேங்கை, காந்தள், ஆம்பல்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“வேங்கையும் காந்தளும் நாறி; ஆம்பல் மலரினும் தான் தண்ணியளே”** (குறுந்; பா-84; வரி-4-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆயர்களின் செயல்**

கழனியிடத்து மலர்ந்த காவி மலர்களைப் பறித்து ஆயத்தார் விளையாடினார்கள் என ஆயர்களின் செயலினை விளக்க, **“காவி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“கழிய காவி குற்றும் கடல”** (குறுந்; பா-144; வ-1) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**சோலை**

குளிர்ந்த மலையில் கூட்டமான யானைகள் இயங்கும் சோலை எனச் சோலையினை விளக்க, **“களிறு”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“இனக்களிறு வழங்குஞ் சோலை”** (ஐ.நூறு; பா-379; வ-3) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

கொல்லும் புலியானது கரிய கடலின் ஒலிபோல ஆரவாரம் செய்து வலமாக எழுந்து உலாவுகின்ற சோலைகள் எனச் சோலையினை விளக்க, **“புலி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“கோட்புலி வழங்கும் சோலை”** (ஐ.நூறு; பா-237; வ-6) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

**கள்வரின் தன்மை**

புறாவினது முதுகைப் போன்ற புல்லிய அடியை உடைய உகாய் மரத்தினது மணியைப் போன்ற செறிந்த பழங்கள் உதிரும்படி விடுகின்ற அம்பை வில்லோடு பிடித்து உயர்ந்த இடத்தின் மேல் ஏறி வழியிலே வருபவரைப் பார்க்கும் தறுகண்மையை உடைய ஆறலைக் கள்வரின் தன்மையினை விளக்க, **“புறா, உகாமரம்”** போன்ற கருப்பொருள்களின் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“புறவுப் புறத்தன்ன புன் கால் உகாஅத்து”** (குறுந்; பா-274; வ-1) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப் பட்டுள்ளது.

**அலர்**

மூங்கில் காட்டில் உண்டான தீயைப்போல ஊரில் அலர் எழுந்தது, என ஊரில் ஏற்பட்ட அலரினை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“தட்டைத் தீயின் ஊர் அலர் எழவே”** (ஐ.நூறு; பா-340; வ-4) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

குரவ மரத்தின் நீண்ட கிளையில் வதியும் வேனிற் பருவத்துக் கூவும் இயல்புடைய குயில் செய்யும் ஓசையை விடப் பெரிதாயிற்று என அலரினை விளக்க, **“குரவம், குயில்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“குரவ நீள் சுனை உறையும்; பருவ மாக்குயில் கௌவையின் பெரிதே”** (ஐ.நூறு; பா-369; வரி-4-5) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**இரவுக்குறி**

இரவ மரத்தின் கொட்டை போன்ற அரும்புகள் முதிரப் பெற்ற இண்டைக் கொடியின் ஆலங்கட்டி போன்ற வெண்மையான மலர்கள் உதிர்ந்து பரவவும் கூர்மையான விரலையுடைய ஓந்தியின் கரிய கழுத்தைப் போன்று குவளை மலர்கள் மலர்ந்திடவும் மதநீர் இல்லாது மாறிப் போன உறங்காத கண்களையும் பரந்த அடிகளையும் பருத்த வாயையும் உடைய யானைகளைப் போன்று வானத்தில் உயர்ந்து இயங்கும் மேகம் வானத்தின் திசைகளில் எல்லாம் திரியும் நள்ளிரவு, என நள்ளிரவுப் பொழுதினை விளக்க, **“இரவம், இண்டைக் கொடி, ஓந்தி, குவளை, யானை”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்க, **“இரங்காழ் அன்ன அரும்பு முதிர் ஈங்கை; வைவால் ஓதி மை அணல் ஏற்பத்; தாது உறு குவளைப் போது மணி அவிழப்; கடாஅம் மாறிய யானை போலப்”** (அகம்; பா-125; வரி-3,5-6,8) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கற்குவியலையுடைய செல்வதற்கு அரிய கவர்ந்த வழியில் உலவும் சிறிய கண்ணையுடைய யானை என்னும் மிக்க பகைக்கு அஞ்சாது இரவுப் பொழுதில் தலைவன் வருகின்றான் என இரவுக் குறியின் துயரத்தை விளக்க, **“யானை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **சிறுகண் யானை உறுபகை நினையாது”** (ஐ.நூறு; பா-362; வ-2) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**அறத்தொடு நிற்றல்**

தலைவியின் மாற்றம் கண்டு தோழி வினவியதற்குப் பதிலாகத் தலைவி அறத்தொடு நின்றதாவது ‘தளிரும் மலர்க் கொத்துகளும் உடைய கோங்கின் பூவைத் தலைவன்

தந்ததால் ஏற்பட்டது’ எனத் தலைவி அறத்தொடு நிற்றலை விளக்க, **“கோங்கம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“முறியிணர்க் கோங்கம் பயந்தவாறே”** (ஐ.நூறு; பா-366; வ-5) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**தலைவனின் வில்**

புதிய மூங்கிலால் செய்யப்பட்ட வலிய வில் ஏந்திய தலைவன் எனத் தலைவனின் வில்லினை விளக்க, **“மூங்கில்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“அம்பு அமை வல்வில் விடலை தாயே”** (ஐ.நூறு; பா-373; வ-5) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**குளிர்ந்த காலம்**

வயல் நெல்லின் பலவாய்க் கிளைத்த முதலிலிருந்து தோன்றிய நெற் கதிர்கள் நிரம்பிய வயலிடத்து வரப்புகளை அணையாகக் கொண்டு கிடந்து அலையத் தனிமைத் துன்பத்தைக் கொண்டு வரும் பனிக்கால வாடைக் காற்று விளங்கும் பூக்களையுடைய கரும்பின் ஓங்கிய தண்டின் மீதிருந்த வெண் நாரை ஒலிக்கும்படி வீசும் நுட்பமான பலவான துளிகளைக் கொண்ட குளிர்ந்த காலம், எனக் குளிர்ந்த காலத்தினை விளக்க, **“நெல், குருகு”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கழனி நெல் ஈன் கவை முதல் அலங்கல்; வெண்குருகு நரல வீசும்”** (அகம்; பா-13; வரி-19,23) என்ற பாடல் வரிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**தென்றல் காற்று**

கோல் போன்று மலர்களை உதிரப் புடைத்து மரா மரத்தை அசைத்தலால் அம்மலரின் மணம் தனக்கும் வாய்க்கப் பெற்றது தென்றல் காற்று, எனத் தென்றல் காற்றினை விளக்க, **“மராஅம்”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **“மராஅம் அலைத்த மண வாய்த் தென்றல்”** (அகம்; பா-21; வ-12) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**மழைக்காலம்**

கொடிகள் பின்னிய சிறு காட்டில் இருண்ட நிறமுடைய யானையின் தளர்ச்சி அடையும் நேரத்தைப் பார்த்துக் காத்திருக்கும் ஆண் சிங்கத்தின் வன்மை வாய்ந்தவன். தினையின் வகையுள் ஒன்றான சிறு தினையைக் காக்கும் பரண் மீதுள்ளவன். அவனது கையில் உள்ளதும் கையில் பொருந்தியதும் தீயை உடையதுமான கொள்ளிக்கோல் வீசும் போது வெளிப்படும் சுடர்ப் பொறிகளைப் போல் மின்னல் மழை பெய்கின்றது, என மழைக் காலத்தினை விளக்க, **“வயமான், சிறுதினை, பிடி”** போன்ற கருப்பொருள்கள்

பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“பிடி பதம் பார்க்கும் வயமான் துப்பின்; ஏனல் அம் சிறுதினைச் சேணோன் கையதைப்; பிடிக்கை அமைத்த கனல் வாய்க் கொள்ளி”** (அகம்; பா-73; வரி-13-15) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**மறவர்கள்**

எரிகின்ற தீயானது பரவிய பெருங்காட்டில் புகுமிடத்தில் இலைகள் முதலியன கரிந்து உதிரப் பெற்ற மரங்களை உடைய காட்டில் வாழும் வாழ்க்கையை உடைய கொல்லும் புலியைப் போன்ற வலிமையை உடைய கட்டப்பெற்ற கழலையுடைய மறவர்கள், என மறவர்களின் தன்மையினை விளக்க, **“புலி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“அடு புலி முன்பின் தொடு கழல் மறவர்”** (அகம்; பா-75; வ-6) என்ற பாடல் வரி விளக்குகின்றது.

**வேலின் தன்மை**

ஊக்கம் மிக்கு நெய்தற் பூப்போன்ற வடிவுடைய அழகியதாக விளங்கும் அகன்ற இலையையும் தொடுக்கப்பட்ட மயில் தோகையால் விளக்கமான காம்பையும் மூட்டுவாய் அமைந்த திண்ணிய சுரையையும் கரிய தண்டையும் உடைய வேலைத் துணையாக உடையவன், என வேலின் தன்மையினை விளக்க, **“நெய்தல், மயில்”** எனும் கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“நெய்தல் உருவின் ஐது இலங்கு அகல் இலை; தொடை அமை பீலிப் பொலிந்த கடிகை”** (அகம்; பா-119; வரி-11-12) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**நகைப்பிற்குரிய செயல்**

முதுவேனிற் காலத்தில் குளிப்பதற்கு இடமான சிறிய குளத்தில் தோண்டப்பட்ட குழி. அக்குழியில் உண்பதற்கு இயலாத கலங்கிய நீரால் தன்கன்றை உடைய இளம் பெண்யானையின் மெல்லிய தலையைக் கழுவியது. பின் எஞ்சிய சேற்றினைக் கொண்டு தன்மீது சொரிந்து கொண்டது. அதனால் அதன் நிறம் வேறுபட்டது ஆண்யானை. பின் சிவந்த காம்பையுடைய வெண்கடம்பின் வெள்ளிய கொத்துகள் அசையப் பற்றியது. பின் நினவு பொருந்திய தன் முதுகை அதில் உராய்ந்து கொண்டது. அம்மரத்தில் வரி வரியாய் நிழல் அதில் தங்கி நம்முடன் மென்மையான தோளையுடைய தலைவி வருவாள் எனத் தலைவன் மனதில் கருதிய எண்ணத்தினை அவன் வெளிப்படும் விதமாக உள்ளதை விளக்க, **“மடப்பிடி, வயக்களிறு, மராஅம்”** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை, **“கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணி; சேறு கொண்டு ஆடிய வேறுபடு வயக்களிறு; சொரி புறம் உரிஞிய நெறி அயல் மராஅத்து”** (அகம்; பா-121; வரி-5-6,8) என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**வெறியாடு களம்**

ஆண் வெள் எலி சிவந்த பரற்கற்கள் நிறைந்த வன்நிலத்தில் கிளறி வெளிப்படுத்திய புழுதியில் மணநாளை அறிவிக்கும் வேங்கைப் பூக்கள் உதிர்ந்து சிறந்த வெறியாடு களம், என வெறியாடு களத்தினை விளக்க, **"வேங்கை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"நல் நாள் வேங்கைவீ நன்கனம் விரிப்ப"** (அகம்; பா-133; வ-4) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

**அம்பலம்**

பீர்க்கங் கொடி படர்ந்த பாழ் இடம். அங்கு முருங்கையினைத் தின்ற பெருங்கையையுடைய யானையின் பிடர் உராய்தலால் செங்கல்லான நீண்ட சுவரில் உள்ள விட்டம் வீழ்ந்தது. அதனால் அக் கட்டடத்தில் இருந்து மணிப்புறா, தான் இருந்த மாடத்தை நீங்கியது எனத் தலைவன் தான் தங்கியிருந்த அம்பலத்தை விளக்க, **"பீர்க்கம், முருங்கை, யானை, மணிப்புறா"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனை, **"ஊர் எழுந்து உலறிய பீர்எழு முதுபாழ்; முருங்கை மேய்ந்த பெருங்கை யானை; மணிப்புறாத் துறந்த மரம் சோர் மாடத்து"** (அகம்; பா-167; வரி-10-11,14) என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

ஆண்மரைமான் உராய்ந்தமையால் அசையும் இயல்பை உடைய கந்தினை (தெய்வம் வீற்றிருக்கும் தூண்) உடைய சுரைக்கொடி படரப்பெற்ற அம்பலம் என அம்பலத்தினை விளக்க, **"மரை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"மரை ஏறு சொறிந்த மாத்தாட் கந்தின்"** (அகம்; பா-287; வ-4) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

பருத்த தாளையுடைய யானையின் பருத்த முதுகு உரிஞ்சுதலால் சோர்ந்த விட்டம் வீழ்ந்த முதிய தூண்களையுடைய அம்பலம் என அம்பலத்தினை விளக்க, **"யானை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"பணைத் தாள் யானை பரூஉப் புறம் ஊரிஞ்சி"** (அகம்; பா-373; வ-3) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

**பாக்கம்**

நெடுந்தொலைவு உயர்ந்த காய்ந்த உச்சியையுடைய ஞெமை மரங்களை உடைய ஆள் நடமாட்டம் இல்லாத பாக்கங்கள் என பாக்கத்தினை விளக்க, **"ஞெமை"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **"அலந்தலை ஞெமையத்து ஆள் இல் ஆங்கண்"** (அகம்; பா-187; வ-11) என்ற பாடல் வரியானது விளக்குகின்றது.

**உப்பு வாணிகர்**

பாலை நிலத்தில் உள்ள துய்யினை உச்சியில் கொண்ட புதிய பாதிரி மலரைத் தீயைப் போன்ற இதழையுடைய இலவம் பூவுடன் இடை இடையே கலந்து வெண்மையான தாழம் பூவின் தோட்டில் வைத்துத் தைத்த மாலையை அணிந்தவர் உப்பு வணிகர் என உப்பு வாணிகரை விளக்க, **"பாதிரி, இலவம், தாழம்பூ"** போன்ற கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை விளக்கும் பாடல் வரிகள் பின்வருமாறு, **"அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ; எரி இதழ் அலரியொடு இடைபட விரைஇ"** (அகம்; பா-191; வரி-1-2) என்பதாகும்.

அகன்ற இடத்தல் நிற்கின்ற யாமரத்தினது அழகிய தளிரையுடைய பெரிய கிளைகளால் ஆகிய இல்லம் என உப்பு வாணிகன் இல்லத்தினை விளக்க, **"யாஅத்து"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"நனந்தலை யாஅத்து அம் தளிர்ப் பெருஞ்சினை"** (அகம்; பா-343; வ-10) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

**கிணறு**

நீண்ட கொம்பையுடைய ஆண்யானையினது பெரியகை நீர் வேண்டித் துழாவிப் பார்த்த கிணறு எனக் கிணற்றினை விளக்க, **"ஒருத்தல்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"வெயில் தின வருந்திய நீடுமருப்பு ஒருத்தல்"** (அகம்; பா-207; வ-9) என்ற பாடல் வரி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**வடுகர்**

மயில் கழிந்த தோகையைத் தீண்ட வாரால் வில்லில் கட்டி அந்த வலிய வில்லின் நாணினது விளிம்பிற்குப் பொருந்திய தன்மையுடைய வலிமை மிக்க வடுகர் என வடுகர் இனத்தினை விளக்க, **"மயில்"** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை விளக்க, **"ஒல்கு இயில் மடமயில் ஒழித்த பீலி"** (அகம்; பா-281; வ-4) என்ற பாடல் வரியானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

**கூத்தர்கள்**

செறிவான நடையையுடைய பெண்யானையின் உயிர்ப்பு ஒலியுடன் ஆண்யானையின் உயிர்ப்பொலி கூடியதைப் போன்ற சிறு வங்கியம் பெருவங்கிய ஒலியுடன் தேர் ஒலியைப் போன்று தாள வாத்தியங்களுடன் பல ஊர்களுக்கும் செல்வர் கூத்தர்கள் எனக்

கூத்தர்களின் செயலினை விளக்க, **“பிடி”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனை, **“செறி நடைப் பிடியொடு முழவுப் புணர்ந்தென்ன”** (அகம்; பா-301; வ-16) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது.

**புலவன்**

வெண்மையான காலையும் பல கலனையும் உடைய குதிரைகளைப் பரிசிலாகப் பெற்ற புலவன் எனப் **“புரவி”** எனும் கருப்பொருளைக் கொண்டு புலவரின் சூழல் விளக்கப்பட்டுள்ளது. இதனை, **“பல் படைப் புரவி எய்திய தொல் இசை”** (அகம்; பா-345; வ-5) என்ற வரி விளக்குகின்றது.

**மணல் பகுதி**

மணலில் பல மலர்களும் வேங்கையின் விரிந்த பூக்களும் ஒழுங்குற விளங்கும் மணல் பகுதி என மணல் பகுதியினை விளக்க, **“வேங்கை”** எனும் கருப்பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. என்பதனை, **“பிண நெகிழ் அலர் வேங்கை விரிந்த பூ வெறி கொள”** (கலி; பா-32; வ-5) என்ற வரி எடுத்துரைக்கின்றது.

**தொகுப்புரை**

வானம் பொய்த்து வறண்டு போகின்ற பாலை நிலத்திற்குத் தெய்வம் கொற்றவை ஆகும். பாலைத்திணையின் ஒழுக்கம் பிரிவாகும். அத்தகைய பாலைப் பாடல்களில் கருப்பொருள்களை அடிப்படையாக் கொண்டு பாலைநிலப் பகுதி, சீறூர், கார்கால வருகை, தலைவியின் அழகு நலம், போன்ற செய்திகளும் விளக்கப்படுகின்றன, வரலாற்றுச் செய்திகளில் பழையன், கிள்ளி வளவன், கட்டி, பண்ணி, நன்னன், பாண்டியன், புல்லி, மோரிய மன்னர், அ·தை, அஞ்சி, வாணன், பண்ணன், வழுதுணைத் தழும்பன் போன்ற மன்னர்களைப் பற்றியும்; காய்க்காடு, கங்கை, பொதினிமலை, துளுநாடு, கொற்கைப்பட்டினம், திருவேங்கடமலை, ஒடுங்காடு, குடநாடு, கருவூர், இடையாற்று மங்கலம், கொடுமுடி, கொல்லிமலை, வேங்கடமலை, உறையூர் போன்ற பகுதிகளும் விளக்கப்படுகின்றன.

மேலும் காலை மாலை இரவுப் பொழுதுகள், உவமை, தலைவியின் ஊர்கள், தலைவியின் வருத்தம், உடன்போக்குச் செய்திகள், கூற்றுகள், அன்புநிலை, தென்றல்காற்று, மழைக்காலம் போன்ற அனைத்துச் செய்திகளும் இதன் மூலம் விளக்கப்படுகின்றன.

## முடிவுரை

நம் பண்டையத் தமிழ் நிலம் ஐந்து வகையான பகுப்புகளாகப் பகுக்கப்பட்டது. அப்பகுப்பு முறையினை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொரு நிலத்திற்கும் முறையே முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்று வகையாகப் பகுக்கப்பட்டுள்ளது. இதில் 14 வகையான கருப்பொருள் எப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன என்பதையும், அவை எக்கருத்துகளை வெளிப்படுத்துகின்றன என்பதும் இவ்வாய்வேட்டில் ஆராயப் படுகின்றன.

முதற்கண் குறிஞ்சி நிலப் பாடல்களில் இடம் பெற்றுள்ள கருப்பொருள்களைக் கொண்டு தலைவனின் செயல், தினைப்புனம், தெய்வ வழிபாடு, தலைவனின் மலையின் சிறப்பு, திருமணம், தலைவியின் அழகு நலம், வள்ளைப்பாட்டு, தந்தையின் ஒப்புதல், உவமைகள், சுனை, இரவுப்பொழுது, தலைவியின் வருத்தம், தலைவனின் வீரம், பகற்குறி, காவலர் பற்றிய செய்திகள் இவ்வியலின் கண் ஆராயப்பட்டுள்ளன.

மேலும் சூரர மகளிர், வரலாற்றுச் செய்திகளையும், முன்பனிக்காலம், வெறியாடுகளம், நீர்த்துறை, தலைவியின் தந்தை, மாலைக்காலம், தலைவியின் ஊர், தோழி கூற்று, ஆற்றுவழி, சாட்சி, தலைவியின் செயல், மடலேறுதல், குறத்தியின் ஊர், அறுவடை நாள், ஊசல் அமைத்தல், வீரரின் மகள் குரவைக்கூத்து போன்ற செய்திகளும் இவ்வாய்வின் கண் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

கார்கால மாலையில் மலரும் முல்லை மலரின் ஒழுக்கம் கொண்ட முல்லை நிலத்தின் கண் தலைவன் கூற்று, முல்லை நிலப்பகுதி, பூவிற்பவள், கார்கால வருகை, தலைவியின் அழகு நலம், காட்டுப்பகுதி, மாலைப் பொழுது, ஒழுக்கச் செயல், உவமைகள், மழைப்பொலிவு, தலைவியின் ஊர், வரலாற்றுச் செய்திகள் போன்றவை இவ்வியலின் கண் ஆய்ந்து கண்டுபிடிக்கப்பட்ட செய்திகளாகும்.

மருதத் திணைக்கண் தலைவனின் ஊர், தலைவியின் அழகு நலம், உவமைகள், தலைவனின் சிறப்பு, மாலைக் காலம், பரத்தையின் ஊர், தலைவியின் ஊர், வரலாற்றுச் செய்திகள், பாணனின் செயல், பரத்தையர் தலைவன் தொடர்பு, நீரின் மாற்றம், தலைவியின் ஊர் போன்றவை மருதத்திணை நிலத்தின் கண் ஆராய்ந்து அறியப்பெற்றுள்ளன.

இருத்தல், இருத்தல் நிமித்தத்தின் ஒழுக்கத்தைத் தன்னகத்தே கொண்ட நெய்தல் நிலத்தின் வழி தலைவனின் தேர், தலைவனின் ஊர், பசலைநோய், மாலைப் பொழுது, தலைவி நீராடல், தலைவியின் செயல்கள், பரத்தை ஒழுக்கம், நீர்த்துறை, உவமைகள்,

தலைவியின் ஊர் போன்ற செய்திகள் இவ்வாய்வின் கண் ஆராயப்பட்டு வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

வானம் பொய்த்து வறண்டு போகின்ற பாலை நிலக்கருப்பொருள்களை அடிப்படையாகக் கொண்டு பாலைநிலப் பகுதி, சீறூர், கார்கால வருகை, தலைவியின் அழகுநலம், வரலாற்றுச் செய்திகள், காலை, மாலை, இரவுப் பொழுதுகள், உவமைகள், தலைவியின் ஊர், தலைவியின் வருத்தம், உடன்போக்குச் செய்திகள், அன்பு நிலை, தென்றல் காற்று, மழைக்காலம் போன்ற செய்திகள் இவ்வியலின் கண் ஆராய்ந்து வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

இவ்வாறு பதினான்கு வகையான கருப்பொருள்களை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு பின்புலச் செய்திகள் இவ்வாய்வு முடிவாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

**எதிர்கால ஆய்வு:**

1. சங்க இலக்கியம் காட்டும் விலங்குகளின் அன்பு நிலை.
2. சங்க இலக்கிய தெய்வங்களும், வழிபாட்டு முறைகளும்.
3. பாலை நில வர்ணனைகளும், ஒழுக்கங்களும்.

## துணைநூற்பட்டியல்


**முதன்மை ஆதாரங்கள்**

1. செயபால், இரா. (உ.ஆ) - அகநானூறு (மூ.உ), நியூசெஞ்சுரி புத்தக நிலையம், அம்பத்தூர், சென்னை- 600 058, நான்காம் பதிப்பு, அக்டோபர் 2011.

2. தட்சிணாமூர்த்தி, அ. (உ.ஆ) - ஐங்குறுநூறு (மூ.உ), நியூசெஞ்சுரி புத்தக நிலையம், அம்பத்தூர், சென்னை- 600 058, நான்காம் பதிப்பு, அக்டோபர் 2011.

3. நாகராசன், வி. (உ.ஆ) - குறுந்தொகை (மூ.உ), நியூசெஞ்சுரி புத்தக நிலையம், அம்பத்தூர், சென்னை- 600 058, நான்காம் பதிப்பு, அக்டோபர் 2011.

4. பாலசுப்பிரமணியன், கு.வெ. (உ.ஆ) - நற்றிணை (மூ.உ), நியூசெஞ்சுரி புத்தக நிலையம், அம்பத்தூர், சென்னை- 600 058, நான்காம் பதிப்பு, அக்டோபர் 2011.

5. விசுவநாதன், அ. (உ.ஆ) - கலித்தொகை (மூ.உ), நியூசெஞ்சுரி புத்தக நிலையம், அம்பத்தூர், சென்னை- 600 058, நான்காம் பதிப்பு, அக்டோபர் 2011.

**துணைமை ஆதாரங்கள்**

6. அகத்தியலிங்கம், ச. - தொல்காப்பிய உருவாக்கம், மெய்யப்பன் தமிழாய்வகம், 53, புதுத்தெரு, சிதம்பரம் - 608 001, முதற்பதிப்பு, டிசம்பர் 2001.

7. அப்துல் ரகுமான், - மின்மினிகளால் ஒரு கடிதம்,
நேஷனல் வெளியீடு, சென்னை – 600 028,
முதற்பதிப்பு, 2004.

8. அருணாசலம் பிள்ளை, மு. - தொல்காப்பியம் பொருளதிகாரம்
அகத்திணையியல் உரைவளம்,
தமிழ்த்துறை வெளியீடு,
மதுரைப்பல்கலைக் கழகம்,
பல்கலை நகர், மதுரை – 21,
முதற்பதிப்பு, மார்ச் 1975.

9. அறவாணன், க.ப. - அற்றை நாட் காதலும் வீரமும்,
தமிழ் கூட்டம், சென்னை – 600 098,
முதற்பதிப்பு, 1978.

10. அனந்தகுமார், சா. - தாவரங்கள், விலங்குகள், பறவைகளைக்
குறிக்கும் பல்வேறு பெயர்கள்,
அறிவுப்பதிப்பகம், 142, ஜானி ஜான்கான் ரோடு,
இராயப்பேட்டை, சென்னை – 600 014,
முதற்பதிப்பு, 2011.

11. ஆனந்தகுமார், பா. - இலக்கியமும் பண்பாட்டு மரபுகளும்,
நியூசெஞ்சுரி புத்தக நிலையம்,
அம்பத்தூர், சென்னை - 600 058,
முதற்பதிப்பு, 2007.

12. இலக்குமி குமாரன். - ஞானத் திரவியம்,
சிந்து பதிப்பகம், சென்னை – 600 058,
முதற்பதிப்பு. 1994.

13. இராகவையங்கார், மு. - தொல்காப்பிய பொருளதிகார ஆராய்ச்சி,
தமிழ்ச் சங்கத்துப் பிரசுரம்,
மதுரை – 625 001,
முதற்பதிப்பு, 1922.

14. இராமசாமி, பு. - சங்க இலக்கியத்தில் மலர்கள்,
மணிவாசகர் பதிப்பகம், 31,சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை – 600 108,
முதற்பதிப்பு, 2004.

15. இளம்பரிதி, மொ. - குறியியல் ஒரு சங்கப்பார்வை,
காவ்யா பதிப்பகம், சென்னை – 600 019,
முதற்பதிப்பு, 2006.

16. இளம்பூரணார், (உரை). - தொல்காப்பியம் பொருளதிகாரம்,
திருநெல்வேலித் தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 600 020,
முதற்பதிப்பு, 1975.

17. ஐயப்பப் பணிக்கர். - ஹார்டியின் வெஸ்ஸெக்ஸ் என்ற இடமும்
திணைக் கவிதையியலும், திராவிட மலர்,
திராவிடப் பல்கலைக் கழகம், குப்பம்,
முதற்பதிப்பு, ஜனவரி 2007.

18. கணேசன். ஆ. - இலக்கியத் தென்றல்,
நியூசெஞ்சுரி புத்தக நிலையம்,
அம்பத்தூர், சென்னை- 600 058,
முதற்பதிப்பு, 2001.

19. கதிர் மகாதேவன், - பெண்ணியம்,
இரா.மோகன். மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்,
தமிழியற் பள்ளி வெளியீடு, மதுரை – 625 001,
முதற்பதிப்பு, 1994.

20. கந்தையா, ந.சி. - கலித்தொகை பரிபாடல்,
அமிழ்தம் பதிப்பகம்,
சென்னை – 600 098,
முதற்பதிப்பு, 2008.

21. கந்தையா பிள்ளை, ந.சி. - தமிழர் சரித்திரம்,
ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 600 098,
முதற்பதிப்பு, 1950.

22. கிருஷ்ணராஜா. சோ. - அழகியல்,
சவுத் ஏசியன் புக்ஸ்,
முதற்பதிப்பு, 1996.

23. குணா - தமிழர் மெய்யியல்,
பொதுமை வெளியீடு,
சென்னை – 600 020,
முதற்பதிப்பு, 1980.

24. குழந்தை, புலவர் - தொல்காப்பியர் காலத் தமிழர்,
பூம்புகார் பதிப்பகம், 127,பிரகாசம் சாலை,
சென்னை – 600 108,
முதற்பதிப்பு, 2007.

25. கோவிந்தசாமி, மு. - தமிழர் இன வரலாறு,
வாசுகி பதிப்பகம், 218, மாரியப்பா நகர்,
சிதம்பரம் - 638 001,
முதற்பதிப்பு, 1966.

26. கோவிந்தன், கா. புலவர் - மருத நில மங்கை,
சஞ்சீவியார் பதிப்பகம்,
திருவல்லிக்கேணி, சென்னை – 600 005,
முதற்பதிப்பு, 1987.

27. ” - இலக்கிய வளர்ச்சி,
தமிழ்த்தாய் பதிப்பகம், 8, மத்துவர் தெரு,
சிட்லப்பாக்கம், சென்னை – 600 064,
முதற்பதிப்பு, 2000.

28. சரளா இராசகோபாலன். - இலக்கியச் சிந்தனைகள்,
அன்புப் பதிப்பகம்,
63,அ.அரங்காச்சாரி சாலை, சென்னை – 600 018,
முதற்பதிப்பு, 1996.

29. ” - உயர்த்தும் இலக்கியம்,
அன்பு பதிப்பகம், சென்னை – 600 018,
முதற்பதிப்பு, 1996.

30. சாமி, பி.எல். - சங்க இலக்கியத்தில் செடி, கொடி விளக்கம்,
கழக வெளியீடு, சென்னை – 600 098,
முதற்பதிப்பு, 1967.

31. சாமி, பி.எல். - இலக்கியத்தில் அறிவியல்,
சேகர் பதிப்பகம், சென்னை – 600 108,
முதற்பதிப்பு, 1981.

32. சாமி சிதம்பரனார். - எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்,
அறிவுப் பதிப்பகம், சென்னை – 600 020,
முதற்பதிப்பு, 2003.

33. ” - தொல்காப்பியத் தமிழர்,
மாசறு, திருவல்லிக்கேணி, சென்னை – 600 005,
முதற்பதிப்பு, 2008.

34. சாமிநாதய்யர், உ.வே. (ப.ஆ) - குறுந்தொகை மூலமும் உரையும்,
கழக வெளியீடு, சென்னை – 600 098,
முதற்பதிப்பு, 1967.

35. சிவலிங்கனார், ஆ. (ப.ஆ) - தொல்காப்பிய உரைவளம் - அகத்திணையியல்
உலகத்தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை – 600 109,
முதற்பதிப்பு, 1991.

36. ” - தமிழ் இலக்கண உணர்வுகள்,
கபிலன் பதிப்பகம்,
பாரதிநகர், புதுச்சேரி,
முதற்பதிப்பு, 2005.

37. சீநிவாசன், கு. - சங்க இலக்கியத் தாவரங்கள்,
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர் – 613 001,
முதற்பதிப்பு, 1987.

38. சுப்புரெட்டியார், ந. - அகத்திணைக் கொள்கைகள்,
பாரிநிலையம், சென்னை – 600 108,
முதற்பதிப்பு, 1987.

39. சுப்பிரமணியம், ச.வே. - தமிழகராதி,
மெய்யப்பன் பதிப்பகம்,
சென்னை – 600 019,
முதற்பதிப்பு, 2006.

40. சுப்பிரமணியம், ந. - சங்க கால வாழ்வியல்,
நியூசெஞ்சுரி புத்தக நிலையம்,
அம்பத்தூர், சென்னை - 600 098,
முதற்பதிப்பு, 1986.

41. சுப்பிரமணியன், ச.வே. - தமிழர் வாழ்வியல் தாவரம்,
கவின் கலை அச்சகம்,
கந்தசாமி நகர், பாலவாக்கம், சென்னை – 600 041,
முதற்பதிப்பு, 1993.

42. ” - தமிழர் வாழ்வியல் தாவரம்,
உலகத் தமிழ்க் கல்வி இயக்ககம்,
தமிழூர், அடைக்கலப் பட்டணம் - 628 217,
முதற்பதிப்பு, 1993.

43. சுவாமிநாதன், அ. - தமிழக வரலாறும் பண்பாடும்,
தீபா பதிப்பகம்,
சென்னை – 600 108,
முதற்பதிப்பு, 1999.

44. சூரியகாந்தன். - சிவப்பு நிலா,
அகரம், சிவகங்கை,
முதற்பதிப்பு, 1978.

45. செகதீசன்,இரா. - தொல்காப்பியப் பொருளதிகார வழி
அகநானூறு – ஓர் ஆய்வு,
முருகு பதிப்பகம்,
முதற்பதிப்பு, 2002.

46. செல்வராசு, நா, சிலம்பு. - சங்க இலக்கிய மறுவாசிப்பு,
சமூகவியல் மானுடவியல் ஆய்வுகள்,
காவ்யா, இரண்டாம் குறுக்குத்தெரு,
கோடம்பாக்கம், சென்னை – 600 024,
முதற்பதிப்பு, 2005.

47. செல்வராசு, அ. - முல்லை நிலமும் எல்லைப் போரும்,
எழில், த.பாதர்பேட்டை அஞ்சல்,
துறையூர், திருச்சி – 621 012,
முதற்பதிப்பு, 2004.

48. ஞானி - படைப்பியல் நோக்கில் தமிழ் இலக்கியம்,
வைகறை வெளியீடு, கோவை – 641 046,
முதற்பதிப்பு, 1994.

49. ” - மார்க்சியமும் தமிழ் இலக்கியமும் பரிமாணமும்,
வைகறை வெளியீடு, கோவை – 641 046,
முதற்பதிப்பு, 1988.

50. தங்கராசு, மு. - சங்க இலக்கியத்தில் நிலவியல்,
தமிழ்மலர், 12, ஐ.சி.எல் குடியிருப்பு,
நூம்பல், சென்னை – 600 077,
முதற்பதிப்பு, 2000.

51. தட்சிணாமூர்த்தி, அ. - சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்,
மங்கையர்க்கரசி பதிப்பகம்,
தஞ்சாவூர் – 1,
முதற்பதிப்பு, 2001.

52. ” - தமிழர் நாகரிகமும் பண்பாடும்,
யாழ் வெளியீடு, சென்னை,
முதற்பதிப்பு, 1994.

53. தமிழ்ஒளி, கவிஞர். - வரலாற்றில் தமிழினம்,
பாபு பதிப்பகம், குண்டூர் பர்மா காலனி,
ஏர்போர்ட் போஸ்ட், திருச்சி – 620 007,
முதற்பதிப்பு, 2006.

54. தமிழண்ணல். - சங்க இலக்கிய ஒப்பீடு,
மீனாட்சி புத்தக நிலையம், மயூரா வளாகம்,
48,தானப்ப முதலிதெரு,
மதுரை – 625 001,
முதற்பதிப்பு, டிசம்பர் 2003.

55. தமிழறிஞர் சாமி சிதம்பரனார். - தொல்காப்பியத் தமிழர்,
மாசறு, திருவல்லிக் கேணி,
சென்னை,
முதற்பதிப்பு, நவம்பர் 2008.

56. தனிநாயக அடிகள். - தமிழ்த்தூது (கட்டுரைக் கொத்து).
பாரிநிலையம்,
சென்னை – 600 108,
முதற்பதிப்பு, 1962.

57. தாணம்மாள், இல. - சங்க இலக்கியத்தில் மலர்கள்,
வானதி பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1981.

58. துரை அரங்கசாமி, மொ.அ. - தொல்காப்பிய நெறி,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை,
முதற்பதிப்பு – 1963.

59. தேவதேவன். - பூமியை உதறி எழுந்த மேகங்கள்,
லயம் வெளியீடு,
நாலூர்,
முதற்பதிப்பு, 1990.

60. தேவநேயபாவாணர். - தமிழர் வரலாறு,
தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1991.

61. நச்சினார்க்கினியர், (உரை). - தொல்காப்பியம் பொருளதிகாரம்,
கழக வெளியீடு, சென்னை,
மறுபதிப்பு, 1975.

62. நமச்சிவாயம், சே. - தமிழர் உணவு,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.ஐ.டி, வளாகம், தரமணி,
சென்னை – 600 113,
முதற்பதிப்பு, 2003.

63. நாகராசன், வி. (உ.ஆ). - பத்துப்பாட்டு, தொகுதி2 (மூ.உ),
நியூசெஞ்சுரி புத்தக நிலையம்,
அம்பத்தூர், சென்னை- 600 098,
நான்காம் பதிப்பு, அக்டோபர் 2011.

64. நாராயணசாமி ஐயர், அ. (உ.ஆ) - நற்றிணை நானூறு,
சைவ சித்தாந்தநூற் பதிப்புக்கழகம்,
சென்னை,
நான்காம்பதிப்பு, 1967.

65. நாற்கவிராச நம்பி. - அகப்பொருள் விளக்கம்,
கழக வெளியீடு, சென்னை,
முதற்பதிப்பு, 1966.

66. நெடுஞ்செழியன், க. - சங்க இலக்கியக் கோட்பாடுகளும் சமய வடிவங்களும்,
மனிதம் பதிப்பகம், 54,இராசாராம் சாலை,
கலைஞர் கருணாநிதி நகர், திருச்சி – 21,
முதற்பதிப்பு, டிசம்பர் 2007.

67. பரிமளா, ச. - பழந்தமிழ் நூல்களில் நீர்வாழ் உயிரினங்கள்,
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்
முதற்பதிப்பு, 1994.

68. பாரதிதாசன், - குறிஞ்சித்திட்டு,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை – 600 024,
முதற்பதிப்பு, 1994.

69. பாலசுப்ரமணியம், கு.மா. - பண்டைத் தமிழ் சமுதாய வளர்ச்சி,
தமிழ்ப் புத்தகாலயம்,
திருவல்லிக்கேணி, சென்னை – 600 005,
முதற்பதிப்பு, 1987.

70. பாலசுப்பிரமணியம். கு.மா. - குறுந்தொகை – தமிழ்க்காதல்,
பாரதி புத்தகாலயம், சென்னை – 600 008,
முதற்பதிப்பு, 2007.

71. பானூநூர் மைதீன். - பழந்தமிழ் அகப்பாடல்களில் நிலமும் பொழுதும்,
பர்வீன் பதிப்பகம், திருச்சி,
முதற்பதிப்பு, 1993.

72. பிள்ளை, கே.கே. - தமிழக வரலாறும் - மக்களும் பண்பாடும்,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை – 600 020,
முதற்பதிப்பு, 1972.

73. பேராசிரியர் (உரை). - தொல்காப்பியம் பொருளதிகாரம்,
கழக வெளியீடு, சென்னை – 600 098,
முதற்பதிப்பு, 1951.

74. மணிவேல், மு. - காதல் புனைவுகள்,
முத்துநாயகி பதிப்பகம், மதுரை – 625 019,
முதற்பதிப்பு, 1997.

75. மாணிக்கவாசகன், ஞா. (உ.ஆ) - சீவக சிந்தாமணி,
உமா பதிப்பகம்,
சென்னை – 600 098,
முதற்பதிப்பு, 2007.

76. மாணிக்கம், வ.சுப. - சங்கநெறி,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை – 600 098,
முதற்பதிப்பு, 1989.

77. மாணிக்கனார், வ.சுப. - தமிழ்க்காதல்,
ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்,
சென்னை – 600 108,
முதற்பதிப்பு, 2009.

78. மாதையன், பெ. - பெண்டிர் - காதல் - கற்பு,
8/37 பி.ஒய்.நகர்,
அனன்யா, குழந்தை இயேசு கோவில் அருகில்,
புதுக்கோட்டை சாலை, தஞ்சாவூர் – 613 005,
முதற்பதிப்பு, நவம்பர் 2006.

79. முத்துக் கண்ணப்பன், தி. - சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம்,
அதிபத்தர் பதிப்பகம்,
அருணாசலபுரம், சென்னை – 600 020,
முதற்பதிப்பு, ஆகஸ்ட் 1978.

80. முத்தையா,ஆ. - பரணரின் வரலாற்று இலக்கியங்கள்,
அன்றில் பதிப்பகம்,
காந்தி நகர், மதுரை – 625 020,
முதற்பதிப்பு, ஏப்ரல் - 2001.

81. மொழி ஞாயிறு, ஞா. தேவநேயப் பாவாணர் - பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும், கீழையியல் ஆய்வு நிறுவனக் கல்வி அறக்கட்டளை சார்ந்த தமிழ் மண் பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை – 600 108, முதற்பதிப்பு, 1966.

82. மோகன், இரா. (உ.ஆ). - பத்துப்பாட்டு முதற்தொகுதி (மூ.உ), நியூசெஞ்சுரி புத்தக நிலையம், அம்பத்தூர், சென்னை- 600 058, நான்காம் பதிப்பு, அக்டோபர் 2011.

83. ” - இலக்கியப் பரல்கள், நியூசெஞ்சுரி புத்தக நிலையம், அம்பத்தூர், சென்னை- 600 058, முதற்பதிப்பு, 2008.

84. மௌனகுரு, சி. - பண்டைத் தமிழர் வரலாறும் இலக்கியமும், அலைகள் வெளியீட்டகம், சென்னை – 600 024, முதற்பதிப்பு, 2006.

85. வடிவேல், ப. - உரை மலர்கள், தமிழ்த்துறை, ந.க.ம கல்லூரி, பொள்ளாச்சி – 642 001, முதற்பதிப்பு, 2014.

86. வரதராசனார், மு. - பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரி நிலையம், சென்னை – 600 108, முதற்பதிப்பு, 1964.

87. ” - இலக்கியத் திறன்,
பாரி நிலையம், 164,பிராட்வே,
சென்னை – 600 108,
முதற்பதிப்பு, 2000.

88. வரதராசனார்,மு. - இலக்கிய மரபு,
பாரி நிலையம், 184,பிராட்வே,
சென்னை – 600 108,
முதற்பதிப்பு, 2000.

89. வாசுதேவன், கா. - பன்முக நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,
தேவன் பதிப்பகம், திருச்சி,
முதற்பதிப்பு – 2006.

90. வித்யா ஷங்கர். - பனையோசை,
கணபதி கல்விக் கழகம், சென்னை – 600 020,
முதற்பதிப்பு – 1994.

91. விஜயராணி, இரா. - புத்திலக்கிய நோக்கும் போக்கும்,
கண்மணி பிரீத்தா பதிப்பகம், திருச்சி,
முதற்பதிப்பு – 2010.

92. வெள்ளை வாரணன், க. - தொல்காப்பியம் நுதலிய பொருள் வரலாறு,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
சிதம்பரம்,
பதிப்பு, 1978.

93. வேங்கடசாமி நாட்டார், ந.மு. - அகநானூறு, மணிமிடைப் பவளம்,
வேங்கடாசலம்பிள்ளை, (உ.ஆ) கழக வெளியீடு,
சென்னை,
மூன்றாம்பதிப்பு, 1955.

94. ” - சங்க காலத் தமிழ் மக்கள்,
இந்தியப் பண்பாட்டு ஆய்வு மையம்,
மாங்காடு, சென்னை
முதற்பதிப்பு, 2009.

95. வேதகிரி முதலியார், (உ.ஆ). - நாலடியார்,
இரத்தின நாயகர் சன்ஸ்,
சென்னை,
முதற்பதிப்பு, 1928.

96. ஜெய்சங்கர், இரா. - புலவர் பெயர் தெரியாத நற்றிணைப் பாடல்களில் ஆளுமைத் திறம்,
ஆசிரியர் பதிப்பு, பெரம்பலூர் மாவட்டம்,
முதற்பதிப்பு, 2004.

97. ஜெயராமன், நா. - ஈன்ற தாய்,
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை
முதற்பதிப்பு, 1988.

98. The Tamil Concept of Love,
The South India Saiva Siddanta,
Works Publishing Society,
Turunelveley, Limited, Madras –
First Edition – 1962.

**ஆய்வேடுகள்**

99. அரங்கநாதன், சு. - சங்ககால மக்களின் நிலம் சார் வாழ்வியல் அடையாளங்கள் - ஒப்பீடு, முனைவர் பட்ட ஆய்வேடு, பாரதியார் பல்கலைக்கழகம், கோயமுத்தூர் – 641 046, அகஸ்ட் 2007.

100. அறிவுமொழி, ஆ. - சங்க அக இலக்கியத்தில் நிலம் சார் குறியீடுகள், முனைவர் பட்ட ஆய்வேடு, பாரதியார் பல்கலைக்கழகம், கோயமுத்தூர் – 641 046, அக்டோபர் - 2009.

101. இரத்தினமூர்த்தி, வெ. - தொல்காப்பிய நோக்கில் புதுக்கவிதை, முனைவர் பட்ட ஆய்வேடு, கோபி கலைக்கல்லூரி, கோபிசெட்டிபாளையம், பெரியார் மாவட்டம் - 638 453, முதற்பதிப்பு – மே 1997.

102. கவிதாதேவி, மு. - நற்றிணை காட்டும் சூழல்கள், முனைவர் பட்ட ஆய்வேடு, ஸ்ரீ வாசவி கல்லூரி, ஈரோடு – 638 316, சூலை – 2009.

103. சங்கர், இரா. - சங்க கால மக்களின் வாழ்வியலும் தற்கால நிலையும், முனைவர் பட்ட ஆய்வேடு, பாரதியார் பல்கலைக்கழகம், கோயமுத்தூர் – 641 046, அக்டோபர் - 2009.

104. சுகந்தி, மு. - குறுந்தொகையில் உளவியல்,
ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு,
ந.க.ம கல்லூரி, பொள்ளச்சி – 642 001,
2007.

105. சுபாஷிணி, சு. - குறுந்தொகையில் உவமைகளும் புலப்பாட்டுத் திறமும்,
ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு,
ந.க.ம கல்லூரி, பொள்ளாச்சி – 642 001,
செப்டம்பர் – 2011.

106. திருநாவுக்கரசு,து - உள்ளுறை, இறைச்சி – படிமவியல் நோக்கு,
முனைவர் பட்ட ஆய்வேடு,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயமுத்தூர் – 641 046,
அக்டோபர் - 2009.

107. தீபா, க. - சங்க அக இலக்கியத் திணைப் பொருளமைவு,
முனைவர் பட்ட ஆய்வேடு,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயமுத்தூர் – 641 046,
செப்டம்பர் – 2009.

108. பகவதி அம்மாள், ச.- தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
பூ.ச.கோ கலை அறிவியல் கல்லூரி,
கோயமுத்தூர் – 641 014,
பிப்ரவரி – 1992.

109. ரெங்கராஜ், சு. - தமிழ் இலக்கியத்தில் காலந்தோறும் அகப்பொருள் மரபு மாற்றம்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
அரசு கலைக் கல்லூரி, உடுமலைப்பேட்டை – 642 126,
ஜனவரி – 2010.

110. ஜவஹர், க. - திணைக்கோட்பாடும் தமிழ் இலக்கிய மரபும்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயமுத்தூர் – 641 046,
செப்டம்பர் – 2008.

**இதழ்கள்**

111. ஜெயபாலன், வ.ஐ.ச. பிரம்மராஜன் - சுபமங்களா மாத இதழ்,
சென்னை – 600 018,
சனவரி 1994.

112. பார்த்திபன், ரா. - இருப்பாய் தமிழா நெருப்பாய்,
குமுதம், வாரமலர், நவம்பர் – 2011.

113. ஜார்ஜ், பி. - கவிதைச் சோலை,
தினமலர், வாரமலர், நவம்பர் – 2008.

# சுருக்கக்குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| ஐ.நூறு. | - | ஐங்குறுநூறு |
| க.ஆ. | - | கட்டுரையாசிரியர் |
| கலி. | - | கலித்தொகை |
| குறுந் | - | குறுந்தொகை |
| தெ.ஆ. | - | தெளிவுரை ஆசிரியர் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பா | - | பாடல் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மூ.உ. | - | மூலமும் உரையும் |
| மேற். | - | மேற்கோள் |
| மொ.ஆ. | - | மொழிப்பெயர்ப்பு ஆசிரியர் |
| வ | - | வரி |
| வரி | - | வரிகள் |